𑌸 𑌪𑌰𑍍𑌯𑌗𑌾𑌚𑍍𑌛𑍁𑌕𑍍𑌰𑌮𑌕𑌾𑌯𑌮𑌵𑍍𑌰𑌣𑌮𑌸𑍍𑌨𑌾𑌵𑌿𑌰𑌂 𑌶𑍁𑌦𑍍𑌧𑌮𑌪𑌾𑌪𑌵𑌿𑌦𑍍𑌧𑌮𑍍 । 𑌕𑌵𑌿𑌰𑍍𑌮𑌨𑍀𑌷𑍀 𑌪𑌰𑌿𑌭𑍂𑌃 𑌸𑍍𑌵𑌯𑌂𑌭𑍂𑌰𑍍𑌯𑌾𑌥𑌾𑌤𑌥𑍍𑌯𑌤𑍋𑌽𑌰𑍍𑌥𑌾𑌨𑍍𑌵𑍍𑌯𑌦𑌧𑌾𑌚𑍍𑌛𑌾𑌶𑍍𑌵𑌤𑍀𑌭𑍍𑌯𑌃 𑌸𑌮𑌾𑌭𑍍𑌯𑌃 ॥ ௮ ॥

स पर्यगात् । सः=यथोक्त आत्मा, पर्यगात् परि=समन्तात्, अगात्=गतवान्, आकाशवद्व्यापीत्यर्थः । शुक्रम्=शुद्धम्, ज्योतिष्मद्दीप्तिमानित्यर्थः । अकायम्=अशरीरः, लिङ्गशरीरवर्जित इत्यर्थः । अव्रणम्=अक्षतम् । अस्नाविरम्=स्नावाः शिरा यस्मिन्न विद्यन्त इत्यस्नाविरम् । अव्रण-

---

லும் நிறைவுபெற்றதாகவும் **शुक्रम्** (𑌶𑍁𑌕𑍍𑌰𑌮𑍍)=சுத்தமாகவும் (அதாவது:=பிரகாசிப்பதாகவும்) **अकायम्** (𑌅𑌕𑌾𑌯𑌮𑍍)=லிங்க சரீரமற்றதாகவும், **अव्रणम्** (𑌅𑌵𑍍𑌰𑌣𑌮𑍍)=காயமற்றதாகவும், **अस्नाविरम्** (𑌅𑌸𑍍𑌨𑌾𑌵𑌿𑌰𑌮𑍍)=நரம்புகளற்றதாகவும் அதாவது: ஸ்தூல சரீரமற்றதாகவும் என்றும், **शुद्धम्** (𑌶𑍁𑌦𑍍𑌧𑌮𑍍)=நிர்மலமாகவும் அதாவது: காரண சரீரமற்றதாகவும், **अपापविद्धम्** (𑌅𑌪𑌾𑌪𑌵𑌿𑌦𑍍𑌧𑌮𑍍)=தர்மாதர்மாதி பாபஸம்பந்தமற்றதாகவும், **कविः** (𑌕𑌵𑌿𑌃)=சென்றது முதலியவற்றை யறிந்ததாகவும் அதாவது: ஸர்வதர்சியாகவும், **मनीषी** (𑌮𑌨𑍀𑌷𑍀)=மனோநியந்தாவாகவும், **परिभूः** (𑌪𑌰𑌿𑌭𑍂𑌃)=எல்லாவற்றுக்கும் மேலாக இருப்பதாகவும், **स्वयंभूः** (𑌸𑍍𑌵𑌯𑌂𑌭𑍂𑌃)=எவற்றுக்கு மேலாக விருக்கிறதோ எது மேலிலிருக்கிறதோ அவையாவுமாகத்தானே ஆவதாகவும், இருக்கிறது ஆகவே அந்த நித்ய முக்த ஈஶ்வரன் **याथातथ्यतः** (𑌯𑌾𑌥𑌾𑌤𑌥𑍍𑌯𑌤𑌃)=அவ்வவற்றின் நிலைக்குத்தக்கபடி **अर्थान्** (𑌅𑌰𑍍𑌥𑌾𑌨𑍍)=பதார்த்தங்களை ஆகாசாதிப் பொருள்களை **शाश्वतीभ्यः समाभ्यः** (𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑍀𑌭𑍍𑌯𑌃 𑌸𑌮𑌾𑌭𑍍𑌯𑌃)=நித்யர்களான ஸம்வத்ஸரர்களான ப்ரஜாபதிகளையும் பொருட்டு **व्यदधात्** (𑌵𑍍𑌯𑌦𑌧𑌾𑌤𑍍)=பிரித்துக் கொடுத்தருளினார்.

பாஷ்யம்.—**स पर्यगात्** (𑌸 𑌪𑌰𑍍𑌯𑌗𑌾𑌤𑍍) அந்த முன் சொல்லப்பட்ட ஆத்மா நாலாபக்கத்திலும் கதியையுடையது. ஆகாசமானது போல எங்கும் நிறைந்துள்ளது என்பது அதன் பொருள். சுக்ரம்—சுத்தமானது, அதாவது: ஜ்யோதிஸ்ஸுள்ளது ஒளியுள்ளது என்று பொருள். அகாயம் சரீரமற்றது லிங்கசரீரமற்றது என்பது பொருள். **अव्रणम्** (𑌅𑌵𑍍𑌰𑌣𑌮𑍍) புண்ணற்றது, **अस्नाविरम्** (𑌅𑌸𑍍𑌨𑌾

मस्नाविरमित्याभ्यां स्थूलशरीरप्रतिषेधः। शुद्धम्=निर्मलमविद्यामलरहितमिति कारणशरीरप्रतिषेधः। अपापविद्धम्=धर्माधर्मादिपापवर्जितम्। शुक्रमित्यादीनि वचांसि पुल्लिङ्गत्वेन परिणेयानि। स पर्यगादित्युपक्रम्य कविर्मनीषीत्यादिना पुल्लिङ्गत्वेनोपसंहारात्। कविः=क्रान्तदर्शी सर्वदृक्; "नान्योऽतोऽस्ति द्रष्टा" इत्यादिश्रुतेः। मनीषी=मनस ईषिता सर्वज्ञ ईश्वर इत्यर्थः। परिभूः=सर्वेषां पर्युपरि भवतीति परिभूः। स्वयंभूः=स्वयमेव भवतीति येषामुपरि भवति यश्चोपरि भवति स सर्वः स्वयमेव भवतीति स्वयंभूः। स नित्यमुक्त ईश्वरः याथातथ्यतः=सर्वज्ञत्वाद्यथा तथाभावो याथार्थ्यं तस्माद्यथाभूतकर्मफलसाधनतो, अर्थान्=

---

விர) நரப்புகள் எதில் கிடையாதோ அது அஸ்நாவிரம் என்னப்படும். அவ்ரணம் அஸ்நாவிரம் என்ற இவ்விரண்டினாலும் ஸ்தூல சரீரமானது மறுக்கப்படுகிறது. शुद्धम् (ஶுத்தம்) நிர்மலமானது அதாவது: அவித்யையாகிற மலமற்றது என்றதனால் காரணசரீரமானது மறுக்கப்படுகிறது. अपाप विद्धम् (அபாபவித்தம்) தர்மாதர்மம் முதலியபாபமற்றது. शुक्रम् (ஶுக்ரம்) என்றதாதி வசனங்களை புல்லிங்கங்களாக (அதாவது:—शुक्रः (ஶுக்ர:) என்றதாதியாக) மாற்றிக்கொள்ளவேண்டும். "ஸபர்யகாத்" என்று தொடங்கி "கவிர்மநீஷீ" என்றதாதியினால் புல்லிங்கங்களாக முடிவில் கூறியிருப்பதே அதன் காரணமாகும். कविः (கவி:) க்ராந்ததர்சீ அதாவது: ஸர்வதிருக் என்றும். "த்ரஷ்டா என்பவன் இவரைக்காட்டிலும் வேறில்லை" என்றதாதி ஶ்ருதியிருப்பதாலென்க. मनीषी (மநீஷீ) மனதுக்கு ப்ரேரகன், அதாவது: ஸர்வஜ்ஞ ஈஶ்வரன் என்று பொருள். परिभूः (பரிபூ:) எல்லாவற்றுக்கும் உபரி=மேலாக இருப்பதுபற்றி பரிபூ: எனப்படுகிறது. स्वयंभूः (ஸ்வயம்பூ:) ஸ்வயமாகவே ஆவிர்ப்பவிப்பது அதாவது:— எவற்றுக்கு மேலிருக்கிறதோ, எது மேலிருக்கிறதோ அவையாவும் தானாகவே இருப்பதுபற்றி ஸ்வயம்பூ: எனப்படுகிறது. அந்த நித்யமுக்தரான ஈஶ்வரன் याथातथ्यतः (யாதாதத்யத:) ஸர்வக்ஞனாக இருப்பதுபற்றி உள்ளபடி அமைந்துள்ள கர்மபல ஸாதனத்தைக் கொண்டு அர்த்தங்களை=செய்

कर्तव्यपदार्थान्, व्यदधात्=विहितवान्, यथानुरूपं व्यभजदित्यर्थः। शाश्वतीभ्यो नित्याभ्यः, समाभ्यः=संवत्सराख्येभ्यः प्रजापतिभ्य इत्यर्थः॥८॥

अत्राद्येन मन्त्रेण सर्वैषणापरित्यागेन ज्ञाननिष्ठोक्ता प्रथमो वेदार्थः "ईशावास्यमिदं सर्वम्, मागृधः कस्यस्विद्धनम्" इति। अज्ञानां जिजीविषूणां ज्ञाननिष्ठासंभवे "कुर्वन्नेवेह कर्माणि जिजीविषेत्" इति कर्मनिष्ठोक्ता द्वितीयो वेदार्थः। अनयोश्च निष्ठयोर्विभागो मन्त्रप्रदर्शितयोर्बृहदारण्यकेऽपि प्रदर्शितः—"सोऽकामयत जाया मे स्यात्" इत्यादिना अज्ञस्य कामिनः कर्माणीति। "मन एवास्यात्मा वाग्जाया" इत्यादि वचना-

---

யவேண்டிய பதார்த்தங்களை செய்தார். அதாவது: அவற்றின் ஸ்வரூபத்துக்கேற்றவாறு பிரித்தார் என்பது பொருள். நித்யர்களான ஸம்வத்ஸரர்களென்ற ப்ரஜாபதிகளுக்குக் கொடுத்தார் என்று பொருள். (8) (எ—று)

அவதாரிகா பாஷ்யம் —இந்த உபநிஷத்தின் ஆதியிலுள்ள மந்திரத்தினால் ஸர்வ ஏஷணாபரித்யாகத்தை முன்னிட்டு முக்கிய வேதார்த்தமான க்ஞானநிஷ்டையானது "இவையாவும் ஈச்வராத்மபாவனையினால் போக்கத்தக்கது. ஆசையை அறவே ஒழிப்பாயாக நீ ஆசைப்படக்கூடியபொருள் ஆத்மாவைவிட எங்கிருக்கிறது" என்றதாலுபதேசிக்கப்பட்டது. ஆத்மக்ஞானமில்லாதவர்களும் ஜீவித்திருக்க விருப்பமுள்ளவர்களுமானவர்க்கு க்ஞானநிஷ்டை ஸம்பவிக்க இடமில்லாமற்போகவே "இவ்வுலகில் கர்மங்களைச் செய்து கொண்டே ஜீவித்திருக்கவிரும்புவாயாக" என்றதால் கௌணமான வேதார்த்தமான கர்மநிஷ்டையானது சொல்லப்பட்டது. இரண்டு மந்திரங்களாலும் காண்பிக்கப்பட்ட இவ்விரு நிஷ்டைகளுடையவும் விபாகமானது (பிரிவானது) ப்ருஹதாரண்யகத்திலும் காட்டப்பட்டிருக்கிறது. அதாவது:—"அவன் (ப்ரம்ஹசாரியான ஆத்மா) எனக்கு மனையாளுண்டாக வேண்டும் என ஆசைப்பட்டான்' என்றதாதியால் ஆத்மக்ஞானமற்ற காமனையுள்ளவனுக்கு கர்மங்கள் என்றேற்படுகிறது. "மனமே இவனுக்கு (முற்கூறியபடி காமனையுள்ளவனுக்கு) ஆத்மாவாகவும், வாக்கானது ஜாயை=மனையாள் ஆக

दृशत्वं कामित्वं च कर्मनिष्ठस्य निश्चितमवगम्यते। तथाच तत्फलं सप्तान्न- सर्गस्तेष्वात्मभावेनानात्मस्वरूपावस्थानम्। जायाद्येषणात्रयसन्न्यासेन चा- त्मविदां कर्मनिष्ठाप्रातिकूल्येनात्मस्वरूपनिष्ठैव दर्शिता "किं प्रजया करिष्यामो येषां नोऽयमात्माऽयं लोकः" इत्यादिना। येतु ज्ञाननिष्ठाः सं- न्यासिनस्तेभ्यः "असुर्या नाम ते" इत्यादिना अविद्वन्निन्दाद्वारेणात्मनो

வும் ஆகும்" என்றதாதி வசனமிருப்பதாலென்க. கர்ம நிஷ்டை யுள்ளவனுக்கு ஆத்மக்ஞானமற்றிருத்தலும் காமனையுள்ளவனையிருத் தலும் நிஶ்சிதமாக அறியக்கிடக்கிறது. ஆகவே அத்தகைய கர்ம நிஷ்டையின் பலன் *ஸப்தான்ன ஸர்க்கமாகும். அவற்றில் ஆத்ம புத்தி (ஆத்மீய புத்தி) செய்வதால் அனாத்ம ஸ்வரூபத்துடனிருத்த லேற்படுகிறது. ஆத்மாவையறிந்தவர்களுக்கு "எந்த நமக்கு இது வே ஆத்மாவோ இது லோகமோ (போக ஸாதனமோ) அந்த நாம் ப்ரஜையினால் (ப்ரஜை புத்திரன் வித்தம் இவைகளினால்)என்ன செய் யப்போகிறோம்" (இவற்றால் நமக்காகவேண்டியது என்னை?") என்ற தாதியால் கர்மநிஷ்டைக்கு நேர் எதிரிடையான ஜாயாதி ஏஷணாத் ரய ஸன்னியாஸத்தினால் (மனைவி,மக்கள், பொருள் இம்மூன்றையும் விடுதலினால்)க்ஞானநிஷ்டையே காண்பிக்கப்பட்டிருக்கிறது. க்ஞான நிஷ்டர்களான ஸன்னியாஸிகள் எவர்களோ அவர்களுக்கு "அஸுர் யா நாம தே லோகா:" என்றதாதியால் அவித்வானை நிந்தை செய்

* ஸப்தான்ன ஸர்க்கமாவது—எல்லா ப்ராணிகளும் அவரவர்க்குத் தக்கபடி உட்கொள்ளும் அன்னம் யாதுண்டோ அது ஒன்றாவது அன்ன மாகும். தேவர்களுக்குரிய தர்ச பூர்ணமாஸங்கள் என்பது இரண்டு அன் னங்கள் இவ்விரண்டும் சேர்ந்து மூன்று அன்னங்களாகும். மனது, வாக், ப்ராணன் என்ற தனது போகத்துக்குரிய ஸாதனங்கள் மூன்று அன்னங் கள். இம்மூன்றும் சேர்ந்து ஆறு அன்னங்களாகும். பசுக்களிடமுள்ள பால் ஒரு அன்னமாகும். இவ்வொன்றும் சேர்ந்து ஏழு அன்னங்களா கும். ஆகவே இவ்வேழுந்தான் ஸப்தான்னங்களெனப்படும். இவற்றைத் தனது கர்மநிஷ்டையின் பலத்தினால் ஸ்ருஷ்டித்துக்கொண்டு 'நானே இவை, இவை என்னுடையன' என்பதாய் அவற்றில் ஆத்மாத்மீய புத்தி யை யடைவதால் கர்மநிஷ்டனுக்கு ஸம்ஸாரபந்தம் ஏற்படுகிறது என்பது ப்ரஸித்தமாகவிருக்கிறது.

याथात्म्यं "स पर्यगात्" इत्येतदन्तैर्मन्त्रैरुपदिष्टम्। ते ह्यत्राधिकृता न कामिन इति। तथाच श्वेताश्वतराणां मन्त्रोपनिषदि "अत्याश्रमिभ्यः परमं पवित्रं प्रोवाच सम्यगृषिसङ्घजुष्टम्" इत्यादिविभज्योक्तम्। ये तु कर्मिणः कर्मनिष्ठाः कर्मकुर्वन्त एव जिजीविषवः तेभ्य इदमुच्यते "अन्धं तमः" इत्यादि। कथं पुनरेवमवगम्यते नतु सर्वेषामिति। उच्यते। अकामिनः साध्यसाधनभेदोपमर्देन "यस्मिन् सर्वाणि भूतानि आत्मैवाभूद्विजानतः। तत्र को मोहः कः शोक एकत्वमनुपश्यतः" इति यदात्मैकत्वविज्ञानं तन्न केनचित्कर்मणा ज्ञानान्तरेण वा ह्यमूढः समुच्चिचीषति। इह तु समुच्चि

---

யும் வாயிலாக ஆத்மாவின் உண்மையான நிலையானது "ஸபர்யகாத்" என்றது முடியவுள்ள மந்திரங்களாலுபதேசிக்கப்பட்டது. அவர்கள் இதில் (ஞ்ஞான நிஷ்டையில்) அதிகாரம் பெற்றவர்களேயன்றி காமிகளில்லையன்றோ என்றும். அவ்விதமே ஶ்வேதாஶ்வதரர்களின் மந்த்ரோபநிஷத்தில் "பரமபவித்ரமானதும், பரிசுத்தமானதும், ருஷிக்கூட்டங்களால் நன்கு ஸேவிக்க (கையாள) ப்பட்டதுமான (ஆத்மதத்துவத்தை) ஸன்னியாஸிகளையும் பொருட்டு உபதேசித்தார்" எனப்பிரித்துக் கூறப்பட்டிருக்கிறது. எந்தக் கர்மிகள் கர்மநிஷ்டர்களாய்க் கர்மத்தைச் செய்துகொண்டே ஜீவிக்கவிரும்புகின்றனரோ அவர்களையும் பொருட்டு अन्धं तमः (அந்தம் தம:) என்றதாதியான இது உபதேசிக்கப்படுகிறது.

சங்கை—கர்மநிஷ்டர்களுக்கு இவ்விதமுபதேசிக்கப்படுகிறதே யொழிய எல்லாருக்கும் இல்லை என்ற இது எவ்விதமறியப்படுகிறது எனின்?

உத்தரம்—இவ்விஷயத்தில் சொல்லப்படுகிறது. காமனையற்றவருக்குப்பலன் அதன் ஸாதனம் இவைரூபமான பேதத்தை மறுத்து "எக்காலத்தில் ஆத்மக்ஞானிக்கு எல்லாப் பூதங்களும் ஆத்மாவாகவேயாகுமோ ப்ரம்ஹாத்ம ஏகத்வத்தை அறிந்தவர்க்கு அக்காலத்தில் மோஹமேது? சோகமேது?" என்பதாய் யாதொரு ஆத்மைகத்வ விஞ்ஞானம் சொல்லப்பட்டதோ அதை வேறு கர்மத்துடனோ, க்ஞானத்துடனோ மூடனகவில்லாதவன் ஸமுச்சயிக்க(சேர்க்க)விரும்

चीषया अविद्वद्वादिनिन्दाक्रियते। तत्र च यस्य येन समुच्चयः संभवति न्यायतश्शास्त्रतो वा तदिहोच्यते। यद्दैवं वित्तं देवतादिषयं ज्ञानं कर्मसंबन्धित्वेनोपन्यस्तम्। नपरमात्मज्ञानम्, "विद्यया देवलोकः" इति पृथक्फलश्रवणात्। तयोर्ज्ञानकर्मणोरिहैकैकानुष्ठाननिन्दा समुच्चिचीषया, न निन्दापरैवाएकैकस्य पृथक्फलश्रवणात् "विद्यया तदारोहन्ति", "विद्यया देवलोकः", "न तत्र दक्षिणा यन्ति" "कर्मणा पितृलोकः" इति। नहि शास्त्रविहितं किञ्चिदकर्तव्यतामियात्। तत्र—

अन्धं तमः प्रविशन्ति येऽविद्यामुपासते।
ततो भूय इव ते तमो य उ विद्यायाँ रताः ॥ ९ ॥

---

யமாட்டானன்றோ. இங்கோ (பின்வரும் மந்திரத்திலோ) க்ஞான கர்ம ஸமுச்சயம் செய்யவேண்டுமென்ற விருப்பத்தினால் அவித்வானின் நிந்தையானது செய்யப்படுகிறது. அவ்விடத்திலும் எதற்கு எதுடன் ஸமுச்சயமானது யுக்திப்படியும் ஶாஸ்திரப்படியுமே ஸம்பவிக்குமோ அது இங்கு சொல்லப்படுகிறது. தைவவித்தமானது= தேவதாவிஷய ஞானமானது யாதுண்டோ (அதுவே) கர்மஸம்பந்தமுள்ளதாயுபதேசிக்கப்பட்டது. பரமாத்மக்ஞானமல்ல. (ஏன்) "வித்யையினால் தேவலோகம் அடையப்படுகிறது" எனத்தனியே பலன் உபதேசிக்கப்படுவதுபற்றியே என்க. அந்தத் தைவக்ஞான கர்மங்களுக்கு ஸமுச்சயம் சொல்லும் விருப்பத்தால் ஒவ்வொன்றினுடையவும் (தனிக்கர்மத்தினுடையவும், தனிக்ஞான (உபாஸன)த்தினுடையவும்) அனுஷ்டான நிந்தையானது செய்யப்படுகிறதேயொழிய ஶ்ருதியானது இரண்டையுமே நிந்திக்கும் நோக்குடையதன்று. ஒவ்வொன்றுக்கும் தனியாகப் பலன் ஶ்ருதியில் காணப்படுவதே அதன் காரணமாகும். அதாவது: "வித்யையினால் அதில் ஏறுகின்றனர்" "வித்யையினால் தேவலோகமடையப்படுகிறது" "அங்கு தக்ஷிணர்கள் (கர்மடர்கள்) செல்லுவதில்லை" "கர்மத்தினால் பிதிருலோகம் அடையப்படுகிறது" என்றுமாம். சாஸ்திரத்தினால் விதிக்கப்பட்ட ஸ்வல்ப விஷயங்கூட அகர்த்தவ்யமாக (செய்யக்கூடாததாக) விருத்தலையடையமாட்டாதன்றோ? அவற்றுள்—

அந்த⁴ம் தம꞉ ப்ரவிஶந்தி யே(அ)வித்³யாமுபாஸதே ।
ததோ பூ⁴ய இவ தே தமோ ய உ வித்³யாயாꣳ ரதா꞉ ॥ ௯ ॥

**अन्धं तमः=अदर्शनात्मकं तमः, प्रविशन्ति। के? येऽविद्यां, विद्याया अन्या अविद्या तां कर्मेत्यर्थः। कर्मणः विद्याविरोधित्वात्। तामविद्यामग्निहोत्रादिलक्षणामेव केवलां उपासते=तत्परास्सन्तोऽनुतिष्ठन्तीत्यभिप्रायः। ततः=तस्मादन्धात्मकात्तमसः भूय इव=बहुतरमेव, ते तमः प्रविशन्ति। के? कर्महित्वा ये उ=ये तु, विद्यायामेव=देवताज्ञान एव, रताः=अभिरताः ॥ ९ ॥**

---

(ப—ரை) **ये** (யெ)=எவர்கள் **अविद्याम्** (அவித்³யாம்)=வித்யையைக் காட்டிலும் வேறுபட்ட அக்னிஹோத்ராதிரூபமான தனித்த கர்மத்தை **उपासते** (உபாஸதே)=தக்க முயற்சியுடன் அநுஷ்டிக்கின்றனரோ [**ते** (தே)=அவர்கள்] **अन्धं तमः** (அந்த⁴ம் தம꞉)=அதர்சனரூபமான இருளை **प्रविशन्ति** (ப்ரவிஶந்தி)=ப்ரவேசிக்கின்றனர். **ये उ** (யே உ)=எவர்கள் **विद्यायाम्** (வித்³யாயாம்)=தனித்த தேவதோபாஸனத்தில் மட்டும் **रताः** (ரதா꞉)=பற்றுள்ளவராகின்றனரோ **ते** (தே)=அவர்கள் **ततो भूय इव तमः** (ததோ பூ⁴ய இவ தம꞉)=முன்னர் கூறியதைக் காட்டிலும் அதிகமான இருளை அடைகின்றனர். (9)

**பாஷ்யம்.**—அந்தம் தம:=அதர்சனரூபமான இருளை ப்ரவேசிக்கின்றனர். எவர்? எவர் அவித்யையை, அதாவது:—வித்யைக்கு அன்யமானது அவித்யையாகும். அதைக் கர்மத்தை என்பது பொருள். கர்மமானது வித்யைக்கு விரோதியாகவிருப்பதே அதன் காரணமாகும். அந்த அவித்யையையே அக்னிஹோத்ராதிரூபமான கேவல கர்மத்தையே உபாஸிக்கின்றனரோ, அதிலேயே முயற்சியுள்ளவர்களாய் அநுஷ்டிக்கின்றனரோ என்பது கருத்து. (அதர்சனரூபமான) அந்த தமஸ்ஸைக்காட்டிலும் அதிகமாகவே உள்ள தமஸ்ஸை அவர்கள் அடைகின்றனர். எவர்? கர்மத்தை விடுத்து எவர்கள் வித்யையிலேயே=தேவதோபாஸனத்திலேயே பற்றுதலையடைகின்றனரோ. (9) (எ—று)

**அவதாரிகா பாஷ்யம்.**—வித்யை கர்மம் இரண்டையும் சேர்த்து

तत्रावान्तरफलभेदं विद्याकर्मणोस्समुच्चयकारणमाह—अन्यथा फल-वदफलवतोस्सन्निहितयोरङ्गाङ्गितैव स्यादिति—

**अन्यदेवाहु र्विद्ययाऽन्यदाहु रविद्यया ।**
**इति शुश्रुम धीराणां ये न स्तद्विचचक्षिरे ॥ १० ॥**

அந்யதே³வாஹு ர்வித்³யயாऽந்யதா³ஹு ரவித்³யயா ।
இதி ஶுஶ்ரும தீ⁴ராணாம் யே ந ஸ்தத்³விசசக்ஷிரே ॥ ௧0 ॥

अन्यदेवेत्यादि । अन्यत्=पृथगेव विद्यया क्रियते फलमित्याहुः= वदन्ति । "विद्यया देवलोकः" "विद्यया तदारोहन्ति" इति श्रुतेः। अन्य-दाहुरविद्यया=कर्मणा क्रियते । "कर्मणा पितृलोकः" इति श्रुतेः। इति=एवं

---

அநுஷ்டிப்பதில் ஒவ்வொன்றுக்கும் தனித்த வேறு பலன் இருப்பதே அதன்காரணமாகும். அவ்விதமில்லாவிடில் பயனுள்ளதுக்கும் பயனற்றதுக்கும் ஸன்னிதி=சேர்க்கை, ஏற்படுங்கால் பயனுள்ளது அங்கியாகவும், பயனற்றது அங்கமாகவுமேயாகும் என்பது அன்யதேவ என்றதாதியாலுபதேசிக்கப்படுகிறது—

(ப—ரை) **विद्यया** (வித்³யயா)=உபாஸனத்தினால் **अन्यदेव** (அந்யதே³வ)=தனிப்பட்ட பலனே செய்யப்படுகிறது. **अविद्यया** (அவித்³யயா)=கர்மத்தினால் **अन्यत्** (அந்யத்)=தனிப்பட்ட பலனே செய்யப்படுகிறது என **आहुः** (ஆஹு:)=சொல்லுகின்றனர். **इति** (இதி)= என்பதாய் **ये** (யே)=எந்த ஆசிரியர்கள் **तत्** (தத்)=அந்தக் கர்மம் க்ஞானம் இவற்றை **नः** (ந:)=எங்களுக்கு **विचचक्षिरे** (விசசக்ஷிரே)=விரித்துரைத்தனரோ, அத்தகைய **धीराणाम्** (தீ⁴ராணாம்)= புத்திமான்களுடைய [**वचनम्** (வசநம்)=வார்த்தையை **शुश्रुम** (ஶுஶ்ரும)=கேட்டோம். (10) (எ—று)

பாஷ்யம்.—வித்யையினால் தனிப்பட்டதாகவே உள்ள பலன் உண்டாக்கப்படுகிறது என்கின்றனர். "வித்யையினால் தேவலோகம்" என்றும் "வித்யையினால் அதில் (தேவலோகத்தில்) ஏறுகின்றனர்" என்றும் ஶ்ருதியிருக்கிறது. அவித்யையினால்=கர்மத்தினால் தனிப்பட்ட பலனே உண்டாக்கப்படுகிறது என்கின்றனர். "கர்மத்தினால் பித்ருலோகமேற்படுகிறது" என ஶ்ருதியிருக்கிறது என இவ்விதம்

शुश्रुम=श्रुतवन्तो वयं धीराणाम्=धीमतां वचनम्। ये आचार्याः नः=अस्मभ्यं, तत्=कर्म च ज्ञानञ्च, विचचक्षिरे=व्याख्यातवन्तः तेषामयमागमः पारम्पर्यागत इत्यर्थः ॥ १० ॥

यत एवमतः—

विद्याञ्चाविद्याञ्च य स्तद्वेदोभयꣳ सह ।
अविद्यया मृत्युं तीर्त्वा विद्ययाऽमृत मश्नुते ॥ ११ ॥

வித்₃யாஞ்சாவித்₃யாஞ்ச ய ஸ்தத்₃வேதோ₃ப₄யꣳ ஸஹ ।
அவித்₃யயா ம்ருத்யும் தீர்த்வா வித்₃யயாऽம்ருத மஶ்நுதே ॥ ௧௧ ॥

विद्यांचाविद्यां च=देवताज्ञानं कर्मचेत्यर्थः। यः तदेतदुभयं, सह एकेन पुरुषेणानुष्ठेयं वेद तस्यैवं समुच्चयकारिण एव एकपुरुषार्थसंबन्धः

---

நாம் புத்திமான்களின் வசனத்தை கேட்டுளோம். எந்த ஆசிரியர்கள் எங்களுக்கு அந்தக் கர்மத்தையும் க்ஞானத்தையும் விரித்துரைத்தனரோ அவர்களின் இந்தச் சாஸ்திரமானது பரம்பரையாக வருகிறது என்பது பொருள். (10) (எ—று)

அவதாரிகா பாஷ்யம்.—யாது காரணத்தால் இவ்விதமேற்படுமோ அக்காரணத்தினால்—

(ப—ரை) यः (ய:)=எவன் विद्याञ्च (வித்₃யாஞ்ச)=வித்யையென்ன, अविद्याञ्च (அவித்₃யாஞ்ச)=அவித்யை (கர்மம்) யென்ன तदुभयम् (தது₃ப₄யம்)=அவ்விரண்டையும், सह (ஸஹ)=ஒரே புருஷனால் அனுஷ்டிக்கத்தக்கதென वेद (வேத₃)=அறிவானோ [सः (ஸ:)=அவன்] अविद्यया (அவித்₃யயா)=கர்மத்தினால் मृत्युम् (ம்ருத்யும்)=இயற்கையிலமைந்துள்ள கர்மத்தையும், க்ஞானத்தையும் तीर्त्वा (தீர்த்வா)=தாண்டி विद्यया (வித்₃யயா)=தேவதோபாஸனத்தினால் अमृतम् (அம்ருதம்)=தேவதாத்மபாவத்தை अश्नुते (அஶ்நுதே)=அடைகிறான். (11) (எ—று)

பாஷ்யம்.—வித்யையையும் அவித்யையையும் அதாவது: தேவதா க்ஞானத்தையும் கர்மத்தையும் என்பது அதன் பொருள். எவன் அவ்விரண்டையும் ஒரே புருஷனால் அனுஷ்டேயமாக அறிவானோ

क्रमेण श्याद्विरुच्यते। अविद्यया=कर्मणा अग्निहोत्रादिना मृत्युम्=स्वाभाविकं कर्म ज्ञानं च मृत्युशब्दवाच्यमुभयं तीर्त्वा=अतिक्रम्य विद्यया=देवताज्ञानेन अमृतम्=देवतात्मभावं अश्नुते=प्राप्नोति। तद्ध्यमृतमुच्यते यद्देवतात्मगमनम् ॥ ११ ॥

---

இவ்விதம் ஸமுச்சயகாரியான அவனுக்கே ஒரே புருஷார்த்த ஸம்பந்தமானது முறையாய் உண்டாகிறது எனச் சொல்லப்படுகிறது. அதாவது: அவித்யையினுல்=அக்னிஹோத்ராதி கர்மத்தினுல் மிருத்யுவை=ஸ்வாபாவிகமான=இயற்கையிலமைந்துள்ளதும் மிருத்யு சப்த வாச்யமுமான கர்மம், ச்ஞானம் என்ற இரண்டையும் தீர்த்வா= தாண்டி, வித்யையினுல்=தேவதோபாஸனத்தினுல் அமிருதத்தை= தேவதாத்மபாவத்தை அடைகிறுன். தேவதாத்மபாவத்தையடைதல் என்பது யாதுண்டோ அஃதன்றே அமிருதமெனச் சொல்லப்படுகிறது. (11) (எ-று)

(அ-கை) இந்த 12, 13, 14 என்ற மூன்று மந்திரங்களாலும் வ்யாகிருத (ஹிரண்யகர்ப்ப) அவ்யாகிருத (ப்ரகிருதி) இவ்விரண்டினுடையவும் உபாஸன ஸமுச்சயமானது உபதேசிக்கப்படுகிறது. அவற்றுள் 12-வது மந்திரத்தினுல் தனித்த வியாகிருத உபாஸனத்தினுடையவும், தனித்த அவியாகிருத உபாஸனத்தினுடையவும் நிந்தையானது ஸமுச்சய உபாஸனத்துக்குவேண்டி செய்யப்படுகிறது. 13-வது மந்திரத்தினுல் அவ்விரு வுபாஸனத்துக்கும் தனியே வேறு பலனுண்டு என்றும், 14-வது மந்திரத்தினுல் இவ்விரண்டையும் சேர்த்து ஒரே புருஷனுற் செய்யப்படும் உபாஸனத்துக்கு ஏற்படும் பலனும் சொல்லப்படுகிறது. ஆனுல் அவற்றுள் வியாகிருதவுபாஸன மென்பது சேதன ஹிரண்யகர்ப்போபாஸனமானதால் அதற்கெனச் சொல்லப்படும் பலன் பொருந்தலாமாயினும் அவ்யாகிருதமென்பது அசேதனமாகையால் அசேதன வுபாஸனத்தினுல் பலன் எவ்விதமேற்படும் என்ற சங்கை நிகழலாம். ஆயினும் ஜடமான கர்மோபாஸனத்துக்குப்போல இந்த ப்ரகிருத்யுபாஸனத்துக்கும் பரமேஶ்வரனே பலன் தருகிறுர் என்று கொள்ளவும். மேலும் ஜாக்ரத் காலத்திலுள்ள துக்காதி நிவிருத்தியேற்படுவதிலிருந்து ஸுஷுப்தியனுபவத்தில் ப்ரீதியேற்படுவதுபோல ஸாம்ஸாரிகமான ஸகல துக்

अधुना व्याकृताव्याकृतोपासनयोः समुच्चिचीषया प्रत्येकं निन्द्योच्यते।

**अन्धं तमः प्रविशन्ति येऽसंभूति मुपासते ।**
**ततो भूय इव ते तमो य उ संभूत्याꣳ रताः ॥ १२ ॥**

அந்தம் தம꞉ ப்ரவிஶந்தி யேऽஸம்பூதி முபாஸதே ।
ததோ பூய இவ தே தமோ ய உ ஸம்பூத்யாꣳ ரதா꞉॥

**अन्धं तमः प्रविशन्ति येऽसंभूतिं—संभवनम्=संभूतिः सा यस्य कार्यस्य सा संभूतिः। तस्या अन्या असंभूतिः प्रकृतिः, कारणम्, अविद्या**

---

கங்களுடையவும் நிவிருத்தியேற்படுவதிலிருந்து இந்த அவ்யாகிருதோபாஸனத்தின் பலனுன ப்ரகிருதிலயத்தில் விருப்பம் ஏற்படலாமென்றும் கண்டுகொள்ளவும். அவற்றுள் 12-வது மந்திரம் பின்வருமாறு—

அவதாரிகா பாஷ்யம்.—வியாகிருத அவியாகிருத உபாஸனங்களுக்கு ஸமுச்சயம் சொல்லவேண்டுமென்ற எண்ணத்தால் அவற்றின் ப்ரத்யேக நிந்தை செய்யப்படுகிறது—

(ப—ரை) ये (யே)=எவர்கள் असंभूतिम् (அஸம்பூதிம்)=ப்ரகிருதியை उपासते (உபாஸதே)=தனியாக வுபாஸிக்கின்றனரோ ते (தே)=அவர்கள் अन्धं तमः (அந்தம் தம꞉)=அந்தர்சக்ஷுகமான இருளையடைகின்றனர். ये उ (யே உ)=எவர்கள் संभूत्याम् (ஸம்பூத்யாம்)=தனித்த வியாகிருதோபாஸனத்தில் रताः (ரதா꞉)=பற்றுள்ளவர்களோ ते (தே)=அவர்கள் ततो भूय इव तमः (ததோ பூய இவ தம꞉)=அதைக்காட்டிலும் மேல்பட்டதாகவேயுள்ள தமஸ்ஸை= இருளை அடைகின்றனர். ஆகவே தனித்தனி வியாகிருதோபாஸனத்தையோ, அவியாகிருதோபாஸனத்தையோ செய்வது கூடாது என்பது கருத்து. (12) (எ—று)

பாஷ்யம்.—अन्धं तमः प्रविशन्ति (அந்தம் தம꞉ ப்ரவிஶந்தி) எவர்கள் அஸம்பூதியை=பூதி என்பது பவநம்=உத்பத்தியாகும். அந்த உத்பத்தியானது எந்தக் காரியத்துக்கு இருக்கிறதோ அது ஸம்பூதி எனப்படும். (அதாவது: உத்பத்தியை உடைய காரிய ஸமூஹமென்பது அதன் பொருள்.) அந்த ஸம்பூதியை (காரிய

अव्याकृताख्या तामसंभूतिमव्याकृताख्यां प्रकृतिं कारणमविद्यां कामकर्मबीजभूतामदर्शनात्मिकां उपासते ये ते तदनुरूपमेव अन्धं तमः अदर्शनात्मकं प्रविशन्ति। ततः तस्मादपि भूयः बहुतरमिव तमस्ते प्रविशन्ति य उ संभूत्यां कार्यब्रह्मणि हिरण्यगर्भाख्ये रताः ॥ १२ ॥

अधुना उभयोरुपासनयोस्समुच्चयकारणमवयवफलभेदमाह—

**अन्यदेवाहुः संभवा दन्यदाहु रसंभवात् ।**
**इति शुश्रुम धीराणां ये न स्तद्विचचक्षिरे ॥ १३ ॥**

அந்யதேவாஹு: ஸம்பவா தந்யதாஹு ரஸம்பவாத் ।
இதி ஶுஶ்ரும தீராணாம் யே ந ஸ்தத்விசசக்ஷிரே ॥ ௧௩ ॥

---

ஸமூஹத்தை) க்காட்டிலும் வேறுபட்டது அஸம்பூதியாகும். அது ப்ரக்ருதியென்றும், காரணமென்றும், அவித்யை என்றும், அவ்யாக்ருதப் பொருளளதென்றுமாகும். அந்த அஸம்பூதியை அவ்யாக்ருதமெனப்பெயரிய ப்ரக்ருதியை காரணத்தை காமகர்மங்களுக்குப் பீஜமாகவான அதர்சன ரூபமான அவித்யையை உபாஸிப்பவர்கள் எவர்களோ அவர்கள் அதற்கு அனுகுணமாகவே உள்ள அதர்சனாத்மகமான अन्ध (அந்த) அந்த தமஸ்ஸைப் பிரவேசிக்கின்றனர். அதைக்காட்டிலுங்கூட வெகுவாக உள்ளதுபோன்ற தமஸ்ஸை அவர்கள் அடைகின்றனர். எவர்கள் ஸம்பூதியில்=ஹிரண்யகர்ப்பர் எனப்பெயரிய காரிய ப்ரம்ஹத்தில் பற்றுள்ளவர்களோ என்றும்.

அவதாரிகா பாஷ்யம்.—இப்பொழுது இவ்விரண்டு உபாஸனங்களுடையவும் ஸமுச்சயத்துக்குக் காரணமான அவயவ பலபேதத்தை (ஒவ்வொன்றுக்கும் தனித்தனியேற்படக்கூடிய பலபேதத்தை) ச் சொல்லுகிறது—

(ப—ரை) संभवात् (ஸம்பவாத்)=கார்ய ப்ரம்ஹோபாஸனத்தினுலுண்டாகும் பலனை अन्यदेवाहुः (அந்யதேவாஹு:)=வேறாகவே= அணிமாதி ஐஶ்வரிய ரூபமாகவே சொல்லுகின்றனர். असंभवात् (அஸம்பவாத்)=அவ்யாக்ருதோபாஸனத்தினுலுண்டாகும் பலனையும் अन्यदाहुः (அந்யதாஹு:)=வேறுபட்டதாகவே ப்ரக்ருதிலயமெனப் பௌராணிகர்களாற் சொல்லப்படுவது ரூபமாகவே சொல்

अन्यदेवेति। अन्यदेव=पृथगेवाहुः फलं, संभवात्=संभूतेः, कार्यब्रह्मोपासनादणिमाद्यैश्वर्यलक्षणं व्याख्यातवन्तः इत्यर्थः। तथा च अन्यदाहुरसंभवात्—असंभूतेः=अव्याकृतादव्याकृतोपासनाद्यदुक्तमन्धं तमः प्रविशन्तीति। प्रकृतिलय इति च पौराणिकै रुच्यते। इति=एवं, शुश्रुम धीराणां वचनम्। ये न स्तद्विचचक्षिरे=व्याकृताव्याकृतोपासनफलं व्याख्यातवन्त इत्यर्थः ॥ १३ ॥

यत एवमतः समुच्चयः संभूत्यसंभूत्युपासनयोर्युक्त एव एकपुरुषार्थत्वाच्चेत्याह—

---

லுகின்றனர். ये (யெ)=எவர்கள், नः (நః)=எங்களுக்கு तत् (தத்)=வியாகிருத அவியாகிருத உபாஸன பலனை व्याचचक्षिरे (வ்யா அ அக்ஷிரெ)=விரித்துபதேசித்தனரோ அத்தகைய धीराणाम् (தீராணாம்)=புத்திமான்களுடைய வசனத்தை इति (இதி)=இவ்விதம் शुश्रुम (ஶுஶ்ருமः)=கேட்டுளோம். (13) (எ—று)

பாஷ்யம்.—ஸம்பவத்திலிருந்து=ஸம்பூதியிலிருந்து=காரியப்ரம்ஹோபாஸனத்திலிருந்து உண்டாகும் பலனை அன்யத்தாகவே=வேறுபட்டதாகவே சொல்லுகின்றனர். அணிமாதி ஐஶ்வரிய ரூபமான பலனை விரித்துரைத்திருக்கின்றனர் என்று பொருள். அவ்விதமே அஸம்பவத்திலிருந்து=அஸம்பூதியிலிருந்து=அவ்யாகிருதத்திலிருந்து=அவ்யாகிருதோபாஸனத்திலிருந்து "அந்த தமஸ்ஸை ப்ரவேசிக்கின்றனர்" என எது சொல்லப்பட்டதோ, "ப்ரகிருதிலயம்" எனப் பௌராணிகர்களாலும் எது சொல்லப்படுகிறதோ அத்தகைய அன்யத்தாகவே=வேறாகவேயுள்ள (பலனை) ச் சொல்லுகின்றனர். என இவ்விதம் எவர்கள் எங்களுக்கு அதை=வியாகிருதாவ்யாகிருதோபாஸன பலனை விரித்துரைத்தனரோ அத்தகைய புத்திமான்களுடைய வசனத்தைக் கேட்டுளோம் என்பது பொருள். (13)

அவதாரிகா பாஷ்யம் —எக்காரணம்பற்றி இவ்விதமேற்படுகிறதோ அக்காரணம்பற்றி ஸம்பூதி அஸம்பூதி இவற்றின் உபாஸனங்களுக்கு ஸமுச்சயமானது பொருந்தக்கூடியதாகவே ஆகிறது. ஒரே புருஷனை ஸம்பந்தித்ததாக அப்பலன் இருப்பதும் மற்றொரு காரணமாகும் என்று உபதேசிக்கிறது—

**संभूतिञ्च विनाशञ्च यस्तद्वेदोभयँ सह ।**
**विनाशेन मृत्युं तीर्त्वाऽसंभूत्याऽमृतमश्नुते ॥ १४ ॥**

ஸம்பூதிஞ்ச விநாசஞ்ச யஸ்தத்வேதோபயꣳ ஸஹ ।
விநாசேந ம்ருத்யும் தீர்த்வா(அ)ஸம்பூத்யா(அ)ம்ருதமச்நுதே ॥

**संभूतिं च विनाशं च यस्तद्वेदोभयंसह । विनाशेन=विनाशो धर्मो यस्य कार्यस्य स तेन धर्मिणा अभेदेनोच्यते विनाश इति। तेन तदुपासनेन अनैश्वर्यमधर्मकामादिदोषजातं च मृत्युं तीर्त्वा । हिरण्यगर्भोपासनेन हि अणिमादिप्राप्तिः फलम् । तेन अनैश्वर्यादिमृत्युमतीत्य असंभूत्या=अव्याकृ-**

---

(ப—ரை) यः (யः)=எவன், संभूतिश्च (ஸம்பூதிஞ்ச)=ஸம்பூதி என்ன विनाशश्च (விநாசஞ்ச)=விநாசமென்ன, तदुभयम् (தது⁴ப⁴யம்)=அவ்விரண்டையும் सह (ஸஹ)=ஒரே புருஷனால் அனுஷ்டிக்கக் கூடியதென वेद (வேத)=எண்ணுவானோ அவன் विनाशेन(விநாசேந)=வியாகிருதோபாஸனத்தினால் मृत्युम् (ம்ருத்யும்)=அனைஸ்வர்யத்தையும் அதர்மம் காமம் முதலிய தோஷ ஸமூஹத்தையும், तीर्त्वा (தீர்த்வா)=போக்கி असंभूत्या (அஸம்பூத்யா)=அவியாகிருதோபாஸனத்தினால் अमृतम् (அம்ருதம்)=ப்ரகிருதிலயரூபமான மோக்ஷத்தை अश्नुते (அச்நுதே)=அடைகிறான். (14) (எ—று)

பாஷ்யம்.—ஸம்பூதி, விநாசம் என்ற இவ்விரண்டையும், ஒரே புருஷனால் அனுஷ்டிக்கத்தக்கதென எவன் அறிவானோ அவன் விநாசத்தினால்=விநாசமென்ற தர்மமானது எந்தக் காரியத்துக்கு இருக்கிறதோ அது விநாசமாகும். ஆகவே விநாசமென்ற தர்மமுள்ள தர்மியினால் என்பதாய் தர்மதர்மிகளுக்குரிய அபேதத்தால் விநாசதர்மமுள்ள விநாசியான தர்மியானது விநாச என்ற பதத்தால் சொல்லப்படுகிறது. அதனால் = விநாசியான தர்மியினுபாஸனத்தினால் அனைஸ்வரியமும் அதர்ம காமாதிரூப தோஷ ஸமூஹமுமான மிருத்யுவைத்தாண்டி என்று பொருள். ஹிரண்யகர்ப்போபாஸனத்தால் *அணிமாதிகளின் ப்ராப்தியன்றோ பலனாகச் சொல்லப்படு

---

* அணிமாதி ஐச்வரியங்கள் இன்னதென்பதை நமது பாதஞ்ஜல யோக சூத்திர மொழிபெயர்ப்பு 234-வது பக்கத்தில் காண்க.

तोपासनया अमृतं प्रकृतिलयलक्षणं अश्नुते। संभूतिं च विनाशं चेत्यत्र अवर्णलोपेन निर्देशो द्रष्टव्यः। प्रकृतिलयफलश्रुत्यनुरोधात् ॥ १४ ॥

मानुषदैववित्तसाध्यं फलं शास्त्रलक्षणं प्रकृतिलयान्तम्। एतावती संसारगतिः। अतः परं पूर्वोक्तम् "आत्मैवाभूद्विजानतः" इति सर्वात्मभाव एव सर्वैषणासन्न्यासज्ञाननिष्ठाफलम्। एवं द्विप्रकारः प्रवृत्तिनिवृत्तिलक्षणो वेदार्थोऽत्र प्रकाशितः। तत्र प्रवृत्तिलक्षणस्य वेदार्थस्य विधिप्रतिषेधलक्षणस्य कृत्स्नस्य प्रकाशने प्रवर्ग्यान्तं ब्राह्मणमुपयुक्तम्। निवृत्तिलक्षणस्य वेदार्थस्य प्रकाशने अत ऊर्ध्वं बृहदारण्यकमुपयुक्तम्। तत्र निषेकादिश्मशानान्तं कर्मकुर्वन् जिजीविषेद्यो विद्यया सहापरब्रह्मविषयया, तदुक्तं "विद्यां चाविद्यांच यस्तद्वेदोभयंसह। अविद्यया मृत्युं तीर्त्वा विद्ययामृत

---

கிறது. அதனால் அனைஶ்வர்யாதியான மிருத்யுவைக் கடந்து அஸம்பூதியினால் = அவ்யாக்ருதோபாஸனத்தினால் ப்ரக்ருதிலயரூபமான அமிருதத்தை அடைகிறான். மூலத்தில் "ஸம்பூதிஞ்ச" என்றவிடத்தில் முதலில் "அ" என்ற எழுத்தைவிட்டு உபதேசித்திருப்பதாகக் கொள்ளவும். ப்ரக்ருதிலயமென்ற பலன் சொல்லியிருப்பதே அதன் காரணமாகும். (14) (எ—று)

அவதாரிகா பாஷ்யம்.—சாஸ்திரத்திற்சொல்லிய ப்ரக்ருதிலயத்தை முடிவாகக்கொண்ட பலன் மானுஷவித்தத்தாலும், தைவவித்தத்தாலும் ஸாத்தியமாகவாகிறது. இவ்விதம் இவ்விடத்தில் ப்ரவிருத்தி நிவிருத்திரூபமான இரண்டுவிதமான வேதார்த்தமானது சொல்லப்பட்டது. அவற்றுள் விதிப்ரதிஷேதரூபமானதும் ப்ரவ்ருத்திரூபமுமான எல்லா வேதார்த்தத்தையும் ப்ரகாசப்படுத்தும் விஷயத்தில் ப்ரவர்க்யாந்தமான ப்ராம்ஹணமானது உபயோகப்படுகிறது. நிவிருத்திரூபமான வேதார்த்தத்தை ப்ரகாசப்படுத்தும் விஷயத்தில் இதற்கு மேலுள்ள ப்ருஹதாரண்யகமானது உபயோகப்படுகிறது. அவற்றுள் கர்ப்பாதானந்தொடங்கி ஶ்மஶாநாந்தமான கர்மாவைச்செய்துகொண்டு அபர ப்ரம்ஹவிஷயமான வித்யையுடன் (உபாஸனத்துடன்) கூட எவன் ஜீவிக்க விரும்புவானோ அவன் "வித்யாஞ்சாவித்யாஞ்ச யஸ்தத்வேத உபயம் ஸஹ। அவித்யயா ம்ருத்யும் தீர்த்வா

ऽश्नुते" इति । तत्र केन मार्गेणामृतत्वमश्नुते इत्युच्यते "तद्यत्तत्सत्यमसौ स आदित्यो य एष एतस्मिन्मण्डले पुरुषो, यश्चायं दक्षिणेऽक्षन् पुरुषः" एतदुभयं सत्यं ब्रह्मोपासीनः यथोक्तकर्मकृच्च यः सोऽन्तकाले प्राप्ते सति आत्मानं आत्मनः प्राप्तिद्वारं याचते—

**हिरण्मयेन पात्रेण सत्यस्यापिहितं मुखम् ।**
**तत्त्वं पूषन्नपावृणु सत्यधर्माय दृष्टये ॥ १५ ॥**

ஹிரண்மயேந பாத்ரேண ஸத்யஸ்யாபிஹிதம் முகம் ।
தத்த்வம் பூஷந்நபாவ்ருணு ஸத்யதர்மாய த்ருஷ்டயே ॥ கரு ॥

---

வித்யயா அம்ருதமஶ்நுதே" என்றதால் (அபேக்ஷிகமான அமிருதத்வத்தையடைகிறான்) எனச் சொல்லப்பட்டது. அத்தகைய க்ஞான கர்மபலனை அமிருதத்வமானது எந்த மார்க்கத்தினால் அடையப் படுகிறது என்ற இது அடுத்த மந்திரத்தினுபதேசிக்கப்படுகிறது. அவ்விடத்தில் யாதொரு அந்த ஸத்யரூபமான ப்ரம்ஹமுண்டோ அது இந்த ஆதித்யனேயாகும். இந்த ஆதித்ய மண்டலத்தில் யாதொரு புருஷனுண்டோ, வலது கண்ணில் யாதொரு புருஷனுண்டோ இவ்விரண்டுருவமான=அத்யாத்ம அதிதைவரூபமான, ஸத்ய ப்ரம்ஹத்தையுபாஸிப்பவனும் சாஸ்திரத்திற் சொல்லியபடி கர்மத்தைச் செய்பவனும் எவனோ அவன் மரணகாலம் ப்ராப்தமானதும் ஸத்யரூபமான ஆத்மாவை தானடைவதற்குரிய வழியை "ஹிரண்மயேந பாத்ரேண" என்றதால் யாசிக்கிறான்=வேண்டுகிறான்—

(ப—ரை) **हिरण्मयेन** (ஹிரண்மயேந)=ஜ்யோதிர்மயமான **पात्रेण** (பாத்ரேண)=பாத்திரத்தினால் **सत्यस्य** (ஸத்யஸ்ய)=ஆதித்ய மண்டலத்திலிருக்கின்ற ப்ரம்ஹத்தினுடைய **मुखम्** (முகம்)=த்வாரமானது, **अपिहितम्** (அபிஹிதம்)=மூடப்பட்டிருக்கிறது. **हे पूषन्** (ஹே பூஷந்)=ஹே ஸூரியனே! **त्वम्** (த்வம்)=நீர், **तत्** (தத்)=அந்த த்வாரத்தை, **सत्यधर्माय** (ஸத்யதர்மாய)=ஸத்யரான உமது உபாஸன ரூபமான தர்மத்தையுடைய என்னையும் பொருட்டு **दृष्टये** (த்ருஷ்டயே)=உமது ஸ்வரூபோபலப்திக்குவேண்டி **अपावृणु**(அபாவ்ருணு)= திறந்து விடுவீராக. (15) (எ—று)

हिरण्मयेन पात्रेण=हिरण्मयमिव हिरण्मयम्, ज्योतिर्मय मित्येतत्। तेन पात्रेणैवापिधानभूतेन, सत्यस्य=आदित्यमण्डलस्थस्य ब्रह्मणः, अपिहितम्=आच्छादितम्, मुखम्=द्वारम् तत्त्वं हेपूषन्। अपावृणु=अपसारय। सत्यधर्माय=तव सत्यस्योपासनात्सत्यं धर्मो यस्य मम सोहं सत्यधर्मा तस्मै मह्यं, अथवा—यथा भूतस्य धर्मस्यानुष्ठात्रे दृष्टये=तव सत्यात्मन उपलब्धये ॥ १५ ॥

पूषन्नेकर्षे यम सूर्य प्राजापत्य व्यूह रश्मीन्समूह।
तेजो यत्ते रूपं कल्याणतमं तत्ते पश्यामि योऽसावसौ
पुरुषः सोऽहमस्मि ॥ १६ ॥

பூஷந்நேகர்ஷே யம ஸூர்ய ப்ராஜாபத்ய வ்யூஹ ரஶ்மீந்ஸமூஹ। தேஜோ யத்தே ரூபம் கல்யாணதமம் தத்தே பஶ்யாமி யோஸாவஸௌ புருஷ: ஸோஹமஸ்மி ॥

---

பாஷ்யம்.—ஹிரண்மயமான பாத்திரத்திறுல் = ஹிரண்மயம் போலிருப்பதுபற்றி ஹிரண்மயமாகிறது ஜ்யோதிர்மயமானது என்பது பொருள். மறைக்கும் பொருளாகவான அந்தப் பாத்திரத்திறுல் ஸத்யத்தினுடைய=ஆதித்ய மண்டலத்திலிருக்கின்ற ப்ரம்ஹத்தினுடைய முகமானது=துவாரமானது அபிஹிதமாக=மறைக்கப்பட்டதாகவாகிறது. அதை நீர் ஹே பூஷன்! விலக்கும் सत्यधर्माय (ஸத்யதர்மாய)=ஸத்யமான உமது உபாஸனத்திறுல் ஸத்யமான தர்மமானது எந்த எனக்கு ஏற்படுகிறதோ அந்த நான் ஸத்யதர்மாவாகிறேன். அந்த என்னேயும் பொருட்டு என்று பொருள். அல்லது உண்மையான தர்மத்தை அனுஷ்டிப்பவனேயும் பொருட்டு திருஷ்டயே=ஸத்யாத்மாவான உமது உபலப்தியும் பொருட்டு என்று பொருள். (15) (எ-று)

(ப-ரை) हे पूषन् (ஹே பூஷந்)=ஜகத்தைப்போஷிப்பவரே! हे एकर्षे (ஹே ஏகர்ஷே)=ஒருவராகவே செல்லுபவரே! हे यम (ஹே யம)=யாவற்றையுமடக்குபவரே! हे प्राजापत्य (ஹே ப்ராஜாபத்ய)=ப்ரஜாபதியின் புத்திரரே! रश्मीन् (ரஶ்மீந்)=சொந்தமான

हेपूषन्। जगतः पोषणात्पूषा रविः, तथा एक एव ऋषति गच्छतीत्ये-
कर्षिः, हे एकर्षे। तथा सर्वस्य संयमनाद्यमः हेयम। तथा रश्मीनां प्राणानां
रसानां च स्वीकरणात्सूर्यः हेसूर्य। प्रजापतेरपत्यं प्राजापत्यः हे प्राजापत्य।
व्यूह=विगमय रश्मीन्स्वान्, समूह=एकी कुरु उपसंहर, तेजः=तापकं
ज्योतिः। यत्ते=तव, रूपं कल्याणतमम्=अत्यन्तशोभनं, तत्ते तवात्मनः
प्रसादात्पश्यामि। किञ्चाहं न तु त्वां भृत्यवद्याचे योऽसावादित्यमण्डलस्थो
व्याहृत्यवयवः पुरुषः=पुरुषाकारत्वात्, पूर्णं वानेन प्राण्बुद्ध्यात्मना जग-
त्समस्तमिति पुरुषः। पुरिशयनाद्वा पुरुषः। सोऽहमस्मि भवामि ॥ १६ ॥

---

கிரணங்களை व्यूह (வ்யூஹ)=விலக்கிக் கொள்ளுவீராக. तेजः (தே-
ஜ:)=தாபகமான உமது ஜ்யோதிஸ்ஸை, समूह (ஸமூஹ)=ஒடுக்கிக்
கொள்ளுவீராக. ते (தே)=உம்முடைய कल्याणतमम (கல்யாண-
தமம்)=மிக்க மங்களகரமான यत् (யத்)=யாதொரு रूपम (ரூபம்)=
ரூபமுண்டோ ते (தே)=உமது तत् (தத்)=அந்த ரூபத்தை पश्यामि
(பச்யாமி)=உமது அனுக்ரஹத்தினால் பார்ப்பேனாக. असौ पुरुषः
(அஸௌ புருஷ:)=ஆதித்யமண்டலத்திலிருக்கின்ற புருஷன் यो
सौ (யோஸௌ)=எவருண்டோ सः (ஸ:)=அவராக अहम् (அஹம்)=
நான் अस्मि (அஸ்மி)=இருக்கின்றேன். (16) (எ—று)

பாஷ்யம்.—ஹே பூஷன்! ஜகத்தைப் போஷிப்பதால் சூரியன் பூஷாவாகிறார். அதுபோலவே ஒருவனாகவே போவதுபற்றி ஏகர்ஷியுமாவர். ஹே ஏகர்ஷே! அவ்விதமே எல்லாவற்றையும் நியமனஞ் செய்வதால் யமனுமாவர். ஹே யம! அவ்விதமே ரச்மிகளையும், ப்ராணன்களையும், ஜலங்களையும் ஸ்வீகரிப்பதால் ஸூர்யனுமாகிறார். ஹே ஸூர்ய! ப்ரஜாபதியினது அபத்யமானதுபற்றி ப்ராஜாபத்யனுமாவர். ஹே ப்ராஜாபத்ய! சொந்தக் கிரணங்களை விலக்கிக் கொள்ளுவீராக. தேஜஸ்ஸை=தாபகமான ஜ்யோதிஸ்ஸை உபஸம்ஹாரஞ் செய்துகொள்ளுவீராக. உம்முடைய அத்யந்த சோபனமான யாதொரு ரூபமுண்டோ உம்முடைய அந்தரூபத்தை ஆத்மாவான உமது பிரஸாதத்தால் பார்ப்பேனாக. மேலும் நான் உம்மை வேலைக்காரன் போல யாசிக்கின்றேனில்லை பின்னையோவென்னில் ஆதித்யமண்டலத்திலிருப்பவரும், வியாஹ்ருதியை அவயவமாகவு-

**वायुरनिलममृतमथेदं भस्मान्त ँ शरीरम् ।**
**ओं क्रतो स्मर कृत ँ स्मर क्रतो स्मर कृत ँ स्मर ॥**

வாயுரநிலமம்ருதமதேதம் பஸ்மாந்த ஶரீரம் । ஓம் க்ரதோ ஸ்மர க்ருத ஸ்மர க்ரதோ ஸ்மர க்ருத ஸ்மர ॥

अथ=इदानीं मम मरिष्यतो वायुः=प्राणोऽध्यात्मपरिच्छेदं हित्वाधिदैवतात्मानं सर्वात्मकमनिलममृतं सूत्रात्मानं प्रतिपद्यतामिति वाक्यशेषः। लिङ्गं चेदं ज्ञानकर्मसंस्कृतमुत्क्रामत्विति द्रष्टव्यं मार्गयाचनसामर्थ्यात् ।

---

டையவரும், புருஷாகாரமுள்ளவனுயிருப்பதுபற்றிப் புருஷனும், அல்லது ப்ராணபுத்தி ரூபமாக இவரால் ஜகத் முழுதும் பூர்ணமாக (நிறைந்ததாக) இருப்பதுபற்றி புருஷனும், அல்லது புரியில்=ஹிருதய குஹையில் வஸிப்பதுபற்றி புருஷனுமானவர் எவரோ அவராக நானிருக்கிறேன். (16) (எ—று)

(ப—ரை) **वायुः** (வாயு:)=அத்யாத்மீகமான வாயுவானது **अनिलम्** (அநிலம்)=ஸர்வாத்மகரான ஸூத்ராத்மாவை அடையட்டும் **अथ** (அத)=பிறகு **इदम्** (இதம்)=இந்த **शरीरम्** (ஶரீரம்)=தேஹமானது **भस्मान्तम्** (பஸ்மாந்தம்)=அக்னியில் ஹோமஞ்செய்யப்பட்டு முடிவில் சாம்பலாக ஆகட்டும். **ओम्** (ஓம்)=ப்ரணவ வாச்யமான ப்ரம்ஹமே **हे क्रतो** (ஹே க்ரதோ)=ஓ ஸங்கல்பரூபியே **स्मर** (ஸ்மர)=என்னைப்பற்றி நினைக்கவேண்டியதை நினைப்பீராக. **कृतम्** (க்ருதம்)= இதுவரை என்னால் செய்யப்பட்டதை **स्मर** (ஸ்மர)=நினைப்பீராக, திரும்பவும் சொன்னது ஆதராதிஶயத்தைக்காட்டவேண்டியாம்.

பாஷ்யம்—பிறகு இப்பொழுது மரிக்கப்போகின்ற என்னுடைய வாயுவானது = ப்ராணனானது, அத்யாத்ம பரிச்சேதத்தை விடுத்து அதிதைவதஸ்வரூபியும்,ஸர்வாத்மகரும் அம்ருதருமான அநிலத்தை ஸூத்ராத்மாவை "அடையட்டும்" எனப் புதிதாய்ச் சேர்த்துக்கொள்ளவேண்டும். இந்த லிங்கசரீரமானது ஞான (உபாஸன) கர்மங்களால் ஸம்ஸ்கரிக்கப்பட்டதாய்க் கொண்டு வெளிக்கிளம்பட்டும் என ப்ரார்த்தித்ததாய்க் கண்டுகொள்ளவேண்டும். மார்க்கயாசனம் செய்திருப்பதே அதன் காரணமாகும். பிறகு இந்தச் சரீர

अथेदं शरीरमग्नौ हुतं भस्मान्तं भूयात्। ओमिति यथोपासनमों प्रतीकात्मकत्वात्सत्यात्मकमग्न्याख्यं ब्रह्माभेदेनोच्यते। हे क्रतो=सङ्कल्पात्मक स्मर यन्मम स्मर्तव्यं तस्य कालोऽयं प्रत्युपस्थितः। अतः स्मरैतावन्तं कालं भावितं कृतमग्ने स्मर यन्मया बाल्यप्रभृत्यनुष्ठितं कर्म तच्च स्मर। क्रतो स्मर कृतं स्मरेति पुनर्वचनमादरार्थम् ॥ १७ ॥

पुनरन्येन मन्त्रेण मार्गं याचते—

**अग्ने नय सुपथा राये अस्मान्विश्वानि देव वयुनानि विद्वान्।**
**युयोध्यस्मज्जुहुराणमेनो भूयिष्ठां ते नम उक्तिं विधेम ॥१८॥**

அக்நே நய ஸுபதா² ராயே அஸ்மாந்விஶ்வாநி தே³வ வயுநாநி வித்³வாந் । யுயோத்⁴யஸ்மஜ்ஜுஹுராணமேநோ பூ⁴யிஷ்டா²ம் தே நம உக்திம் விதே⁴ம ॥ ௧௮ ॥

---

மானது அக்னியில் ஹோமஞ்செய்யப்பட்டதாய்க்கொண்டு பஸ்மாந்தமாக=முடிவில் சாம்பலாக ஆகட்டும். மூலத்தில் ஓம் என்றதால் ஸத்யாத்மகமும் அக்னியெனப் பெயருள்ளதுமான ப்ரம்ஹமானது அபேதமுறையாற் சொல்லப்படுகிறது. ஒவ்வொரு வுபாஸனந்தோரும் ஓம் என்பதை ப்ரதீகமாக அவர் கொண்டிருப்பதே அதன் காரணமாகும். ஓ ஸங்கல்பாத்மகரே! என்னைப்பற்றி நினைக்கவேண்டியது யாதுண்டோ அதற்குக் காலம் வந்துவிட்டது. ஆகையால் இவ்வளவு காலம் என்னால் செய்யப்பட்டதையும் நினையும். பால்யம் முதல் என்னால் எந்தக்கர்மம் அனுஷ்டிக்கப்பட்டதோ அதையும் நினையும். "ஓம் க்ரதோ ஸ்மர, கிருதம் ஸ்மர" என இரண்டாவது தடவைபடித்தது தனக்கு அவ்விஷயத்திலுள்ள அதிகம் ஆதரவைக் காட்டுகிறது. (17) (எ-று)

அவதாரிகா பாஷ்யம் —திரும்பவும் வேறுமந்திரத்தினால் மார்க்கத்தை யாசிக்கிறார்—

(ப-ரை) हे अग्ने (ஹே அக்நே)=ஓ அக்னியாகிற देव (தேவ)= தேவனே! विश्वानि (விஶ்வாநி)=ஸமஸ்தமான, वयुनानि (வயுநாநி)=

**इत्युपनिषत्। पूर्णमदः पूर्णमिदं पूर्णात्पूर्णमुदच्यते। पूर्णस्य पूर्णमादाय पूर्णमेवावशिष्यते। ओं शान्तिः, शान्तिः, शान्तिः॥**

இத்யுபநிஷத் । பூர்ணமத: பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ணமுதச்யதே । பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவாவஶிஷ்யதே । ஓம் ஶாந்தி:, ஶாந்தி:, ஶாந்தி: ॥

---

கர்மங்களை அல்லது உபாஸனங்களை, **विद्वान्**(வித்வாந்)=அறிந்தவரான நீர் **अस्मान्** (அஸ்மாந்)=எங்களை, **राये** (ராயே)=கர்மபல போகத்தையும் பொருட்டு **सुपथा** (ஸுபதா)=நல்ல வழியினால் அதாவது:—உத்தராயண மார்க்கத்தினால் **नय** (நய)=கொண்டு சேர்ப்பிப்பீராக. **जुहुराणम्** (ஜுஹுராணம்)=மிக்கக் குடிலமான **एनः** (ஏந:)=பாபத்தை **अस्मत्** (அஸ்மத்)=எங்களிடமிருந்து **युयोधि** (யுயோதி)=பிரித்துவிடுவீராக. **ते** (தே)=உமக்கு **भूयिष्ठाम्** (பூயிஷ்டாம்)=அதிகமான **नम उक्तिम्** (நம உக்திம்)=நமஸ்கார வசனத்தை **विधेम** (விதேம)=செய்கின்றோம். அதாவது: நமஸ்காரத்தினால் பணிவிடை செய்கின்றோம் என்றும். (18) (எ—று)

(ப—ரை) **अदः** (அத:)=இந்த நிர்க்குண ப்ரம்ஹம் **पूर्णम्** (பூர்ணம்) = ஒன்றினிடத்தினின்றும் விலகுதலையடையாதது. அதாவது: எங்கும நீக்கமற நிறைந்துள்ளது என்றும். **इदम्** (இதம்)= ஸோபாதிகமான ஸகுண ப்ரம்ஹமும், **पूर्णम्** (பூர்ணம்)=தனது பரமாத்மஸ்வரூபத்தினால் எங்கும் வியாபியாகவே=நீக்கமற நிறைவுள்ளதாகவே இருக்கிறதேயொழிய உபாதி பரிச்சின்னமான விசேஷரூபத்துடனன்று. **पूर्णम्**(பூர்ணம்)=விசேஷத்தன்மையையடைந்த கார்யாத்மகமான ஸகுண ப்ரம்ஹமானது **पूर्णात्** (பூர்ணாத்)= தனக்குக் காரணமான பரப்ரம்ஹத்தினிடமிருந்து **उदच्यते** (உதச்யதே)=உத்கமனத்தையடைகிறது. அதாவது: உண்டாவதாகவாகிறது என்றும். காரியமான ரூபத்தினால் பரம்ப்ரம்ஹஸ்வரூபத்தை விட வேறுபட்டதுபோலிருப்பினும் நீக்கமற நிறைந்துள்ள பூர்ணமான பரமாத்மத்தன்மையாதுண்டோ அதை ஒருபொழுதும் விட்டு விலகுவதில்லை என்பது கருத்து. **पूर्णस्य** (பூர்ணஸ்ய)=காரியமான ஸகுண ப்ரம்ஹத்தினுடைய, **पूर्णम्** (பூர்ணம்)=பூர்ணத்

தன்மையை (நீக்கமற நிறைந்திருத்தலை) आदाय (ஆதாய)=க்ரஹித்துக்கொண்டு அதாவது: ஆத்மஸ்வரூபத்துடன் ஒன்றுபட்டிருத்தலைச் செய்தபின்னர் (வித்யையினால் அவித்யாகிருதமான பூதமாத்திரைகளாகிற உபாதியின் சேர்க்கையாலுண்டான வேறான தோற்றத்தைப் போக்கினபின்னர்) पूर्णमेव (பூர்ணமேவ)=உள்ளும் வெளியும் சைதன்யைகரஸ ஸ்வரூபமான நிர்விசேஷ ப்ரம்ஹமாகவே अवशिष्यते (அவஶிஷ்யதே)=எஞ்சி நிற்கிறது. (எ—று)

குறிப்பு—ப்ருஹதாரண்யகத்தில் "ब्रह्म वा इदमग्र आसीत् तदात्मानमेवावेदहं ब्रह्मास्मीति तस्मात्तत्सर्वमभवत्" ("ப்ரஹ்ம வா இதமக்ர ஆஸீத் ததாத்மானமேவாவேதஹம் ப்ரஹ்மாஸ்மீதி தஸ்மாத்தத்ஸர்வமபவத்")=[इदम् (இதம்)=இந்த ஸகுண ப்ரம்ஹமானது முதலில் ब्रह्म (ப்ரஹ்ம)=நிர்க்குண ப்ரம்ஹமாக இருந்தது அது தன்னையே "நான் ப்ரம்ஹமாகவிருக்கிறேன் எனவறிந்தது. ஆனதுபற்றியே அது ஸர்வமாகவும் (எல்லாமாகவும்) ஆயிற்று] என்ற மந்திரம் படிக்கப் பட்டிருக்கிறது. அம்மந்திரத்தின் பொருளே இந்த "பூர்ணமத:" என்ற சாந்தி மந்திரத்தாற் சொல்லப்பட்டதாகவாகிறது. அதாவது: அங்குள்ள ब्रह्म वा (ப்ரஹ்ம வா) என்ற மந்திரபாகத்தின் பொருள் "पूर्णमदः" ("பூர்ணமத:") என்றதாலும், "इदमग्रे' ("இதமக்ரே") என்ற பாகத்தின் பொருள் "पूर्णमिदं पूर्णात्पूर्णमुदच्यते" ("பூர்ணமிதம் பூர்ணாத்பூர்ணமுதச்யதே") என்றதாலும், "तदात्मानमेवावेदहं ब्रह्मास्मीति" ("ததாத்மானமேவாவேதஹம் ப்ரஹ்மாஸ்மீதி") என்ற பாகத்தின் பொருள் "पूर्णस्य पूर्णमादाय" ("பூர்ணஸ்ய பூர்ணமாதாய") என்றதாலும், "तस्मात्तत्सर्वमभवत्" ("தஸ்மாத்தத்ஸர்வமபவத்") என்ற பாகத்தின் பொருள் "पूर्णमेवावशिष्यते" ("பூர்ணமேவாவஶிஷ்யதே") என்றதாலும் சொல்லப் பட்டிருக்கிறது என பிருஹதாரண்யகம் ஐந்தாவது அத்தியாயம் ஒன்றாவது ப்ராம்ஹணத்தின் முதலில் பாஷ்யக்காரர்களால் விளக்கப்பட்டிருக்கிறது. அதன் விசேஷத்தையும் பின்னும் இம்மந்திரத்துக்கு வேறு சிலர் கூறும் பொருள் பொருத்தமானதன்றென அங்கு பாஷ்யத்தில் விரிவாகக் கூறப்பட்டிருப்பதையும் பிருஹதாரண்யக பாஷ்ய மொழிபெயர்ப்பில் விரிவாய் எழுதப்போவதால்

अग्ने नयेति। हे अग्ने। नय=गमय, सुपथा=शोभनेन मार्गेण। सुपथेति विशेषणं दक्षिणमार्गनिवृत्त्यर्थम्। निर्विण्णोऽहं दक्षिणेन मार्गेण गतागतलक्षणेन। अतो याचे त्वां पुनः पुनः गमनागमनवर्जितेन शोभनेन पथा नय। राये=धनाय कर्मफलोपभोगायेत्यर्थः। अस्मान्=यथोक्तधर्मफलविशिष्टान्, विश्वानि=सर्वाणि हे देव वयुनानि=कर्माणि प्रज्ञानानि वा, विद्वान्=जानन्। किञ्च युयोधि=वियोजय विनाशय, अस्मत्=अस्मत्तः, जुहुराणम्=कुटिलं वञ्चनात्मकं, एनः=पापम्। ततो वयं विशुद्धास्सन्त इष्टं प्राप्स्याम इत्यभिप्रायः। किन्तु वयमिदानीं ते न शक्नुमः परिचर्यां कर्तुम्, भूयिष्ठाम्=बहुतराम्, ते=तुभ्यम्, नम उक्तिम्=नमस्कारवचनम्, विधेम=नमस्कारेण परिचरेमेत्यर्थः॥

---

*அங்கு அதைக்காண்க. இம்மந்திரம் இந்த ஈஸாவாஸ்யோபநிடதத்துக்குச் சந்திமந்திரமாவதால் இதை ஆதியிலும் அந்தத்திலும் படித்துக்கொள்ளவேண்டுவதவசியமாகும். (எ—று)*

பாஷ்யம்.—ஹே அக்னியே! சோபனமான மார்க்கத்தினால் கொண்டுபோவீராக. இங்கு "सुपथा (ஸுபதா)" என்றவிடத்திலுள்ள सु (ஸு) என்ற விசேஷணம் தக்ஷிணாயன மார்க்கத்தை விலக்கவேண்டி கூறப்பட்டது. கதாகத ரூபமான தக்ஷிணாயன மார்க்கத்தினால் நான் வெறுப்பையடைந்திருக்கிறேன். ஆனதுபற்றிக் கமனாகமனமற்றதான சோபனமார்க்கத்தினால் கொண்டுசேர்க்க வேண்டுமென்று உம்மை அடிக்கடி யாசிக்கின்றேன். राये (ராயெ) தனத்தையும் பொருட்டு அதாவது: கர்மபலானுபவத்தையும் பொருட்டு என்பது அதன் பொருள். சாஸ்திரத்திற் சொல்லிய கர்மபலவிசிஷ்டர்களான எங்களை ஹே தேவ! எல்லாக்கர்மங்களையுமோ அல்லது உபாஸனங்களையுமோ அறிந்தவரான நீர் மேலும் எங்களிடமிருந்து குடிலமான=வஞ்சனாத்மகமான பாபத்தைப்பிரித்து நாசமாக்கிவிடும். அதனால் நாம் விசுத்தர்களாக இருந்துகொண்டு இஷ்டத்தையடைவோமாக என்பது கருத்து. மேலும் நாம் இப்பொழுது பணிவிடை செய்வதற்குச்சக்தர்களாக இல்லை. உமக்கு அதிக

"अविद्यया मृत्युं तीर्त्वा विद्ययामृतमश्नुते" "विनाशेन मृत्युं तीर्त्वाऽसंभूत्यामृतमश्नुते" इति श्रुत्वा केचित्संशयं कुर्वन्ति। अतस्तन्निराकरणार्थं संक्षेपतो विचारणां करिष्यामः। तत्र तावत्किंनिमित्तः संशय इति उच्यते। विद्याशब्देन मुख्या परमात्मविद्यैव कस्मान्न गृह्यते अमृतत्वं च? ननु उक्तायाः परमात्मविद्यायाः कर्मणश्च विरोधात्समुच्चयानुपपत्तिः। सत्यम्। विरोधस्तु नावगम्यते विरोधाविरोधयोः शास्त्रप्रमाणकत्वात्। यथाऽविद्यानुष्ठानं विद्योपासनञ्च शास्त्रप्रमाणकं तथा तद्विरोधाविरोधावपि। यथा च "नहिंस्यात्सर्वा भूतानि" इति शास्त्रादवगतं पुनः शास्त्रेणैव बाध्यते "अध्वरे पशुं हिंस्यात्" इति। एवं विद्याविद्ययोरपि स्यात्।

---

தரமான நமஸ்கார வசனத்தைச் செய்கின்றோம். அதாவது: நமஸ்காரத்தால் பணிவிடை செய்கின்றோம் என்று பொருள்.

"அவித்யையினால் மிருத்யுவைத்தாண்டி வித்யையினால் அமிருதத்தையடைகிறான்" "விநாசத்தினால் மிருத்யுவைத்தாண்டி அஸம்பூதியினால் அமிருதத்தையடைகிறான்' என்பதைக்கேட்ட சிலர் ஸந்தேஹத்தையடைகின்றனர். ஆகவே அதைப் போக்கவேண்டி சுருக்கமாக விசாரத்தைச் செய்யப்போகிறோம். அவ்விடத்தில் எக் காரணம்பற்றி ஸந்தேஹமேற்பட்டது எனின்? சொல்லப்படுகிறது. வித்யா என்ற சப்தத்தினால் முக்கியமான பரமாத்மவித்யையும், அமிருதத்வமும் ஏன் கொள்ளப்படவில்லை என்றும். சொல்லப்பட்ட பரமாத்மவித்யைக்கும் கர்மத்துக்கும் விரோதமிருப்பதால் ஸமுச்சயம் பொருந்தாது என்று சொல்லப்பட்டதன்றோ எனின்? உண்மைதான். விரோதமிருப்பதாகவோ அறியப்படவில்லை. விரோதம் அஃதின்மை இரண்டும் ப்ரமாண பூதமான சாஸ்திரமூலமேற்பட வேண்டியிருப்பதாலென்க. அவித்யா (கர்மா) னுஷ்டானமும் வித்யோபாஸனமும் ப்ரமாண பூதமான சாஸ்திரமூலமேற்படுகிறது எவ்விதமோ அவ்விதமே அவற்றின் விரோதமும் விரோதமின்மையும் ஏற்படும். "எவ்வுயிர்களையும் ஹிம்ஸிக்கலாகாது" என்பதாய்ச் சாஸ்திரமூலமறியப்பட்டதே திரும்பவும் (1)"யாகத்தில் பசுவை

---

(1) या शास्त्रचोदिता हिंसा न सा हिंसेति कथ्यते (யா ஶாஸ்த்ரசோதிதா ஹிம்

विद्याकर्मणोश्च समुच्चयः न, "दूरमेते विपरीते विषूची अविद्या या च विद्येति ज्ञाता" इति श्रुतेः। "विद्याञ्चाविद्याञ्च" इतिवचनादविरोध इति चेन्न। हेतुस्वरूपफलविरोधात्। विद्याविद्याविरोधाविरोधयोर्विकल्पासंभवात्समुच्चयविधानादविरोध एवेतिचेन्न। सहसंभवानुपपत्तेः। क्रमेणैकाश्रये स्यातां विद्याविद्ये इति चेन्न। विद्योत्पत्तौ अविद्याया ह्यस्तत्वात्तदाश्रये ऽविद्यानुपपत्तेः। नह्यग्निरुष्णः प्रकाशश्चेति विज्ञानोत्पत्तौ यस्मिन्नाश्रये

---

ஹிம்ஸிக்கலாம்" என்பதாய சாஸ்திரத்தினாலேயே மறுக்கப்படுகிறது எவ்விதமோ இவ்விதமே வித்யாவித்யா விஷயத்திலுமாகும் எனின்?

"அவித்யையும் வித்யையென யாதொன்று அறியப்பட்டதோ அதுவுமாகிய இவ்விரண்டும் வெகுதூரம் விரோதப்படுவதுடன் விருத்தமான பலனுள்ளனவுமாகும்" என ஶ்ருதியிருப்பதால் வித்யா கர்மங்களுக்கு ஸமுச்சயமானது ஸம்பவிக்காது (2)"வித்யையும் அவித்யையும்" என வசனமிருப்பதால் விரோதம் கிடையாது என்கிறோம் எனின்? அவ்விதம் சொல்லுவதற்கில்லை. ஏன்? ஹேது (காரணம்) ஸ்வரூபம், பயன் இவை வித்யாகர்மங்களுக்கு விருத்தங்களாக இருப்பதே அதன் காரணமாகும். வித்யை அவித்யை இவற்றின் விரோதம் அவிரோதம் இவற்றுக்கு விகல்பம் ஸம்பவிக்காதாகையாலும் ஸமுச்சயம் விதிக்கப்பட்டிருப்பதாலும் விரோதமில்லை என்கிறோம் எனின்? இவ்விரண்டுக்கும் சேர்ந்திருத்தல் ஸம்பவிக்காதாகையால் அவிரோதம் ஸம்பவிக்காது. வித்யை அவித்யை இரண்டும் முறையே ஒரே ஆஶ்ரயத்திலிருக்கலாம் என்கிறோம் எனின்? அது பொருந்தாது. ஏன்? வித்யையுண்டானதும் அவித்யையானது நாசத்தையடைவதால் அதே ஆஶ்ரயத்தில் அவித்யையிருக்கமுடியாததாகவிருக்கிறது. அக்னியானது சூடும் ப்ரகாசமும்

---

ஸா நஸா ஹிம்ஸைதி கயஞூதெ)=சாஸ்திர மூலம் விதிக்கப்படும் யாகீய பசு ஹிம்ஸை ஹிம்ஸையாக ஒருபொழுதுமாகமாட்டாது என்பது கருத்து. (2) வித்யை அவித்யை இரண்டும் ஒரே புருஷனால் அனுஷ்டிக்கத்தக்கன என்ற வசனமிருப்பதால் என்று கருத்து.

**तदुत्पन्नं तस्मिन्नेवाश्रये शीतोऽग्निरप्रकाशो वा इत्यविद्याया उत्पत्तिः। नापि संशयोऽज्ञानं वा। "यस्मिन् सर्वाणि भूतानि आत्मैवाभूद्विजानतः। तत्र को मोहः कः शोक एकत्वमनुपश्यतः" इति शोकमोहाद्यसंभवश्रुतेः। अविद्यासंभवात्तदुपादानस्य कर्मणोऽप्यनुपपत्तिमवोचाम। "अमृतमश्नुते" इत्यापेक्षिकममृतं, विद्याशब्देन परमात्मविद्याग्रहणे हिरण्मयेनेत्यादिना द्वारमार्गादियाचनमनुपपन्नं स्यात्। तस्माद्यथाव्याख्यात एव मन्त्राणामर्थ इत्युपरम्यते ॥ १८ ॥**

**श्रीगोविन्दभगवत्पूज्यपादशिष्यस्य**
**इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यस्य**
**श्रीमच्छङ्करभगवतः कृतौ**
**वाजसनेयिसंहितोपनिषद्भाष्यं संपूर्णम् ॥**



---

உள்ளது என விக்ஞானமுண்டானதும் எந்த ஆஶ்ரயத்தில் (சித்தத்தில்) அவ்வறிவு உண்டாயிற்றே அதே ஆஶ்ரயத்தில் (சித்தத்தில்) அக்னி சீதமானது ப்ரகாசமற்றது என்ற அவித்யையின் உத்பத்தியோ, ஸம்சயமோ, அறியாமையோ ஏற்படமாட்டாதன்றோ. "ஆத்மைகத்வக்ஞானமுள்ளவர்க்கு எந்நிலையில் எல்லாம் ஆத்மாவாகவே ஆகுமோ அந்நிலையில் ப்ரம்ஹாத்மைகத்வத்தையனுபவிப்பவர்க்கு மோஹமேது? சோகமேது?" எனச் சோகமோஹாதிகளின் அஸம்பவத்தையுபதேசிக்கும் ஶ்ருதியுமிருக்கிறது. அவித்யை ஸம்பவிக்கமுடியாமற்போகவே அவ்வவித்யை காரணமாயேற்பட்ட கர்மத்துக்கும் ஸம்பவமில்லையெனச் சொல்லியுமிருக்கிறோம். "அமிருதத்தையடைகிறான்" என்பதால் ஆபேக்ஷிகமான அமிருதம் சொல்லப்படுகிறது. வித்யாசப்தத்தால் பரமாத்மவித்யையைக் கிரஹித்தோமானால் "**हिरण्मयेन पात्रेण** (ஹிரண்மயேந பாத்ரேண)=ஹிரண்மயேந பாத்ரேண" என்றதாதியால் துவாரம் வழி முதலியவற்றை யாசித்தது பொருத்தமற்றதாகவாகிவிடும். ஆகவே உபாஸனையுடன் ஸமுச்சயமேயொழிய பரமாத்மக்ஞானத்துடனன்று என்பதாய்

நாம் முன்னர் வியாக்கியானஞ் செய்யப்பட்டபடியே மந்திரங்களின் பொருள் ஏற்படுகிறதெனக் கூறி ஒய்வடைகிறோம். (18) (எ—று)

இவ்விதம் கோவிந்தபகவத்பூஜ்யபாதசிஷ்யரும் பரமஹம்ஸபரிவ்ராஜ
கார்சார்யருமான ஸ்ரீசங்கரபகவத்பாதரின் கிருதியில்
வாஜஸநேயிஸம்ஹிதோபநிஷத்பாஷ்யம் முற்றிற்று.





# கேனோபநிஷத்தின் முகவுரை.

இந்த உபநிஷத்தில் केनेषितम् (கேநேஷிதம்) என ஆரம்பம் காணப்படுவதால் அதையொட்டி இதற்குக் கேனோபநிஷத் என்றே பெயரிடப்பட்டது. இது ஸாமவேதத்திலுள்ள தலவகார சாகை யிற் சேர்ந்ததாகும். பொதுவாய் உபநிஷத்துக்கள் 108களென் றும், 1008களென்றும் சொல்லப்படினுங்கூட பகவத்பாஷ்யகாரர் அவர்கள் அவற்றுக்கெல்லாம் பாஷ்யம் செய்யாது ஈச, கேனாதி உபநிடதங்களுக்குமட்டுமே பாஷ்யஞ்செய்திருப்பதிலிருந்து அவற் றுள் பாஷ்யகாரர் அவர்களால் பாஷ்யம் செய்யப்பெற்ற இவ்வுப நிடதங்களே முக்கியமானவை எனத்தெள்ளிதில் புலனாகின்றது. அவ்விதம் அருமை தங்கின பாஷ்யஞ்செய்தருள ஸங்கற்பித்த பக வத்பாத பாஷ்யகாரர் அவர்கள் இவ்வுபநிடதத்துக்குமட்டும் பத பாஷ்யமென்றும், வாக்யபாஷ்யமென்றுமாக இருபாஷ்யங்கள் செய் திருக்கின்றனர். அவ்விரு பாஷ்யங்களையும் நாமும் தமிழில் பெ யர்த்து வெளியிட்டிருக்கிறோம். அவ்விரு பாஷ்யங்களுக்குமுள்ள வேறுபாட்டை ஆங்காங்கு நமது மொழிபெயர்ப்பில் காணக்கூடுமாத லால் இங்கு அதைவிரிக்க மனமில்லாதிருக்கின்றோம். மேலும், எல்லாவுபநிடதங்களும் ப்ரத்யக் ப்ரம்ஹைக்யோபதேசஞ் செய்வ தையே தமது முக்கிய நோக்காகக் கொண்டன என வியாஸாசாரி யரவர்கள் தமது ப்ரம்ஹ ஸூத்திரத்தில் गतिसामान्यात् (கதிஸாமா ந்யாத்) என்றதால் தெளிவாயுபதேசித்திருக்கின்றனராயினும் இவ்வுபநிடதமானது அத்தகைய ப்ரத்யக் ப்ரம்ஹைக்யத்தை மிக் கத் தெளிவான முறையிலுபதேசிப்பதால் அம்முறையைப் பின்னும் நன்கு விளக்கவேண்டியே பகவத்பாத பாஷ்யகாரர் அவர்கள் இதற்கு விரிவான இருபாஷ்யங்களைச் செய்தருளினர் எனப் பெரியார் கூறு கின்றனர். இவ்வுபநிடதத்தில் நான்கு கண்டங்களும், மொத்தம் 35 மந்திரங்களுமடங்கியிருக்கின்றன.

முதலாவது கண்டத்தில் 9 மந்திரங்களும்,
இரண்டாவது காண்டத்தில் 5 மந்திரங்களும்,
மூன்றாவது கண்டத்தில் 12 மந்திரங்களும்,
நான்காவது கண்டத்தில் 9 மந்திரங்களும் உண்டு.

முதலாவது கண்டத்திலுள்ள 8 மந்திரங்களுள் केनेषितम्......
देवो युनक्ति (கெநெஷிதம்......தெவொ யுநக்தி) என்ற முதல் மந்தி
ரத்தினால் மனஸ், ப்ராணன், வாக்கு, சக்ஷுஸ், ஶ்ரோத்ரம் ஆகிய
அசேதனங்களான இவை தத்தமக்குரிய விஷயங்களில் வழுவாது
செல்லுவதிலிருந்து அவற்றை ப்ரேரிப்பவன் ஒருவனிருக்கவேண்டு
மென்பது வெளிப்படை. அவன் உலகில் காணப்படுவதுபோலவே
தான் மனம் முதலியவற்றை ப்ரேரணை செய்கின்றானா? அல்லது
தனது ஸன்னிதிமாத்திரத்தினால் அவற்றின் ப்ரவிருத்திக்கு நிமித்த
மாகின்றானா? அவன் யார்? அவனது ஸ்வரூபமென்னை? அவனை
நான் எவ்விதமறிவது? அவனையறிவதால் வரும் பயன் என்னை?
என உத்தமாதிகாரியான சிஷ்யன் தனது ஆசிரியரைக்கேட்கிறான்.
இவ்விதம் கேட்ட யோக்யனான சிஷ்யனுக்குப் பதில் சொல்லத்
தொடங்கின ஆசிரியர் "அது காதுக்குக் காது, மனதுக்கும் மனது,
வாக்குக்கும் வாக்கு, ப்ராணனுக்கும் ப்ராணன், கண்ணுக்கும்
கண்ணு" என எவர்கள் அதையறிந்து ஶ்ரோத்ராதிகளில் ஆத்ம
பாவத்தைப் போக்கிக்கொண்டு தீரர்களாகின்றனரோ அவர்கள் இந்
தச் சரீரம்போனதும் முக்தர்களாகவாகின்றனர்" எனவுபதேசிக்கி
றார். இவ்விதமுபதேசிக்கும் ஆசிரியரின் கருத்துயாதெனில்? ஶ்ரோத்
ராதியான எல்லாவற்றுக்கும் ப்ரகாசகமான ப்ரம்ஹமே உள்ளில்
ப்ரத்யகாத்மாவாகப் பிரகாசிப்பதாகவறிபவன் ஸம்ஸாரபந்தத்தினின்
றும் விடுபட்டு முக்தனாகவாகிறான் என்பதாம். இவ்விதம் "श्रोत्रस्य
........अमृता भवन्ति" ("ஶ்ரோத்ரஸ்ய...........அம்ருதா பவந்தி")
என்ற இரண்டாவது மந்திரத்தாலுபதேசித்து ப்ரம்ஹமானது
சக்ஷுராதிகளான ஸர்வேந்திரியங்களுக்கும் புலப்படக்கூடியதன்று
ஆனதுபற்றி உலகிலுள்ள பொருளைப்போல "இது இவ்விதமென" ப்
பிரித்துக் காட்டக்கூடிய நிலையில் அந்த ப்ரம்ஹமில்லையாதலால்
காரியகாரணரூபமான ஸர்வப்பொருளையும்விட வேறுபட்டது என்று
தான் அதை ஒருவாறு அறியமுடியும் என "न तत्र चक्षुर्गच्छति...
...व्याचचक्षिरे" ("ந தத்ர சக்ஷுர்கச்சதி......வ்யாசசக்ஷிரே")
என்ற மூன்றாவது மந்திரத்தாலுபதேசித்து எது வாகாதிகளுக்குப்
புலப்படாததோ எதனால் வாகாதிகள் ப்ரகாசப்படுத்தப்பட்டு தத்
தமது காரியத்தைச் செய்கின்றனவோ அதையே நீ ப்ரம்ஹமாக
அறியவேண்டுமேயன்றி "இது இது" என அறிவுக்கெட்டும் பொ
ருளை ப்ரம்ஹமாகவெண்ணுதல் தகாது என்பதாய் "यद्वाचानभ्युदि-
तम्" ("யத்வாசாநப்யுதிதம்") என்று தொடங்கி "नेदं यदिदमु-

**पासते**" ("நேதம் யதிதமுபாஸதே") என்றதீறாகவுள்ள ஐந்து மந்திரங்களாலுபதேசிக்கிறார். இதிலிருந்து ப்ரம்ஹம் உபாஸ்யமான ஸகுணமன்றென்றும், க்ஞேயமான நிர்க்குணமென்றும், அதுவே ப்ரத்யகாத்மரூபமாக ப்ரகாசிக்கின்றதென்றும், ப்ரத்யக்ப்ரம்ஹ ஸாக்ஷாத்காரந்தான் முக்தி ஹேதுவென்றும் உபதேசிக்கப்பட்டதாகவேற்படுகிறது. இவ்விதம் முதலாவது கண்டம் முற்றுகிறது. இவ்விதம் ஆசிரியராலுபதேசிக்கப்பட்ட சிஷ்யன் "நானே ப்ரம்ஹம்" என்பதாய் என்னை நான் நன்கு அறிவேன் என எண்ணிவிடப்போகிறான் எனவாசங்கித்து ப்ரம்ஹத்தையறியும் முறையும், அவ்விஷயத்தில் வரும் சங்கைகளும், அதற்கு ஸமாதானங்களும், இப்பிறவியிலேயே அதையறிந்து மோக்ஷம் பெறல் வேண்டுமெனவும் இந்த இரண்டாவது கண்டத்திலுபதேசிக்கப்படுகிறது. மூன்றாவது கண்டத்தில் இந்திராதி பதவி பெற்றிருப்பவரும் கூட குரூபதேசமின்றி அதையறியமுடியாதவரேயாகிறார் என்று உபதேசித்து நான்காவது கண்டத்தில் சித்தைகாக்ரிய ஹேதுவான ஸகுணப்ரம்ஹோபாஸனமும், முடிவில் அதன் பலனான நிர்க்குண ப்ரம்ஹாத்மைக்ய ஸாக்ஷாத்காரமும் உபதேசிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே இந்தக் கேனோபநிஷத்தானது தெளிவாய் ப்ரம்ஹாத்மைக்ய ஸாக்ஷாத்காரத்தை யுபதேசிப்பதாற்றான் ஔவையாரிடம் ஒருவர் சென்று எந்த உபநிடதார்த்த விசாரத்தால் நான் மோக்ஷமடையக் கூடுமோ அதை எனக்குச் சொல்லவேண்டுமெனக் கேட்டதற்கு "கேட்டதைக் கேனத்தில் தேடு" என ஔவையார் பதில் சொன்னதாகவும் பெரியார் சொல்லுகின்றனர். ஆகவே இத்தகைய மஹிமை தங்கிய இவ்வுபநிடதத்தையும், அதன் சங்கர பாஷ்யத்தையும் எமது ஆசிரியர் அருளை முன்னிட்டு எனது சிற்றறிவுக்கெட்டிய வளவு தமிழில் பெயர்த்து வெளியிட்டிருக்கிறேன். ஆகவே அத்வைத வித்யா ப்ரியர்களான தமிழர் யாவரும் இப்பெரிய காரியத்திலிறங்கி இரவு பகலாய் வேலை செய்துவரும் என்னையாதரிக்க முன்வர வேண்டுமாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன்.


இங்ஙனம் சங்கரகிங்கரன்,

**கடலங்குடி நடேச சாஸ்திரிகள்,**

கஸ்தூரிரங்கவிலாஸ், நடேசய்யர் தெரு, புதுமாம்பலம்.

தேனாம்பேட்டை போஸ்டு, சென்னை.


[13–7–1933.]

# விஷய அட்டவணை.




பக்கம்.

கேனோபநிடதத்தின் சிறப்பைக் கூறல் ... 2

பாஷ்யகாரரவர்களின் அவதாரிகை. அதில் முமுக்ஷுவாக இருந்து கர்மம், உபாஸனம் இவற்றைக் காமனையின்றி செய்தால், அது சித்த சுத்திக்கு ஸாதனமென்றும், பலத்தில் விருப்பத்துடன் செய்தால் அது ஸ்வர்க்காதிலோக பிராப்த்திக்கும், மறுபிறப்புக்கும் ஸாதனமென்றும், இயற்கையிலமைந்த சாஸ்திர விருத்தமானப் பிரவிருத்தியானது பசு முதல் ஸ்தாவரமீறாகவுள்ள கீழ் பிறவிக்கு ஸாதனமென்றும் கூறல் ... 3–4

ப்ரத்யகாத்ம ப்ரம்ஹ விக்ஞானத்தால் மட்டுமே அக்ஞானம் நிவிருத்தமாகும் என்பது ... 5

கர்மத்துடன் கூடின க்ஞானம் அக்ஞானத்தை நிவிருத்தி செய்யலாமென்ற ஆக்ஷேபமும், அதன் ஸமாதானமும் 5–6

சிஷ்யன், ஆசார்யன் இவர்களின் ப்ரஸ்னோத்தரரூபமாய் இவ்வுபநிடதம் துவக்குவதின் காரணம் கூறல் ... 7

ஆசிரியரின் உபதேச மூலமேதான் இந்த ஆத்மதத்த்வம் அறியக்கூடியதாகுமென்பது ... ”

“கேநேஷிதம் பததி” என்ற மந்திரார்த்தம் ... 8

“மன:” என்பதற்கு ‘இஷிதம்’ ‘ப்ரேஷிதம்’ என இரண்டு விசேஷணங்களைக் கொடுத்ததின் பிரயோஜனம் கூறல் 9–10

மனது ஸ்வதந்திரமாகவே தனது விஷயத்தில் பிரவிருத்திக்கலாம் என்ற ஆக்ஷேபமும் அதன் ஸமாதானமும் 11–12

“ஶ்ரோத்ரஸ்ய ஶ்ரோத்ரம்” என்ற மந்திரார்த்தம் ... 13

“காதுக்குக் காதாகவும், கண்ணுக்குக் கண்ணாகவுமிருப்பது ப்ரம்ஹம்” என்று கூறியதின் கருத்து ... 14–15

ஶ்ரோத்ராதிகளில் ஆத்மபுத்தி இதனால் மறுக்கப்படுகின்றதென்பது ... 16

மந்திரத்தில் “வாசோ ஹ வாசம்” என்றவிடத்திலுள்ள “வாசம்” என்பதை ப்ரதமாவிபக்த்யந்தமாக மாற்ற வேண்டுமென்பதை ஸ்தாபித்தல் ... 17

ப்ரம்ஹம் ப்ராணனுக்குப் பிராணனாகவாகிறதென்பது ... 18

கண் முதலிய கரணஸமூஹ ப்ரேரகமான ப்ரம்ஹத்தையறிந்து மோக்ஷமடைகிறான் என்பது ... 19

பக்கம்.

"ந தத்ர சக்ஷுர்கச்சதி" என்ற மந்திரார்த்தம் ... 21
ப்ரம்ஹம் சக்ஷுராதிகரணங்களுக்கு விஷயமாகக் கூடியதல்லவென்பது ... 21–22
"அந்யதேவ தத் விதிதாத்" என்ற மந்திரத்தின் அர்த்தம்... 23
விதிதம், அவிதிதம் இவ்விரண்டைக் காட்டிலும் ப்ரம்ஹம் வெறுபட்டதென்பது ... 24
இவ்விதம் கூறியதால் 'ப்ரத்யக் ப்ரம்ஹம்' என்ற வாக்யார்த்தமேற்படுகின்றதென்பது ... 25
ப்ரம்ஹம் ஆசார்யோபதேச பரம்பரையினுலேயே அறியத்தக்கது என்பது ... 26
"யத்வாசா" என்ற மந்திரத்தின் அவதாரிகை. அதில் ஜீவ ப்ரம்ஹங்களுக்கு பேதம் தானிருக்கவேண்டும் என்று சங்கித்தல் ... "
"யத்வாசா அநப்யுதிதம்" என்ற மந்திரார்த்தம் ... 27
ஸ்போடாத்மக சப்தம் வாக் என்றதால் சொல்லப்படுகிறது என்பது ... 28
அந்தச் சப்தத்தினுல் ப்ரம்ஹம் சொல்லக்கூடியதல்லவென்பது ... 29
ப்ரத்யகாத்மஸ்வரூபமே ப்ரம்ஹமென்பது ... 30
அபூர்வவிதி, நியமவிதி, பரிஸங்க்யாவிதி இவற்றைக் கூறல் 31–32
"யன்மநஸா ந மனுதே" என்ற மந்திரார்த்தம் ... 33
"யத்சக்ஷுஷா" என்ற மந்திரார்த்தம் ... 34
"யத்ஶ்ரோத்ரேன" என்ற மந்திரார்த்தம் ... 53
"யத்ப்ராணேந ந ப்ராணிதி" என்ற மந்திரார்த்தம் ... 36

## இரண்டாவது கண்டம்.

"யதிமந்யஸே" என்ற மந்திரத்தின் அவதாரிகை. அதில் நான் ப்ரம்ஹம் என அறிவேன் என்று சிஷ்யன் எண்ணுவானேல் அது மித்யையான ப்ரம்ஹவிக்ஞானமே என்று கூறல் ... 38
"யதிமந்யஸே" என்ற மந்திரார்த்தம் ... 40
"யதிமந்யஸே" (ப்ரம்ஹத்தை நன்கு அறிவேன் என எண்ணுவாயேல்) என ஆசங்கையுடன் ஶ்ருதிகூறியதின் கருத்தை விளக்கல் ... 40–41
ப்ரம்ஹத்துக்கு நாமம், ரூபம் என்ற உபாதிகளால் செய்யப்பட்ட ரூபங்கள் பல உளவேயன்றி உண்மையில் எவ்விதரூபமுமில்லை என்பது ... 42

பக்கம்.


விக்ஞானதிவிசேஷணங்களினால் ப்ரம்ஹம் நிரூபிக்கப் படுவதால் ப்ரம்ஹம் விக்ஞானதிகளினால் ரூபமுள் ளதாக வாகும் என்ற ஆக்ஷேபமும் ஸமாதானமும்... 42–43
"நாஹ மந்யே" என்ற மந்திரார்த்தம் ... 45
"யஸ்யாமதம் தஸ்யமதம்" என்ற மந்திரார்த்தம் ... 48
"ப்ரதிபோதவிதிதம் மதம்" என்ற மந்திரார்த்தம் ... 51
ப்ரம்ஹம் ப்ரத்யகாத்மாவாக அறியப்படுமானல் அதுவே ஸம்யக்தர்சனமாகும் என்பது ... 52
ப்ரம்ஹம் போதக்ரியைக்குக்கர்த்தாவாகவாகிறது என்று கூறுபவர்களின் மதத்தை நிரூபித்துக் கண்டித்தல்... 53
ஆத்மாவானவன் ஸமவாயம் என்ற ஸம்பந்தத்தினால் க்ஞானதிகாரணனாகிறான் என்று கூறும் தார்க்கிகர் களின் மதத்தைக் கண்டித்தல் ... 54–55
"ப்ரதிபோதவிதிதம்" என்பதற்கு ஸ்வஸம்வேத்யம் என் பது அர்த்தமெனக் கூறுகிறவர்களின் மதத்தைக் கண்டித்தல் ... 56
நிமித்தமின்றி உண்டாகும்போதம் ப்ரதிபோத என்ற சப்தத்தினால் சொல்லப்படும் என்பவர்களின் மதத் தைக் கண்டித்தல் ... 58
"இஹசேதவேதீத்" என்ற மந்திரார்த்தம் ... 60–61


## மூன்றாவது கண்டம்.


"ப்ரம்ஹஹதேவேப்ய:" என்றதாதியால் கூறப்படும் கதா பாகத்துக்கு ப்ரம்ஹவித்யாஸம்பந்தத்தை விளக்கும் பாஷ்யமும், அதன் உரையும் ... 62–63
"ப்ரம்ஹ ஹ தேவோப்ய:" என்ற மந்திரார்த்தம் ... 64
"தத்தைஷாம் விஜக்ஞௌ" என்ற மந்திரார்த்தம் ... 65–66
"தேஜக்னிமப்ருவன்" என்றதாதி 3-வது மந்திரம் முதல் 6-வது மந்திரம் முடியவுள்ளபாகத்தின் அர்த்தம் ... 67, 69
"அத வாயும்" என்றதாதி 7-வது மந்திரம் முதல் 10-வது மந்திரம் முடியவுள்ள பாகங்களுக்கு அர்த்தம்... 70–71
"அதேந்த்ரமப்ருவன்" என்றதாதி 11-வது மந்திரத்துக் கும், "ஸ தஸ்மிந்நேவாகாசே" என்றதாதி 12-வது மந்திரத்துக்கும் அர்த்தம் ... 72–74


## நான்காவது கண்டம்.


"ஸா ப்ரம்ஹேதி ஹோ வாச" என்ற முதல் மந்திரார்த்தம் 75
"தஸ்மாத்வா ஏதே" என்றதாதி 2-வது மந்திரார்த்தம் ... 76
"தஸ்மாத்வா இந்த்ரோதிதராம்" என்றதாதி 3-வது மந்தி ரார்த்தம் ... 77

பக்கம்.

"தஸ்யைஷ ஆதேச:" என்றதாதி 4-வது மந்திரார்த்தம் ... 78

ஒருதடவை ஏற்பட்ட மின்னலின் ப்ரகாசத்தை ப்ரம்ஹத்துக்கு உபமானமாய் கூறலாம் என்று அதிதைவதமான உபமானத்தைக் காண்பித்தல் ... 79

"அதாத்யாத்மம்" என்றதாதி 5-வது மந்திரார்த்தம் ... 80

ப்ரம்ஹத்துக்கு அத்யாத்மமான உபமானத்தைக் கூறல் ... 81

"தத்த தத்வனமித்யுபாஸிதவ்யம்" என்றதாதி 6-வது மந்திரார்த்தம் ... 82

ப்ரம்ஹத்தை தத்வனமாக (எல்லாப் பிராணிகளாலும் நன்கு பஜிக்கத்தகுந்ததாக) எவன் உபாஸிக்கிறானோ அவனை எல்லாப் பிராணிகளும், பிரியப்படுகின்றனவென்பது ... 83

"உபநிஷதம் போப்ரூஹி" என்றதாதி 7-வது மந்திரார்த்தம் ,,

பரமாத்மவிஷயமான உபநிஷத்தை முன்னரே கேட்டறிந்த சிஷ்யன் மறுபடியும் இந்த 7-வது மந்திரத்தால் 'உபநிஷத்தைச் சொல்லும்' என்று கேட்பதின் கருத்தென்னை என்பதை விரிவாயுபதேசித்தல்... 84–87

"தஸ்யை தபோதம:" என்றதாதி 8-வது மந்திரார்த்தம் ... 88

ஆத்மக்ஞானத்தையடைவதற்கு தவம், தமம், கர்மங்கள் ஆகிய இவை முதலியன ஸாதனமாகின்றன என்பதை விளக்கல் ... 88–89

ஸத்யசப்தார்த்த நிரூபணமும், அதற்கு அஸ்வமேதாதி யாகங்களைக் காட்டிலும் சிறப்பும் ... 90

"யோவா ஏதாம்" என்றதாதி 9வது மந்திரத்தின் அர்த்தம். 91

மந்திரத்திலுள்ள "ஸ்வர்க்கே லோகே" என்றதாதி பதங்களுக்கு விரிவுரையையும், பயனையும் கூறல் ... 92

பதபாஷ்யத்தின் விஷய அட்டவணை முற்றிற்று.



## கேனோபநிஷத் வாக்யபாஷ்யம்.

### முதல் கண்டம்.

"கேனேஷிதம்" என்றதாதி உபநிஷத்தை ஆரம்பித்ததற்கு ஸங்கதியைக் கூறல் ... 93

கர்மத்தைப் பற்றி உபதேசிக்குமிடத்தில் இந்த ஆத்மதத்வம் ஏன் உபதேசிக்கப்படவில்லை என்றகேள்வியும், கர்மத்துக்கும், ஆத்மதத்வத்துக்கும் விரோதமிருப்பதால் கர்மப்ரகரணத்தில் ஆத்மதத்வம் உபதேசிக்கப்படவில்லை என்ற பதிலும் ... 94

பக்கம்.

கர்மங்கள் பந்தஹேதுக்களாயிருப்பன பற்றி விடத்தக்கனவாயின் அவற்றின் உபதேசாரம்பம் பயனற்றதேயாகும் என்ற கேள்வியும், நிஷ்காமனுக்கு சித்தசுத்திக்கு ஸாதனமாவதால் அவற்றின் உபதேசம் ஸபலமேயாகும் என்ற ஸமாதானமும் ... 95

ஆத்மக்ஞானத்தை யடைந்தபிறகோவெனில் அவனைக் குறித்து கர்மங்கள் ஆரம்பிக்கப்படவில்லை என்பது... 96–97

நித்யமான ஆத்மவஸ்துவுக்கு கர்மத்தினுலுண்டாகக் கூடிய உத்பத்யாதியான ஸம்ஸ்காரங்களையடைதல் ஸம்பவிக்காதென்பதை விரிவாயுபதேசித்தல் ... 97–98

"கேநேஷிதம்" என்ற முதல் மந்திரத்தின் பாஷ்யம் ...99–100

"ஶ்ரோத்ரஸ்ய ஶ்ரோத்ரம்" என்ற மந்திர பாஷ்யம் ... 100

ஆத்மாவுக்கு ஶ்ரோத்திரம் முதலிய இந்திரிய ப்ரேரகத்வத்தை ஸ்தாபித்தல் ... 101

"ந தத்ர சக்ஷு:" என்ற மந்திர பாஷ்யம் ... 104

"அன்யதேவ தத்விதிதாத்" என்ற மந்திர பாஷ்யம் ... 106

விதிதம் அவிதிதம் இவற்றைக்காட்டிலும் ப்ரம்ஹம் வேறுபட்டதென்பதை ஸ்தாபித்தல் ... 107

ஆத்மாவுக்கு வேறு விக்ஞானபேக்ஷை கிடையாதென்றால் லௌகிகமான அனுபவத்துக்கு விரோதமும், சாஸ்திர விரோதமும் வரும் என்ற ஆக்ஷேபமும் ஸமாதானமும் ..108–110

"தத்வமஸி" என்றதாதிகளால் ஆத்மபோதோபதேசம் செய்ததின் கருத்து ... 111

ஆத்மாவுக்கு விதிதம் அவிதிதம் இவற்றைக்காட்டிலும் வேற்றுமையை வேறு முறையினுல் விளக்கல் ... 112

"யத்வாசா" என்ற 5-வது மந்திரம் முதல் 9-வது மந்திரம் முடியவுள்ள மந்திரங்களின் பாஷ்யம் ..113–115

## இரண்டாவது கண்டம்.

"யதி மந்யஸே ஸுவேதேதி" "நாஹமந்யே" என்ற மந்திரங்களின் பாஷ்யம் ..116–121

"யஸ்யாமதம்" என்ற மந்திரத்தின் பாஷ்யம் ... 121

அனவதிகமான க்ஞானம் மித்யை என்பதை ஸ்தாபித்தல்... 122

"அவிக்ஞாதம் விஜானதாம்" என்றதாதி பாகத்தை ஹேதூபதேசபரமாக வியாக்கியானம் செய்தல் ... 123

பக்கம்.

"ப்ரதிபோதவிதிதம்" என்ற மந்திரத்தின் பாஷ்யம் ... 124

ஒவ்வொரு புத்திவிருத்திக்கும் ப்ரகாசத்தைத் தரும் ப்ரத்யகாத்மத் தன்மையினால் எது அறியப்பட்டதோ அது ப்ரம்ஹம் என்றும், அத்தகைய க்ஞானமே ஸம்யக்ஞானம் என்றும் ஸ்தாபித்தல் ... 125

மோக்ஷமானது ப்ராப்தி பூர்வகமன்று, பின்னையோவெனில் ஸ்வஸ்வரூபாவஸ்தானரூபம் என்று ஸ்தாபித்தல் 126

முற்கூறிய மோக்ஷத்தில் வித்யைக்கு உபயோகம் கூறல் ... 127

"இஹ சேதவேதீத்" என்ற மந்திரபாஷ்யம் ... 128–129

மூன்றாவது கண்டம்.

"ப்ரம்ஹ ஹ தேவேப்ய:" என்ற மந்திரத்தின் பாஷ்யம்... 130

ப்ரம்ஹ ஹ என்ற தாதியால் சொல்லப்படும் கதா பாகத்துக்கு உபநிஷத்தில் உபயோகம் கூறல் ... 131

அனுமான ப்ரமாணத்தால் ஈஸ்வரன் ஒருவனிருக்கிறானென்பதை ஸ்தாபித்தல் ... 132

ஜகத்தில் காணப்படும் போக வைசித்திரியமானது ஈஸ்வரனை எதிர்பாராது கர்மமூலமே உண்டாகலாமென்ற ஆக்ஷேபமும், ஸமாதானமும் .... 133

கர்மத்தைச் செய்தவனே பலகாலத்தில் அக்கர்மத்தைப் பலன்கொடுக்கும்படி தூண்டுகிறான் என்ற ஆக்ஷேபமும் ஸமாதானமும் ... 134

கர்மமானது பூதாஸ்ரயமாக இருந்துகொண்டு பலனைத் தருகின்றதென்ற ஆக்ஷேபமும் ஸமாதானமும் ... 135

சாஸ்திர ப்ராமாண்யத்தை யனுஸரித்து ஈஸ்வரனை எதிர்பாராது கர்மத்தினிடமிருந்தே பலனுண்டாகின்றதென்ற ஆக்ஷேபமும், ஸமாதானமும் ... 136

ஈஸ்வரனே எல்லா ஜீவர்களுக்கும் ஆத்மாவாகிறான் என்பது 137

"ஈஸ்வரனில்லை"! என்று சாஸ்திரத்தில் மறுக்கப்படாததாலும் ஈஸ்வரஸித்தி ஏற்படுகின்றதென்பது ... 138

பதார்த்தங்களின் இயற்கையான ஸ்வபாவத்தை நூற்றுக்கணக்கான சாஸ்திரங்களாலும் மாற்றமுடியாததாகையால் நஷ்டமான கர்மமும் சாஸ்திர ப்ராமாண்யத்தையொட்டி பலனைத்தருகின்றதென்ற கல்பனை பொருந்தாதென்பது ... 139

பக்கம்.
ஜீவேஸ்வரர்களுக்கு அபேதத்தை ஸாதித்தல் ... 140
ஞானம், சக்தி, கர்மம் முதலியவற்றால் ஜீவேஸ்வரர்களுக்கு பேதமேதான் கொள்ளவேண்டும் என்ற ஆக்ஷேபமும் ஸமாதானமும் ..141–143
ஜீவேஸ்வராபேதமிருந்தால் பந்தமோக்ஷவ்யவஹாரத்துக்கு நிமித்தம் என்னை என்ற கேள்விக்குப் பதில் கூறல் 144
ஈஸ்வரன் ஒருவனுக்கே ஒன்றுக்கொன்று முறண்பாடுள்ள லக்ஷணமிருப்பதாக கூறுவதும், சுகதுக்காதிகளின் சேர்க்கையும் பொருந்தாதென்ற ஆக்ஷேபமும் ஸமாதானமும் ..145–146
ஜீவேஸ்வராபேத ஸாதனத்துக்கு உபஸம்ஹாரம் ... 147
"தத்தைஷாம்" என்ற இரண்டாவது மந்திர பாஷ்யம் ... 148
"தேக்நிமப்ருவன்" என்றதாதி 3-வது மந்திரம் முதல் 11-வது மந்திரம்முடியவுள்ள மந்திரங்களின் பாஷ்யம்... 149
"ஸ தஸ்மிந்நாகாசே" என்ற 12-வது மந்திர பாஷ்யம் ... 150

## நான்காவது கண்டம்.

"ஸா ப்ரம்ஹேதி ஹோ வாச" என்றதாதி மந்திர பாஷ்யம் 151
"தஸ்யைஷ ஆதேச:" என்ற மந்திர பாஷ்யம் ... 152
அதிதைவதோபாஸன விதி ... ,,
"அதாத்யாத்மம்" என்ற மந்திர பாஷ்யமும், அத்யாத்மோபாஸனவிதியும் ... 153
"தத்த தத்வனம்" என்ற மந்திர பாஷ்யமும், அத்யாத்மோபாஸனத்தில் குணவிதியும் ... 154
"உபநிஷதம் போப்ரூஹி" என்ற மந்திர பாஷ்யம் ... 155
"தஸ்யை தபோ தம:" என்ற மந்திர பாஷ்யம் ... ,,
"யோ வா ஏதாமேவம்" என்ற மந்திர பாஷ்யம் ... 156

விஷய அட்டவணை முற்றிற்று.



ॐ तत् सत् ॥

# ॥ केनोपनिषत् ॥

**सर्वोपप्लवरहित: प्रज्ञानघन: प्रत्यगर्थो ब्रह्मैवाहमस्मि ॥**

ஸர்வோபப்லவரஹித: ப்ரஜ்ஞாநகந: ப்ரத்யகர்த்தோ ப்ரஹ்மைவாஹமஸ்மி ॥

## प्रथम: खण्ड: ॥

**ओं, सहनाववतु । सह नौ भुनक्तु । सहवीर्यं करवावहै । तेजस्विनावधीतमस्तु मा विद्विषावहै । ओं शान्ति:, शान्ति:, शान्ति: ॥**

**आप्यायन्तु ममाङ्गानि वाक्प्राणश्चक्षु: श्रोत्रमथो बलमिन्द्रियाणि च सर्वाणि सर्वं ब्रह्मौपनिषदं माहं ब्रह्म निराकुर्यां मामा ब्रह्म निराकरोदनिराकरणमस्त्वनिराकरणं मेऽस्तु तदात्मनि निरते य उपनिषत्सु धर्मास्ते मयि सन्तु ते मयि सन्तु । ओं शान्ति:, शान्ति:, शान्ति: ॥**

---

# கேநோபநிஷத் பாஷ்யம்.

## கண்டம் 1.

அவதாரிகை.—வேதாந்த விசாரத்திலீடுபட்ட ஒருவர் **"अनन्त शास्त्रं बहुवेदितव्यं स्वल्पश्च कालो बहवश्च विघ्ना:"** ("அநந்தஶாஸ்த்ரம் பஹுவேதிதவ்யம் ஸ்வல்பஶ்ச காலோ பஹவஶ்ச விக்நா:") (சாஸ்திரமோ அனந்தமானது, அறியவேண்டுவதோ வெகுவாக இருக்கிறது. அதற்குவேண்டிய ஆயுள் காலமோ அற்பமாகவிருக்கிறது. இவ்வற்பகாலத்திலும் இதையறிய முயர்ச்சிப்பவர்க்கு இடையூறே

**"केनेषितम्" इत्याद्योपनिषत्परब्रह्मविषया वक्तव्येति नवमस्याध्यायस्यारंभः। प्रागेतस्मात्कर्माण्यशेषतः परिसमापितानि, समस्तकर्माश्रयभूतस्य च प्राणस्योपासनान्युक्तानि, कर्माङ्गसामविषयाणि च। अनन्तरं**

---

அளவுகடந்ததாகவிருக்கிறது) என்றேங்கி என்செய்வதென்றறியாது தயங்கி ஒரு ஸித்தபுருஷரை முறைப்படி அணுகி இந்நிலையிலுள்ளவன் வேதாந்தங்களுள் எதைவிசாரித்தறிந்தால் தத்த்வஸாக்ஷாத்காரமுண்டாகுமோ அதையுபதேசிக்கவேண்டுமென வேண்டினர். அதுகேட்டதும் அப்பெரியார் **तत्त्वमसि** (தத்த்வமஸி) முதலிய மஹாவாக்யோபதேசம் பெறுவதாலேயே நீகோரிய தத்த்வஸாக்ஷாத்காரத்தைச் சுளுவிலடைந்துவிடலாமென உபதேசிக்கவெண்ணங்கொண்டவராயினும் கேட்பவரின் மனோநிலையையறிந்து **"கேட்டதைக் கேநத்தில் தேடு"** எனவுபதேசித்தனர். அதுகேட்டதும் இவரும் கேநோபநிடதத்தை ஸத்குரு மூலம் விசாரித்தறிந்து தான் கோறிய பலனையடைந்தார் எனச் சொல்லுவதுண்டு. ஆகவே இந்த உபநிடதமானது ஏனையவுபநிடதங்கள் போலல்லாது தத்த்வஸாக்ஷாத்காரமுறையை அங்கை நெல்லிக்கனிபோல் விளக்குகின்றதென இதனின்றும் பெறப்படுகிறது. ஆகவே இவ்வளவருமைதங்கிய இதையும், அதன் பாஷ்யத்தையும் நாமறிந்தவரை தமிழில் பெயர்க்கிறோம். இது நான்கு **கண்டங்களாகப்** பிரிக்கப்பட்டிருக்கின்றது. அவற்றுள் முதல் கண்டத்தில் 9 மந்திரங்களும், 2-வது கண்டத்தில் 5 மந்திரங்களும், 3-வது கண்டத்தில் 12 மந்திரங்களும், 4-வது கண்டத்தில் 9 மந்திரங்களும் அடங்கியிருக்கின்றன. அவற்றுள் முதலாவது கண்டத்தின் முதலாவது மந்திரத்தின் அவதாரிகா பாஷ்யம் பின் வருமாறு—

அவதாரிகா பாஷ்யம்.—கேநேஷிதம் என்றதாதி பரப்ரம்ஹ விஷயமான உபநிஷத்தை யுபதேசிக்கவேண்டி ஒன்பதாவது அத்தியாயமாரம்பிக்கப்படுகிறது. இதற்கு முந்தியுள்ள 8 அத்தியாயங்களில் மீதமின்றி கர்மங்கள் முடிக்கப்பட்டன. எல்லாக்கர்மங்களுக்கும் ஆஶ்ரயபூதனான ப்ராணனுடைய ஸ்வதந்திர உபாஸனங்களும், கர்மாங்கமான ஸாமத்தை விஷயமாகக்கொண்ட (கர்மாங்காவபத்தங்களான) உபாஸனங்களும் உபதேசிக்கப்பட்டன. அதன் பின்ன

च गागत्रसामविषयं दर्शनं वंशान्तमुक्तं कार्यम्। सर्वमेतद्यथोक्तं कर्म च ज्ञानं च सम्यगनुष्ठितं निष्कामस्य मुमुक्षोः सत्वशुद्ध्यर्थं भवति। सकामस्य तु ज्ञानरहितस्य केवलानि श्रौतानि स्मार्तानि च कर्माणि दक्षिणमार्गप्रतिपत्तये पुनरावृत्तये च भवन्ति। स्वाभाविकयात्वशास्त्रीयया प्रवृत्त्या पश्वादिस्थावरान्ताऽधोगतिः स्यात्। "अथैतयोः पथोर्नकतरेणचन तानीमानि क्षुद्राण्यसकृदावर्तीनि भूतानि भवन्ति। जायस्व म्रियस्वेत्येतत्तृतीयं स्थानम्" इति श्रुतेः। "प्रजा ह तिस्रोऽत्यायमीयुः" इति मन्त्रवर्णात्। विशुद्ध-

---

ரும் காயத்ரம் என்ற ஸாமத்தைப்பற்றிய உபாஸனமுபதேசிக்கப் பட்டதுடன், அவ்வுபாஸனம் எந்தக்குரு சிஷ்ய பரம்பரையாக வருகிறதோ அந்த குரு சிஷ்யவம்சமு முபதேசிக்கப்பட்டது. இதுவரை உள்ளபடி உபதேசிக்கப்பட்டதும் (புருஷனால்) செய்யக்கூடியதுமான கர்மம் க்ஞானம் (உபாஸனம்) என்ற இவையாவும் நன்கு அனுஷ்டிக்கப்படுமாயின் நிஷ்காமனுன முமுக்ஷுவுக்கு சித்த சுத்தியைத் தருவதாகவாகிறது. உபாஸனஞ் செய்யாதவனும் பல காமனையுள்ளவனுமானவனுக்கு உபாஸனவிநிர்முக்தங்களும் சுருதியிலும் ஸ்மிருதியிலுமுபதேசிக்கப்பட்டனவுமான கர்மங்கள் தக்ஷிணயன மார்க்கத்தையடைவிக்கக் கூடியனவாகவும் திரும்பவும் ஜன்மத்தைத் தருவனவாகவுமாகின்றன. ராகத்வேஷாதிகள் காரணமாக ஏற்படுகிறதும் சாஸ்திர ஸம்மதியற்றதுமான ப்ரவிருத்தியினுல் பசுதொடங்கி மரமீருகவுள்ள அதோகதியானது (கீழான பிறவியானது) ஏற்படுகிறது. "பின்னர் கர்மம் க்ஞானம் என்ற இவ்விரு வழிகளில் ஒன்றிலும் செல்லாதவர் க்ஷுத்ரங்களும் அடிக்கடி பிறப்பிறப்பையடையக்கூடியனவுமான அந்த இந்தப் பூதங்களாக (பிராணிகளாக) பிறக்கின்றனர். பிறப்பதும் இறப்பதுமாகவுள்ள இந்தப்பிறவி மூன்ருவதாகும்" என ஶ்ருதியிருக்கிறது "மூன்று விதங்களான (கர்ப்பப்பையினின்றுமுண்டானவும், முட்டையினின்றுமுண்டானவும், பூமியினின்றும் முளைத்தனவுமான) பிராணிகள் அத்யாயத்தை=தேவயான பித்ருயாணமென்ற இரண்டுமார்க்கங்களுமல்லாத வேறு கஷ்டமான கதியை அடைகின்றன" என மந்திர வர்ணமுமிருக்கிறது. சுத்தமான சித்தமுள்ளவனும், வெளியிலுள்

सत्त्वस्य तु निष्कामस्यैव बाह्यादनित्यात्साध्यसाधनसंबन्धादिहकृतात्पूर्वकृताद्वा संस्कारविशेषोद्भवाद्विरक्तस्य प्रत्यगात्मविषया जिज्ञासा प्रवर्तते । तदेतद्वस्तु प्रश्नप्रतिवचनलक्षणया श्रुत्या प्रदर्श्यते केनेषितमित्याद्यया । काठके चोक्तम्—"पराञ्चि खानि व्यतृणत्स्वयंभूस्तस्मात्पराङ्पश्यति नान्तरात्मन् । कश्चिद्धीरः प्रत्यगात्मानमैच्छदावृत्तचक्षुरमृतत्वमिच्छन्" इत्यादि । "परीक्ष्य लोकान्कर्मचितान्ब्राह्मणो निर्वेदमायान्नास्त्यकृतः कृतेन । तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत्समित्पाणिः श्रोत्रियं ब्रह्मनिष्ठम् ।" इत्याद्याथर्वणे च ।

एवं विरक्तस्य प्रत्यगात्मविषयं विज्ञानं श्रोतुं मन्तुं विज्ञातुं च साम-

---

ளதும் ஆனதுபற்றியே அநித்யமுமான ஸாத்யஸாதன ஸம்பந்தத்தினின்றும் ஆசையொழிந்தவனும் இப்பிறவியில் செய்யப்பட்டதாகவோ முற்பிறவிகளிற் செய்யப்பட்டதாகவோ உள்ள ஸம்ஸ்கார விசேஷத்தின் ஆவிர்ப்பாவத்தால் வைராக்கியத்தையடைந்தவனுமாக உள்ளவனுக்கே ப்ரத்யகாத்மவிஷயமான ஜிக்ஞாஸையேற்படுகிறது. அந்த இந்தப்பொருளானது ப்ரச்னப்ரதிவசனரூபமானதும் கேநேஷிதம் என்றதாதியானதுமான ச்ருதியினுலுபதேசிக்கப்படுகிறது. அவ்விதமே காடகத்திலும் "ஸ்வயம்பூவானவர் (ஈச்வரன்) இந்திரிடங்களை வெளிநோக்குள்ளனவாகச்செய்து ஹிம்ஸித்து (கெடுத்து) விட்டார். ஆனதுபற்றியேதான் (ஜீவன்)வெளிநோக்குகின்றனேயொழிய அந்தராத்மாவை (ப்ரத்யகாத்மாவை) நோக்குவதில்லை. வெளியினின்றும் திருப்பின அறிவுள்ளவனும் அமிருதத்வத்தில் விருப்பமுள்ளவனும்,தீரனும் (புத்தியைத்தன்வசமாக்கினவனும்) ஆன ஒருவன் ப்ரத்யகாத்மாவைக்காண்கிறான்' என்றதாதியாற் சொல்லப்பட்டுமிருக்கிறது. "ப்ராம்ஹணன் கர்மாவினுல்கிடைத்த லோகங்களை பரீக்ஷித்தறிந்து கிருதத்தினுல்=கர்மத்தினுல், அகிருதமான=நித்யமான மோக்ஷமானது கிட்டாது என வைராக்கியத்தை யடையவேண்டும்" (ப்ரம்ஹத்தையறிய ஆவல்கொண்ட) "அவன் ஸமித்தைக்கையிற் கொண்டு அதை (ப்ரம்ஹத்தை) யறிவதற்குவேண்டி ச்ரோத்ரியரும் ப்ரம்ஹநிஷ்டருமான குருவையே அடையவேண்டும்" என்றதாதியால் கடோபநிடதத்திலுஞ் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதம்

र्थमुपपद्यते नान्यथा। एतस्माच्च प्रत्यगात्मब्रह्मविज्ञानात्संसारबीजमज्ञानं कामकर्म प्रवृत्तिकारणमशेषतो निवर्तते। तत्र "को मोहः कः शोक एकत्वमनुपश्यतः" इति मन्त्रवर्णात्, "तरति शोकमात्मवित्" "भिद्यते हृदयग्रन्थिश्छिद्यन्ते सर्वसंशयाः। क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन्दृष्टे परावरे" इत्यादि श्रुतिभ्यश्च। कर्मसहितादपि ज्ञानादेतत्सिद्ध्यतीतिचेन्न। वाजसनेयके तस्यान्यकारणत्ववचनात्। "जाया मे स्यात्" इति प्रस्तुत्य "पुत्रेणायं लोको जय्यो नान्येन कर्मणा, कर्मणा पितृलोको विद्यया देवलोकः"

---

வைராக்கியத்தையடைந்தவனுக்கு ப்ரத்யகாத்மவிஷயமான விக்ஞானத்தை ஶ்ரவணஞ்செய்வதற்கும் மனனஞ்செய்வதற்கும், அனுபவிப்பதற்கும் ஸாமர்த்யமுண்டாகுமேயொழிய வேறுமுறையிலில்லை. இத்தகைய ப்ரத்யகாத்ம விஷயமான விக்ஞானத்தினுல் (அபரோக்ஷ ஸாக்ஷாத்காரத்தினுல்) தான் ஸம்ஸாரத்துக்குக்காரணமானதும் காமம் கர்மம் இவற்றின் ப்ரவிருத்திக்குக் காரணமானதுமான அக்ஞானமானது முற்றிலும் விலகுகிறது. "ஏகத்வத்தை ஸாக்ஷாத்கரிப்பவர்க்கு அந்நிலையில் மோஹமேது சோகமேது" என மந்த்ரவர்ணமிருக்கிறது. "ஆத்மாவையறிந்தவர் சோகத்தை (சோக பகுளமான ஸம்ஸாரத்தை) க் கடக்கிறார்" என்றும், "பராவரமான அந்த ப்ரம்ஹமானது பார்க்கப்பட்டதும் இவரது கர்மங்கள் தேய்ந்துவிடுகின்றன. ஸர்வஸம்சயங்களும் சிதறிப்போகின்றன, ஹிருதயக்ரந்தியும் (மூலாக்ஞானமும்) நாசத்தையடைகிறது" என்றுமாகிய ஶ்ருதிகளுமிருக்கின்றன.

கர்மத்துடன் கூடின க்ஞானத்தினின்றுங்கூட இது ஸித்திக்கலாம் என்கிறோம் எனின்? அது பொருந்தாது. வாஜஸநேயகத்தில் அதை (கர்மத்துடன் கூடின க்ஞானத்தை) வேறொன்றுக்குக் காரணமாகக் கூறும் வசனமிருப்பதே அதன் காரணமாகும். அதாவது: (ப்ரம்ஹசாரியான நிலையிலிருப்பவன்) "எனக்கு ஜாயை (பத்னி) ஏற்படவேண்டும்" எனவெண்ணினுன் என்று தொடங்கி "புத்திரனுல் இந்த லோகம் ஜயிக்க (அடைய) த்தக்கதேயொழிய வேறு கர்மத்தாலன்று. கர்மத்தால் பித்ருலோகமும் வித்யையினுல் தேவலோகமும் அடையத்தக்கது" என்பதாய் ஆத்மாவைக் காட்டிலும்

इत्यात्मनोऽन्यस्य लोकत्रयस्य कारणत्वमुक्तं वाजसनेयके। तत्रैव च पारि-व्राज्यविधाने हेतुरुक्तः—"किं प्रजया करिष्यामो येषां नोऽयमात्माऽयं लोकः" इति। तत्रायं हेत्वर्थः—प्रजा कर्मतत्संयुक्तविद्याभिः मनुष्यपितृ-देवलोकत्रयसाधनैरनात्मलोकप्रतिपत्तिकारणैः किं करिष्यामः। नचास्माकं लोकत्रयमनित्यं साधनसाध्यमिष्टं, येषामस्माकं स्वाभाविकोऽजोऽजरोऽमृ-तोऽभयो न वर्धते कर्मणा नो कनीयान्नित्यश्च लोक इष्टः। स च नित्य-त्वान्नाविद्यानिवृत्तिव्यतिरेकेणाऽन्यसाधननिष्पाद्यः। तस्मात्प्रत्यगात्मब्रह्म विज्ञानपूर्वकः सर्वैषणासन्न्यास एव कर्तव्य इति। कर्मसहभावित्वविरो-धाच्च प्रत्यगात्मब्रह्मविज्ञानस्य। नहि उपात्तकारकफलभेदविज्ञानेन कर्मणा

---

வேறான லோகத்ரயத்தைக் குறித்து காரணத்வம் அதர்க்கு வாஜஸ நேயகத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. அதேவிடத்தில் எந்தநமக்கு இதுவே ஆத்மாவோ இதுவே லோகமோ அந்த நாம் ப்ரஜையினால் என்ன செய்யப்போகிறோம்" என்பதாய் பாரிவ்ராஜ்யத்தில் (ஸன் யாஸத்தில்) காரணமானது சொல்லப்பட்டிருக்கிறது. அங்கு சொல் லிய காரணபோதகஸ்ருதியின் பொருள் பின்வருமாறு—மனுஷ்யலோ கம்,பித்ருலோகம்,தேவலோகம் என்ற மூன்றுக்கும் ஸாதனமானவை களும் அனாத்மலோக ப்ராப்திக்குக்காரணமானவைகளுமான ப்ரஜை, கர்மம், இவற்றுடன் கூடின வித்யை(உபாஸனம்)இவைகளால் யாது செய்யப்போகிறோம். நமக்குஸாதனத்தாலுண்டாகக்கூடியதும் அநித் யமுமான லோகத்ரயமானது இஷ்டமானதல்லவே. எந்தநமக்கு இயற் கையிலமைந்துள்ளதும் பிறப்பற்றதும் ஜரை (மூப்பு) அற்றதும் மரண மற்றதும் பயமற்றதும் கர்மத்தினால் விருத்தியை (வளர்ச்சியை) யடையாததும், குறையாததும் நித்யமுமான லோகமன்றோ இஷ்ட மானது. அதுவும் நித்யமானதுபற்றி அவித்யா நிவிருத்தியைத் தவிர்த்து வேறு ஸாதனத்தினாலுண்டாகக் கூடியதுமன்று. ஆகவே ப்ரத்யகாத்மரூபமான ப்ரம்ஹவிக்ஞானத்தை முன்னிட்டு அல்லது எதிர்பார்த்து ஸர்வ ஏஷணைகளின் ஸன்னியாஸந்தான் செய்யவேண் டுவதாகவாகிறது என்றும். ப்ரத்யகாத்ம ரூபமான ப்ரம்ஹத்தின் விக்ஞானமானது கர்மத்துடன் கூடியிருப்பதென்பது முறண்படுவ தாகவுமிருக்கிறது. காரணமாகவபேக்ஷிக்கப்பட்ட காரகம் (கர்மத்

प्रत्यस्तमितसर्वभेददर्शनस्य प्रत्यगात्मब्रह्मविषयस्य सहभावित्वमुपपद्यते। वस्तु प्राधान्ये सत्यपुरुषतन्त्रत्वाद्ब्रह्मविज्ञानस्य। तस्माद्दृष्टादृष्टेभ्यो बाह्य-साधनसाध्येभ्यो विरक्तस्य प्रत्यगात्मविषया ब्रह्मजिज्ञासेयं केनेषितमित्या दिश्रुत्या प्रदर्श्यते॥ शिष्याचार्यप्रश्नप्रतिवचनरूपेण कथनं तु सूक्ष्मवस्तु-विषयत्वात्सुखप्रतिपत्तिकारणं भवति। केवलतर्कागम्यत्वं च दर्शितं भव-ति। "नैषा तर्केण मतिरापनेया" इति श्रुतेश्च। "आचार्यवान्पुरुषो वेद, आचार्याद्धैव विद्या विदिता साधिष्ठं प्रापत्" इति "तद्विद्धि प्रणिपातेन' इत्यादिश्रुतिस्मृतिनियमाच्च। कश्चिद्गुरुं ब्रह्मनिष्ठं विधिवदुपेत्य प्रत्यगात्म-विषयादन्यत्र शरणमपश्यन्नभयं नित्यं शिवमचलमिच्छन्पप्रच्छेति कल्प्यते-

---

தைக்குப் போதியன) பயன் இவற்றின் பேதக்ஞானத்தையுடைய கர்மத்துடன் அழிக்கப்பட்ட எல்லா பேதக்ஞானத்தையுமுடைய ப்ரத்யகாத்மரூபமான ப்ரம்ஹத்தை விஷயமாகக்கொண்டக்ஞானத் தைக்கு சேர்ந்திருத்தல் (கர்மம் ப்ரம்ஹக்ஞானம் இரண்டுக்கும் ஒரே இடத்திலிருத்தல்) பொருந்தமாட்டாதன்றோ. ப்ரம்ஹ விக்ஞான மானது வஸ்துவை (ப்ரம்ஹத்தை) ப்ரதானமாகக் கொண்டிருப்ப துடன் புருஷனது ப்ரயத்னத்தினை யபேக்ஷிக்காததாகவுமிருக்கி றது. ஆனதுபற்றி திருஷ்டாதிருஷ்ட ரூபங்களானதும் வெளியி லுள்ள ஸாதனத்தினால் ஸாத்யமானதாகளுமானவற்றிலிருந்து வை ராக்கியத்தையடைந்தவர்க்கு ப்ரத்யகாத்மாவைவிஷயமாகக்கொண்ட இந்த ப்ரம்ஹ ஜிக்ஞாஸையானது "கேநேஷிதம்" என்றதாதி ஸ்ரு தியினால் காண்பிக்கப்படுகிறது. சிஷ்யனுடைய கேள்வியும் ஆசாரி யனுடைய ப்ரதிவசனரூபமுமாகச் சொன்னதோவெனில் ஸூக்ஷ்ம மான பொருளைப்பற்றியதாகவிருப்பதால் சுகமாக அறிதற்குக்காரண மாகவாகும் என்பது பற்றியாம். இதனின்றும் கேவல (தனித்த) யுக்திக்கு விஷயமாகக்கூடியதன்று என்பதும் காட்டப்பட்டதாக வாகிறது. "இந்த ப்ரத்யகாத்ம ப்ரம்ஹ விஷயமான அறிவானது தர்க்கத்தினால் (தனித்த யுக்தியினால்) அடையக்கூடியதன்று" என ஸ்ருதியுமிருக்கிறது. "சிறந்த ஆசிரியரையடைந்த புருஷன் (அதை) அறிகிறான்" "ஆசாரியனிடமிருந்து அறியப்பட்ட வித்யையே பலந் தரும் தன்மையையடைந்திருக்கிறது" என்றும், "அதை குருவினி

**केनेषितं पतति प्रेषितं मनः। केन प्राणः प्रथमः प्रैति युक्तः। केनेषितां वाचमिमां वदन्ति चक्षुः श्रोत्रं क उ देवो युनक्ति ॥ १ ॥**

𑌕𑍇𑌨𑍇𑌷𑌿𑌤𑌂 𑌪𑌤𑌤𑌿 𑌪𑍍𑌰𑍇𑌷𑌿𑌤𑌂 𑌮𑌨𑌃। 𑌕𑍇𑌨 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 𑌪𑍍𑌰𑌥𑌮𑌃 𑌪𑍍𑌰𑍈𑌤𑌿 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃। 𑌕𑍇𑌨𑍇𑌷𑌿𑌤𑌾𑌂 𑌵𑌾𑌚𑌮𑌿𑌮𑌾𑌂 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂 𑌕 𑌉 𑌦𑍇𑌵𑍋 𑌯𑍁𑌨𑌕𑍍𑌤𑌿 ॥ ௧ ॥

---

டம் வணக்கத்தாலும் ஸமயமறிந்து கேட்டலாலும் போதியபணிவி டையாலும் அறியமுயலுவாயாக" என்றுமாய ஶ்ருதிகளும் ஸ்மிருதி களும் வரையறை ஏற்படுத்தியுமிருக்கின்றன. ஒருசிஷ்யன் ப்ரம்ஹ நிஷ்டரான குருவை முறைப்படியடைந்து ப்ரத்யகாத்ம விஷயத்தா லன்று வேறிடத்தில் ரக்ஷணத்தைக்காணுதவனுய் அபயமும் (பய ஹேதுவான இரண்டாவது பொருளற்றதும்) நித்யமும் சிவமும் அசைவற்றதுமான பொருளை விரும்பிக்கொண்டு கேட்கத்தொடங்கி னன் எனக் கேநேஷிதம் என்றதால் கல்பிக்கப்படுகிறது—

(ப—ரை) **केन** (𑌕𑍇𑌨)=எந்தக் கர்த்தாவினுல் **इषितम्** (𑌇𑌷𑌿𑌤𑌮𑍍)=அபிப்பேதமாக இருந்துகொண்டு அதாவது: எவரது இச்சா மாத்திரத்தை முன்னிட்டு என்றும். **प्रेषितम्** (𑌪𑍍𑌰𑍇𑌷𑌿𑌤𑌮𑍍)=அனுப் பப்பட்டதாய்க்கொண்டு **मनः** (𑌮𑌨𑌃)=மனதானது **पतति** (𑌪𑌤𑌤𑌿)= தனது விஷயத்தைக் குறித்துச் செல்லுகிறது. **केन** (𑌕𑍇𑌨)=எவ ரால் **युक्तः** (𑌯𑍁𑌕𑍍𑌤𑌃)=ஏவப்பட்டதாய் **प्रथमः प्राणः** (𑌪𑍍𑌰𑌥𑌮𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃)=எல்லா இந்திரியங்களுக்கும் முதன்மையான ப்ராணன் **प्रैति** (𑌪𑍍𑌰𑍈𑌤𑌿)=தனது வியாபாரத்தைக் குறித்துச்செல்லுகிறது. **केन** (𑌕𑍇𑌨)=எவரால் **इषिताम्** (𑌇𑌷𑌿𑌤𑌾𑌮𑍍)=இஷ்டப்பட்ட (எவரது இச் சாமாத்திரத்தால் ப்ரேரிக்கப்பட்ட) **इमां वाचम्** (𑌇𑌮𑌾𑌂 𑌵𑌾𑌚𑌮𑍍)=இந்த வார்த்தையை **वदन्ति** (𑌵𑌦𑌨𑍍𑌤𑌿)=லௌகிகர்கள் பேசுகின்றனர். **क उ देवः** (𑌕 𑌉 𑌦𑍇𑌵𑌃)=எந்தத் தேவர் **चक्षुः** (𑌚𑌕𑍍𑌷𑍁𑌃)=கண்ணையும், **श्रोत्रम्** (𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌮𑍍)=சுரோத்திரத்தையும் **युनक्ति** (𑌯𑍁𑌨𑌕𑍍𑌤𑌿)=தனது விஷயத்தில் ஏவுகிறுர். (1) (எ—று)

குறிப்பு—அசேதனங்களான மன ஆதி இந்திரியங்கள் தத் தமது விஷயங்களைக் குறித்து முறைபிறழாது செல்லுவதால் அவற்

केनेषितमित्यादि। केन कर्त्रा, इषितम्=इष्टमभिप्रेतं सन्मनः पतति=गच्छति, स्वविषयं प्रतीति संबध्यते। इषेराभीक्ष्ण्यार्थस्य गत्यर्थस्य चेहासंभवादिच्छार्थस्यैवैतद्रूपमिति गम्यते। इषितमितीट्प्रयोगस्तु छान्दसः। तस्यैव प्रपूर्वस्य नियोगार्थे प्रेषितमित्येतत्। तत्र प्रेषितमित्येवोक्ते प्रेषयितृप्रेषणविशेषविषयाकांक्षा स्यात्, केन प்ரேषयितृविशेषेण, कीदृशं

---

றையனுப்புபவர் ஒருவர் இருக்கவேண்டும் என்பது தானே பெறப்படுகிறது. ஆயினும் எவரது இச்சாமாத்திரத்தால் அவை செல்லுகின்றனவோ அவர் யார்? அவரது ஸ்வரூபமென்னே? அதையுபதேசிக்கவேண்டுமென சிஷ்யன் குருவைக் கேட்கிறுன் என்பது முதல் மந்திரத்தின் கருத்து. (எ—று)

பாஷ்யம்.—கேநேஷிதம் என்றவிடத்தில் கேந=எந்தக் கர்த்தாவினுல் இஷிதம்=இஷ்டமாக=அபிப்ரேதமாக விரும்பப்பட்டதாக இருந்துகொண்டு மனதானது தனது விஷயத்தைக்குறித்து செல்லுகிறது என ஸம்பந்தப்படுத்தப்படுகிறது. इषु (உஷு) என்றதாதுவுக்கு ஆபீக்ஷ்ண்யம்=அடிக்கடி என்றும், கதியென்றும், இச்சை என்றும் மூன்று பொருள்களுண்டு. அவற்றுள் ஆபீக்ஷ்ண்யம், கதி என்ற இரண்டு பொருளும் இவ்விடத்தில் பொருந்தாதாகையால் இச்சையென்ற பொருளுள்ளதின் ரூபமாகவே இது (இந்த இஷிதமென்பது) அறியப்படுகிறது. அங்ஙனமாயின் (இச்சையென்றபொருளுள்ள தாதுவின் ரூபமாயின்) இஷ்டம் என்றே அதன் ரூபமிருக்கவேண்டும். அவ்விதமில்லாது இஷிதம் என்பதாய் इट् (உடு) என்ற ஆகமம் வைத்து ப்ரயோகித்ததோ வைதிகப்ரயோகமுறையையொட்டியதாகும். அந்த இஷுவென்ற தாதுவுக்கே प्र (ப்ர) என்பதைப் பூர்வமாக (முன்னதாக) க்கொண்டால் நியோகம் ஏவுதல் என்ற பொருளில் प्रेषितम् (ப்ரேஷிதம்) ப்ரேஷிதம் என்ற ரூபமேற்படுகிறது. இஷிதம் ப்ரேஷிதம் என்ற அவ்விரண்டனுள் ப்ரேஷிதம் என்பதுமட்டுமே சொல்லப்படுமாயின் அனுப்புபவர், அவர் செய்யும் *ப்ரேஷணம் இத்தகைய விசேஷத்தைப்பற்றிய ஆகாங்க்ஷை ஏற்படும். அதாவது:—ப்ரேஷணம் செய்பவர் எத்தகையவர் எவ்

---

* மனத்தையனுப்ப அவர் செய்யும் முறையாது? என்பதாய்.

**वा प्रेषणमिति । इषितमिति तु विशेषणे सति तदुभयं निवर्तते, कस्येच्छामात्रेण प्रेषितमित्यर्थविशेषनिर्धारणात् । यद्येषोऽर्थोऽभिप्रेतः स्यात्केनेषितमित्येतावतैव सिद्धत्वात्प्रेषितमिति न वक्तव्यम् । अपिच । शब्दाधिक्यादर्थाधिक्यं युक्तमितीच्छया कर्मणा वाचा वा केन प्रेषितमित्यर्थविशेषोऽवगन्तुं युक्तः । न । प्रश्नसामर्थ्यात् । देहादिसङ्घातादनित्यात्कर्मकार्याद्विरक्तोऽतोऽन्यत्कूटस्थं नित्यं वस्तु बुभुत्समानः पृच्छतीति सामर्थ्यादुपपद्यते ।**

---

*விதம் ப்ரேஷணம் செய்கிறார் என்பதாம். இஷிதம் என்பதாய் அடைமொழி கொடுத்தாலோ அவ்விரண்டும் நிவிருத்தியையடைகிறது. எவரது இச்சாமாத்திரத்தினால் இது அனுப்பப்பட்டது என்ற விசேஷமான பொருள் உறுதியாகக் கிடைப்பதே அதன் காரணமாகும்.*

*சங்கை—இப்பொருள் ஶ்ருதியினால் கருதப்படுமாயின் கேனேஷிதம் என்ற இவ்வளவினாலேயே அது கிடைத்துவிடுமானதால் “ப்ரேஷிதம்” எனச் சொல்லவேண்டுவதில்லை. மேலும் சப்தம் அதிகமாகவாகுங்கால் பொருளில் ஆதிக்யம் கொள்ளுவதுதான் பொருத்தமானது என்பதுபற்றி இச்சையினாலா? கர்மத்தினாலா? வாக்கினாலா? எதனால் அனுப்பப்பட்டது என்ற அர்த்தவிசேஷம் அறிந்து கொள்ளக்கூடியதாகவாகிறது எனின்?*

*உத்தரம்—கேள்விகேட்ட ஸாமர்த்தியத்தையொட்டி அவ்விதஞ்சொல்லுவது பொருந்தாது. கர்மத்தின் காரியமானதும் அநித்யமானதுமான தேஹாதி ஸங்காதத்தினின்னும் வைராக்கியத்தையடைந்தவனும், முற்கூறிய தேஹாதிகளைக்காட்டிலும் வேறுபட்டதும் *கூடஸ்தமும் நித்யமுமான பொருளையறிய விருப்பங்கொண்*

---

** கூடத்தில் இருப்பது கூடஸ்தமெனப்படும். கூடம் என்பதற்கு பொய்யென்றும், தட்டான் தங்கவேலைசெய்யும் பட்டரையென்றும் பொருள். ஆகவே பொய்யான மாயை அதன் காரியமான ப்ரபஞ்சம் இவற்றுடன் கலந்து தோன்றுவது என்றும், பட்டரையானது தன்னுடன் சேர்ந்த பொன் முதலியவற்றுக்கு பற்பல ரூபத்தைத்தான் கொடுப்பினும் தான் அத்தன்மைய மாறுதல் எதுவுமற்றிருப்பதுபோல ஸர்வாதிஷ்டான சின்மாத்ரமாகத்தானிருந்து தன்னில் அத்யஸ்தமான பொருளுக்குப் பற்*

इतरथेच्छावाक्कर्मभिर्देहादिसङ्घातस्य प्रेरयितृत्वं प्रसिद्धमिति प्रश्नोऽनर्थक एव स्यात्। एवमपि प्रेषितशब्दस्यार्थो न प्रदर्शित एव। न। संशयवतोऽयं प्रश्न इति प्रेषितशब्दस्यार्थविशेष उपपद्यते। किं यथाप्रसिद्धमेव कार्यकरण-सङ्घातस्य प्रेषयितृत्वं, किं वा सङ्घातव्यतिरिक्तस्य स्वतन्त्रस्येच्छामात्रेणैव मन आदिप्रेषयितृत्वमित्यस्यार्थस्य प्रदर्शनार्थं केनेषितं पतति प्रेषितं मन इति विशेषणद्वयमुपपद्यते। ननु स्वतन्त्रं मनः स्वविषये स्वयं पततीति प्रसिद्धं, तत्र कथं प्रश्न उपपद्यत इति। उच्यते। यदि स्वतन्त्रं मनः प्रवृत्ति-

---

டவனுமாய் கேட்கிறான் எனக்கேள்விகேட்கும் ஸாமர்த்தியத்தினின் றும் (முறையினின்றும்) ஏற்படுகிறது. அவ்விதமில்லாவிடில் இச்சை வாக்கு கர்மம் இவற்றால் தேஹாதி ஸங்காதத்துக்கு ப்ரேஷயிதிருத் வமானது ப்ரஸித்தமாகக் காணப்படுவதால் கேள்விகேட்டது பய னற்றதாகவே ஆகிவிடும்.

சங்கை—இவ்விதமாயினுங்கூட "ப்ரேஷிதம்" என்ற சப்தத் துக்கு அர்த்த விசேஷமானது காட்டப்படாததாகவே இருக்கிறது எனின்?

உத்தரம்—அவ்விதமில்லை. இது ஸம்சயம் கொண்டவனுடைய கேள்வியானதுபற்றி ப்ரேஷித சப்தத்துக்கு அர்த்தவிசேஷமானது பொருத்தமுள்ளதாகவே ஆகிறது. காரியகரணஸங்காத (ஸமூஹ)த் தின் ப்ரேஷயிதிருத்வமானது உலகில் எவ்விதம் ப்ரஸித்தமாகவிருக் கிறதோ அவ்விதமே தானா? அல்லது ஸங்காதத்தைவிட வேறுபட்ட வனும் ஸ்வதந்திரனுமானவனுக்கு இச்சையினால்மட்டும் மன ஆதிக ளின் ப்ரேஷயிதிருத்வமேற்படுகிறதா? என்ற இந்த அர்த்தத்தைக் காட்டவேண்டி "கேநேஷிதம் பததி ப்ரேஷிதம் மன:" என்ற இரண்டு விசேஷணங்கள் பொருத்தமுள்ளனவாகவாகின்றன.

சங்கை—ஸ்வதந்திரமான மனதானது தனக்குரிய விஷயத்தில் தானே ப்ரவேசிக்கிறது என்பது பிரஸித்தமாக இருக்கிறது. அவ் விஷயத்தில் கேள்வி பொருந்துவது எங்ஙனமெனின்?

---

பல தோற்றத்தைத் தருகிறதேயொழிய தான் எவ்விதமாறுதலுமற்றிருக் கிறது என்றும் பொருள் கொள்க.

निवृत्तिविषये स्यात्तर्हि सर्वस्याऽनिष्टचिन्तनं न स्यात्। अनर्थं च जानन्सङ्कल्पयति अत्युग्रदु:खे च कार्ये वार्यमाणमपि प्रवर्तत एव मनः। तस्माद्युक्त एव केनेषितमित्यादिप्रश्नः। केन प्राणो युक्तः=नियुक्तः प्रेरितस्सन्प्रैति गच्छति स्वव्यापारं प्रति। प्रथम इति प्राणविशेषणं स्यात्तत्पूर्वकत्वात्सर्वेन्द्रिय प्रवृत्तीनाम्। केनेषितां वाचमिमां शब्दलक्षणां वदन्ति लौकिकाः। तथा चक्षुः श्रोत्रं च स्वे स्वे विषये क उ देवो द्योतनवान्युनक्ति=नियुङ्क्ते प्रेरयति ॥ १ ॥

एवं पृष्टवते योग्यायाह गुरुः शृणु त्वं यत्पृच्छसि मन आदिकरणजातस्य को देवः स्वविषयं प्रति प्रेरयिता कथं वा प्रेरयतीति।

---

உத்தரம்—சொல்லப்படுகிறது. மனதானது ப்ரவிருத்தி நிவிருத்தி விஷயத்தில் ஸ்வதந்திரமாக ஆருமானல் அப்பொழுது எல்லோருக்கும் அநர்த்தத்தைப்பற்றிய எண்ணமே ஏற்படமாட்டாது. அநர்த்தமென்றறிந்தும் கூட அதை ஸங்கல்பிக்கிறான். அதிகம் கொடுமையான துக்கமுள்ளகாரியத்தில் தடுக்கப்படினுங்கூட மனது பிரவிருத்திக்கவே செய்கிறது. ஆகவே "கேநேஷிதம்" என்றதாதி ப்ரஶ்னம் பொருத்தமுள்ளதாகவே ஆகிறது. எவரால் ப்ராணன் யுக்தமாக=நியுக்தமாக=ப்ரேஷணஞ் செய்யப்பட்டதாய்க் கொண்டு தனது வேலையைக் குறித்துச் செல்லுகிறது. இங்கு ஶ்ருதியில் **प्रथमः** (வ, யசஃ) என்பது ப்ராணனுக்கு விசேஷணமாக (அடைமொழியாக) வாகும். எல்லா இந்திரியங்களுடைய ப்ரவிருத்திகளும் அதை (ப்ராணனை) முன்னிட்டுண்டாவதே அதன் காரணமாகும். லோகத்திலுள்ளவர்கள் எவரால் ப்ரேஷணை செய்யப்பட்ட சப்த ரூபமான இந்த வார்த்தையைச் சொல்லுகின்றனர். அவ்விதமே ப்ரகாசமுள்ள எவர் சக்ஷுஸ்ஸையும் ஶ்ரோத்திரத்தையும் தத்தமது விஷயத்தில் யோஜிப்பிக்கிறார்=நியோகிக்கிறார்=ப்ரேஷணஞ் செய்கிறார். (1) (எ—று)

அவதாரிகா பாஷ்யம்.—இவ்விதங்கேட்ட யோக்யனை சிஷ்யனை நோக்கி மனம் முதலிய காரண ஸமூஹத்தைத் தனது விஷயத்தைக் குறித்து ப்ரேஷணஞ் செய்யும் தேவன் யார்? எவ்விதம் ப்ரேஷ

**श्रोत्रस्य श्रोत्रं मनसो मनो यद्वाचो ह वाचं स उ प्राणस्य प्राणश्चक्षुषश्चक्षुः । अति मुच्य धीराः प्रेत्यास्माल्लोकादमृता भवन्ति ॥ २ ॥**

ஶ்ரோத்ரஸ்ய ஶ்ரோத்ரம் மநஸோ மநோ யத்வாசோ ஹவாசம் ஸ உ ப்ராணஸ்ய ப்ராணஶ்சக்ஷுஷஶ்சக்ஷு: । அதி முச்ய தீரா: ப்ரேத்யாஸ்மால்லோகாதம்ருதா பவந்தி ॥ ௨ ॥

---

ணஞ் செய்கிறார்? என எதை நீ கேட்டனையோ அவ்விஷயத்தை என்னிடமிருந்து கேட்டறிந்து கொள்வாயாக—

(ப—ரை) **यत्** (யத்)=யாது காரணத்தால் **श्रोत्रस्य** (ஶ்ரோத்ரஸ்ய)=சப்த ப்ரகாசகமான ஶ்ரோத்ரமென்ற இந்திரியத்துக்கு ப்ரம்ஹம் **श्रोत्रम्** (ஶ்ரோத்ரம்)=ஶ்ரோத்ரமோ, (ப்ரகாசகமோ) **यत्** (யத்)=யாதுகாரணத்தால் **मनसः** (மநஸ:)=ஸங்கல்பம் நிஶ்சயம் முதலியவற்றில் ஸாமர்த்தியமுள்ள அந்தக்கரணத்துக்கு, **मनः** (மந:)=ப்ரகாசகமோ, **यत्** (யத்)=யாது காரணத்தால் **वाचः** (வாச:)=வாக் என்ற இந்திரியத்துக்கு ப்ரம்ஹம் **वाचम्** (வாசம்)=வாக்கோ, (ப்ரகாசகமோ) **यत्** (யத்)=யாதுகாரணத்தால் **प्राणस्य** (ப்ராணஸ்ய)=ப்ராணனெனப்பெயரிய விருத்திக்கு ப்ரம்ஹம் **प्राणः** (ப்ராண:)=ப்ராணனோ (ப்ரகாசகமோ) **यत्** (யத்)=யாது காரணத்தால் **चक्षुषः** (சக்ஷுஷ:)=ரூபப்ரகாசகமான இந்திரியத்துக்கு ப்ரம்ஹம் **चक्षुः** (சக்ஷு:)=ப்ரகாசகமோ [**अतः** (அத:)=அக்காரணத்தால் ப்ரம்ஹத்தை ஆத்மாவென **विदित्वा** (விதித்வா)=அறிந்து] **अतिमुच्य** (அதிமுச்ய)=முற்கூறிய ஶ்ரோத்ராதிகளில் ஆத்மபுத்தியை விலக்கிக்கொண்டு **धीराः** (தீரா:)=கூர்மையான புத்தியுள்ளவர்கள் **अस्माल्लोकात्** (அஸ்மால்லோகாத்)=புத்திர மித்திர களத்திர பந்துக்களிடத்தில் நான் என்றும் என்னுடையது என்றுமான அபிமானத்தினின்றும் அல்லது ப்ராரப்தாயத்தமான இந்தத் தேஹம் போனதும் என்று பொருள். **अमृताः** (அம்ருதா:)=முக்தர்களாக **भवन्ति** (பவந்தி)=ஆகின்றனர்.

பாஷ்யம்.—ஶ்ரோத்ரத்துக்கு ஶ்ரோத்ரமானது—இதனால் கேட்பதுபற்றி சப்தத்தின் ஶ்ரவணத்தை (க்கேட்டலை) க்குறித்து

श्रोत्रस्य श्रोत्रम्=शृणोत्यनेनेति श्रोत्रं शब्दस्य श्रवणं प्रति करणं शब्दाभिव्यञ्जकं श्रोत्रमिन्द्रियं, तस्य श्रोत्रं स यस्त्वया पृष्टः 'चक्षुः श्रोत्रं क उ देवो युनक्ति' इति। असावेवं विशिष्टः श्रोत्रादीनि नियुंक्त इति वक्तव्ये नन्वे तदननुरूपं प्रतिवचनं श्रोत्रस्य श्रोत्रमिति। नैष दोषः। तस्यान्यथा विशेषानवगमात्। यदि हि श्रोत्रादिव्यापारव्यतिरिक्तेन स्वव्यापारेण विशिष्टः श्रोत्रादिनियोक्तावगम्येत दात्रादिप्रयोक्तृवत्तदेदमननुरूपं प्रतिवचनं स्यात्। न त्विह श्रोत्रादीनां प्रयोक्ता स्वव्यापारविशिष्टो लवित्रादिवदधिगम्यते। श्रोत्रादीनामेव तु संहतानां व्यापारेणालोचनसंकल्पाध्यवसायलक्षणेन

---

ஶ்ரோத்ரமானது கரணமாகவாகிறது. அதாவது:— சப்தத்தை ப்ரகாசப்படுத்துவது ஶ்ரோத்ரமென்ற இந்திரியமென்றேற்பட்டது. அதற்கு ஶ்ரோத்ரமானவர் அவர் "சக்ஷுஸ்ஸையும் ஶ்ரோத்ரத்தை யும் எந்தத் தேவன் ப்ரகாசப்படுத்துகிறார்" என எவர். உன்னால் கேட்கப்பட்டாரோ என்றும்.

சங்கை—இவர் இத்தகையதுடன் கூடினவராய் ஶ்ரோத்ராதிகளை ப்ரேரணை செய்கிறார் எனச் சொல்லவேண்டுவது அவஶ்யமாக விருக்க (அதைவிடுத்து) ஶ்ரோத்ரத்துக்கு=ஶ்ரோத்திரமென்ற இந்திரியத்துக்கு, ஶ்ரோத்ரமாகிறார் என்ற ப்ரதிவசனமானது=பதிலானது பொருத்தமற்றதாக வாகுமல்லவா எனின்?

உத்தரம்—இது தோஷமாகாது. ஏன்? அதற்கு வேறுவிதமான விசேஷமெதுவுமிருப்பதாக அறியப்படாமையே அதன் காரணமாகும். ஶ்ரோத்ராதிகளின் வியாபாரத்தைவிட வேறான தனது சொந்த வியாபாரத்துடன் கூடினவராக கத்தி முதலியவற்றை ப்ரயோகிப்பவர் போன்று ஶ்ரோத்ராதிகளை ப்ரேரணை செய்பவர் அறியப்படுவாராயின் அப்பொழுது இந்த ப்ரதிவசனமானது=பதிலானது, பொருத்தமற்றதாக வாகலாம்தான். இவ்விடத்திலோ ஶ்ரோத்ராதிகளை ப்ரேரிப்பவரோ கத்தி முதலியன கொண்டு வெட்டுபவர் போன்று தனித்த சொந்த வியாபாரத்துடன் கூடினவராக அறியப்படவில்லை. ஸங்காதங்களான (கூட்டமாகச் சேர்ந்த) ஶ்ரோத்ராதிகளின் ஆலோசனம் ஸங்கல்பம் நிஶ்சயம் இவை ரூபமானதும்

फलावसानलिङ्गेनावगम्यते अस्ति हि श्रोत्रादिभिरसंहतः, यत्प्रयोजनप्रयुक्तः श्रोत्रादिकलापो गृहादिवदिति संहतानां परार्थत्वादवगम्यते श्रोत्रादीनां प्रयोक्ता। तस्मादनुरूपमेवेदं प्रतिवचनं श्रोत्रस्य श्रोत्रमित्यादि। कः पुनरत्र पदार्थः श्रोत्रस्य श्रोत्रमित्यादेः। नह्यत्र श्रोत्रस्य श्रोत्रान्तरेणार्थः, यथा प्रकाशस्य प्रकाशान्तरेण। नैष दोषः। अयमत्र पदार्थः। श्रोत्रं तावत्स्वविषयव्यञ्जनसमर्थं दृष्टम्। तच्च स्वविषयव्यञ्जनसामर्थ्यं श्रोत्रस्य चैतन्ये ह्यात्मज्योतिषि नित्येऽसंहते सर्वान्तरे सति भवति नासतीति। अतः श्रोत्रस्य श्रोत्रमित्याद्युपपद्यते। तथाच श्रुत्यन्तराणि—"आत्मनैवायं ज्योति

---

முடிவிலுள்ள பலனுல் கண்டுபிடிக்கக் கூடியதுமான வியாபாரத்தினுல் 'ஶ்ரோத்ராதி கரண ஸமூஹமானது வீடு முதலியன போன்று எத்தகைய ப்ரயோஜனத்தை யுத்தேசித்துச் சேர்ந்தனவோ அத்தகைய ஶ்ரோத்ராதிக் கூட்டத்திற் சேராதவனுக ஒருவன் இருக்கிருன் என்பதாய் மட்டும் அறியப்படுகிறது. கூட்டங்கள் பிறரதுப் பிரயோஜனத்துக்கு வேண்டியேற்படுவனபற்றி ஶ்ரோத்ராதிகளை ப்ரேரணை செய்பவன் (ஒருவருண்டென) அறியப்படுகிருர். ஆகவே "ஶ்ரோத்ரஸ்ய ஶ்ரோத்ரம்" என்ற இந்த ப்ரதிவசனம் பொருத்தமுள்ளதாகவே ஆகிறது.

சங்கை—இங்குள்ள "ஶ்ரோத்ரஸ்ய ஶ்ரோத்ரம்" என்றதாதிகளின் பொருள்தான் யாது? ஒரு ஒளிக்கு மற்றெரு ஒளியினுல் போல இங்குள்ள ஶ்ரோத்திரத்துக்கு வேறு ஶ்ரோத்திரத்தினுல் பயனென்றுமில்லையன்றே எனின்?

உத்தரம்—இந்தத் தோஷமிங்கில்லை. இங்குள்ள ஶ்ரோத்ராதி பதங்களின் பொருள் இதுவாம். அதாவது:—ஶ்ரோத்ரமோ தனது விஷயத்தை ப்ரகாசப்படுத்தும் ஸாமர்த்தியமுள்ளதாகக் காணப்பட்டது. ஶ்ரோத்திரத்துக்குள்ள தனது விஷயத்தை ப்ரகாசப்படுத்தும் அந்த ஸாமர்த்தியமும் நித்யமும் கூட்டத்திற் சேராததும், ஸர்வத்துக்கும் ஆந்தரமானதும் சைதன்யரூபமானதுமான ஆத்மஜ்யோதிஸ்ஸானது இருப்பதால் ஏற்படுகிறதேயொழிய இல்லாவிடில் ஏற்படுவதில்லை என்பதுபற்றி "ஶ்ரோத்திரத்துக்கு ஶ்ரோத்ரம்" என்ற

षास्ते" "तस्य भासा सर्वमिदं विभाति" "येन सूर्यस्तपति तेजसेद्धः" इत्यादीनि। "यदादित्यगतं तेजो जगद्भासयतेऽखिलम्।" "क्षेत्रं क्षेत्री तथा कृत्स्नं प्रकाशयति भारत।" इत्यादि गीतासु। काठके च—"नित्योऽनित्यानां चेतनश्चेतनानाम्" इति।

श्रोत्राद्येव सर्वस्यात्मभूतं चेतनमिति प्रसिद्धं, तदिह निवर्त्यते। अस्ति किमपि विद्वद्बुद्धिगम्यं सर्वान्तरतमं कूटस्थमजमजरममृतमभयं श्रोत्रादेरपि श्रोत्रादि तत्सामर्थ्यनिमित्तमिति प्रतिवचनं शब्दार्थश्चोपपद्यत एव। तथा मनसोऽन्तःकरणस्य मनः। नह्यन्तःकरणमन्तरेण चैतन्यज्योतिषा

---

தாதிகள் பொருத்தமுள்ளதாக வாகிவிடுகின்றன என்றும். அவ்விதமே "இவன் ஆத்மாவாகிற ஜ்யோதிஸ்ஸினாலேயே இருக்கிறான்" "அவரது (ஸ்வரூப) காந்தியினால் இவையாவும் பிரகாசிக்கிறது" "ஸூரியன் எந்தத் தேஜஸ்ஸினால் ப்ரகாசிப்பிக்கப்பட்டு விளங்குகிறானோ" என்றதாதிகளான வேறு ஶ்ருதிகளுமிருக்கின்றன. "ஸூரியனையடைந்த எந்தத் தேஜஸ்ஸானது எல்லா ஜகத்தையும் ப்ரகாசப்படுத்துகிறதோ" என்றும், "ஹே பாரத! க்ஷேத்ரியான ஆத்மா அவ்விதமே க்ஷேத்திரம் முழுவதையும் ப்ரகாசப்படுத்துகிறான்" என்றும் பகவத்கீதாதிகளில் சொல்லப்பட்டுமிருக்கிறது. "அநித்யமானவைகளுக்குள் நித்யனும் சேதனமாகத் தோற்றுகின்றவைகளுள் சேதனனுமாகும்" எனக் காடகத்திலுஞ் சொல்லப்பட்டிருக்கிறது. ஶ்ரோத்ரம் முதலியதே ஸர்வத்துக்கும் ஆத்மாவாகவானது என்றும் சேதனமென்றும் உலகில் பொதுப்படையான ப்ரஸித்தியிருக்கிறது. அந்தப் பிரஸித்தியானது இங்கு மறுக்கப்படுகிறது. வித்வதனுபவத்தால் காணக்கூடியதும், ஸர்வத்துக்கும் ஆந்தரதமமும், கூடஸ்தமும், அஜரமும், அமிருதமும், அபபமும், அஜமும், ஶ்ரோத்ராதிகளுக்கும் ஶ்ரோத்ராதியும், அவற்றின் ஸாமர்த்தியத்துக்கு நிமித்தமாகவுள்ளதுமானவொன்று இருக்கிறது என ப்ரதிவசனமும் சப்தத்தின் அர்த்தமும் பொருத்தமுள்ளதாகவே ஆகிறது. அதுபோலவே மனஸ்ஸுக்கு=அந்தக்கரணத்துக்கு மனஸ்ஸாக ப்ரம்ஹமாகிறது. அந்தக்கரணமானது சைதன்னியஜ்யோதிஸ்ஸினாலல்லாது வேறொன்றினால் ப்ரகாசப்படுத்தப்பட்டதாய்க்கொண்டு தனது விஷயமான

दीपितं स्वविषयसंकल्पाध्यवसायादिसमर्थं स्यात्। तस्मान्मनसोऽपि मन इति। इह बुद्धिमनसी एकीकृत्य निर्देशो मनस इति। यद्वाचो ह वाचम् यच्छब्दो यस्मादर्थे श्रोत्रादिभिः सर्वैस्संबध्यते। यस्माच्छ्रोत्रस्य श्रोत्रम्, यस्मान्मनसो मन इत्येवम्। वाचो ह वाचमिति द्वितीया प्रथमात्वेन विपरिणम्यते। प्राणस्य प्राण इति दर्शनात्। वाचो हवाचमित्येतदनुरोधेन प्राणस्य प्राणमिति कस्मात्द्वितीयैव न क्रियते। न। बहूनामनुरोधस्य युक्तत्वाद्वाचमित्यस्य वागित्येतावद्वक्तव्यं. स उ प्राणस्य प्राण इति शब्दद्वयानु-

---

ஸங்கல்பம் நிஶ்சயம் முதலியவற்றில் ஸமர்த்தமாகவாகாதன்றோ. ஆனதுபற்றி மனஸ்ஸுக்கும் மனஸ்ஸாகிறது என்க. இவ்விடத்தில் புத்தி மனஸ் இரண்டையும் ஒன்றாக்கி மன: என்பதாய்ச்சொல்லப்பட்டது. "यत् वाचो ह वाचम्" ("யத் வாசோ ஹ வாசம்") என்றவிடத்திலுள்ள यत्(யத்) என்றசப்தமானது यस्मात्(யஸ்மாத்) யாதுகாரணத்தால் என்றபொருளுள்ளதாய் ஶ்ரோத்ராதிகள் எல்லாவற்றுடனும் சேர்க்கையை யடைகிறது. அதாவது:—யாதுகாரணத்தால் ஶ்ரோத்திரத்துக்கு ஶ்ரோத்திரமோ, யாதுகாரணத்தால் மனஸ்ஸுக்கு மனஸோ என்றிவ்விதமென்றும். वाचो ह वाचम् (வாசோ ஹ வாசம்) என்றவிடத்தில் वाचम् (வாசம்) என்ற இரண்டாம் வேற்றுமையுள்ளதை முதல் வேற்றுமையுள்ளதாக [वाक् (வாக்) என்பதாக மாற்றிக்கொள்ளப்படுகிறது. 'ப்ராணனுக்கு ப்ராணன்' என்றவிடத்தில் ப்ராண: என்பதாய் முதல் வேற்றுமை காணப்படுவதே அதன் காரணமாகும். "वाचो ह वाचम्" ("வாசோ ஹ வாசம்") என்ற இதையனுஸரித்து प्राणस्य प्राण: (ப்ராணஸ்ய ப்ராண:) என்றவிடத்திலுள்ள प्राण: (ப்ராண:) என்பதை प्राणम् (ப்ராணம்) என்பதாய் இரண்டாவது வேற்றுமையுள்ளதாக ஏன் மாற்றிக்கொள்ளப்படக்கூடாது எனின்? அது கூடாது. வெகுவாகவுள்ளதை அனுஸரிப்பது பொருத்தமாகவாவதே அதன் காரணமாகும். वाचम् (வாசம்) என்ற இதற்கு वाक् (வாக்) என்ற இவ்வளவே மாற்றவேண்டுவதாகவாகிறது. स उ प्राणस्य प्राण: (ஸ உ ப்ராணஸ்ய ப்ராண:) என்றவிடத்திலுள்ள स: (ஸ:) என்றும், प्राण: (ப்ராண:) என்றுமான இரண்டு சப்தங்களை யனுஸரித்ததாக

रोधेन । एवं हि बहूनामनुरोधः युक्तः कृतस्स्यात् । पृष्टं च वस्तु प्रथमयैव निर्देष्टुं युक्तम् । स यस्त्वया पृष्टः प्राणस्य प्राणाख्यवृत्तिविशेषस्य प्राणस्तत्कृतं हि प्राणस्य प्राणनसामर्थ्यम् । नह्यात्मनानधिष्ठितस्य प्राणनमुपपद्यते । "को ह्येवान्यात्कः प्राण्याद्यदेष आकाश आनन्दो न स्यात्" "ऊर्ध्वं प्राणमुन्नयत्यपानं प्रत्यगस्यति" इत्यादि श्रुतिभ्यः। इहापि च वक्ष्यते—"येन प्राणः प्रणीयते तदेव ब्रह्म त्वं विद्धि" इति । श्रोत्रादीन्द्रियप्रस्तावे घ्राणप्राणस्य ननु युक्तं ग्रहणम् । सत्यमेवम् । प्राणग्रहणेनैव तु घ्राणस्य ग्रहणं कृतम् । एवं मन्यते श्रुतिः। सर्वस्यैव करणकलापस्य यदर्थप्रयुक्ता प्रवृत्ति

---

அது ஆவதே அதன் காரணமாகும். இவ்விதம் சொன்னாலன்றோ நியாயத்துக்குப் பொருந்திய வெகுவாகவுள்ளவற்றின் அனுஸரணம் செய்யப்பட்டதாகவாகும்.

மேலும் கேட்கப்பட்ட பொருளை முதல் வேற்றுமையுள்ள சப்தத்தினாலேயே குறிப்பிடுவதுதான் பொருத்தமாகவாகிறது. அதாவது:—எது உன்னால் கேட்கப்பட்டதோ அது ப்ராணனுக்கு=ப்ராணனெனப் பெயரிய விருத்திக்கு, ப்ராணனாகவாகும். ப்ராணனுக்கு ப்ராணனஞ்செய்யும்=(ஜீவிக்கச் செய்யும்) ஸாமர்த்தியம் அதனாலன்றோ செய்யப்பட்டதாகவாகிறது. ஆத்மாவினால் அதிஷ்டிதமாகவில்லாதவற்றுக்கு ப்ராணனமென்பது ஸம்பவிக்கமாட்டாதன்றோ. "யாதொரு இந்த ஆகாசமென்ற ஆனந்தமுண்டோ அது இல்லாதிருக்குமானால் எவன் ஜீவிப்பான் எவன் மூச்சுவிடுவான்" என்றும், "ப்ராணனை உயரில் கொண்டுபோகிறது, அபானத்தைக் கீழில் தள்ளுகிறது" என்றுபாதிய ஶ்ருதிகளுமிருக்கின்றன. இவ்விடத்திலுமே "எதனால் ப்ராணன் நடத்தப்படுகிறதோ அதையே ப்ரம்ஹமாக நீ அறிந்துகொள்" எனச் சொல்லப்படவும் போகிறது ஶ்ரோத்ராதிகளான இந்திரியங்களைச்சொல்லத்தொடங்கியவிடத்தில் க்ராண ப்ராணனை=முக்கிய ப்ராணனைக் கிரஹிப்பது பொருந்துமோ? எனின். இதுவுண்மைதான். ப்ராணனைக் கிரஹித்ததினாலேயே முக்கிய ப்ராணனுடைய கிரஹணமும் செய்யப்பட்டதாகவே ஆகிவிடுகிறது, ஶ்ருதியானது இவ்விதம் எண்ணுகிறது. அதாவது: எல்லாக்கரண ஸமூஹத்தினுடையவும் ப்ரவிருத்தியானது எதன்

स्तद्ब्रह्मेति प्रकरणार्थो विवक्षितः। तथा चक्षुषः चक्षुः=रूपप्रकाशकस्य चक्षुषो यद्रूपग्रहणसामर्थ्यं तदात्मचैतन्याधिष्ठितस्यैव। अतश्चक्षुषः चक्षुः। प्रष्टुः पृष्टस्यार्थस्य ज्ञातुमिष्टत्वाच्छ्रोत्रादेः श्रोत्रादिलक्षणं यथोक्तं ब्रह्म ज्ञात्वा इत्यध्याह्रियते। अमृता भवन्तीति फलश्रुतेश्च। ज्ञानाद्ध्यमृतत्वं प्राप्यते। ज्ञात्वा अतिमुच्य इति सामर्थ्याच्छ्रोत्रादिकरणकलापमुज्झित्वा, श्रोत्रादौ ह्यात्मभावं कृत्वा तदुपाधिः सन् तदात्मना जायते म्रियते, संसरति च। अतः श्रोत्रादेः श्रोत्रादिलक्षणं ब्रह्मात्मेति विदित्वा, अतिमुच्य= श्रोत्राद्यात्मभावं परित्यज्य, ये श्रोत्राद्यात्मभावं परित्यजन्ति ते धीराः=

---

ப்ரயோஜனத்துக்குவேண்டி யேற்படுகிறதோ அது ப்ரம்ஹமாகும் என்பதாய் இந்த ப்ரகரணத்தின் பொருள் சொல்ல விரும்பப்பட்டது என்றும். அவ்விதமே चक्षुषश्चक्षुः (சக்ஷுஷஸ்சக்ஷு:) ரூபத்தை ப்ரகாசப்படுத்துகின்ற சக்ஷுஸ்ஸுக்கு ரூபத்தைக் கிரஹிக்கும் ஸாமர்த்தியம் யாதுண்டோ அது ஆத்மசைதன்யத்தினால் அதிஷ்டிதமாக உள்ளதுக்கேதான் ஸம்பவிக்கும். ஆகவேதான் சக்ஷுஸ்ஸுக்கு சக்ஷுஸ்ஸாகவாகிறது. ப்ரஶ்னம் செய்பவர்க்கு தான்கேட்ட பொருளையறிய விருப்பமிருக்குமாதலால் 'ஶ்ரோத்ராதிகளுக்கு ஶ்ரோத்ராதிரூபமாக இதுவரை சொல்லிய ப்ரம்ஹத்தையறிந்து' எனப் புதிதாய்ச் சேர்த்துக்கொள்ளப்படுகிறது. "अमृता भवन्ति" ("அம்ருதா பவந்தி") முக்தர்களாகவாகின்றனர் எனப் பலன் கூறும் ஶ்ருதியிருப்பதும் மற்றொரு காரணமாகும். ஞ்ஞானத்தாலன்றோ அம்ருதத்வம் அடையப்படுகின்றது. அறிந்து என்றும், அதிமுச்ய (விட்டு) என்றும் சொன்ன ஸாமர்த்தியத்தினால் ஶ்ரோத்ராதி கரணஸமூஹத்தை விடுத்து (என்றேற்பட்டது) ஶ்ரோத்ராதிகளில் ஆத்மபுத்தியைச் செய்தன்றோ அவற்றை உபாதியாகக் கொண்டு அவ்வுருவமாகப் பிறக்கவும், மரிக்கவும், ஸம்ஸரிக்கவும் செய்கிறான். ஆனதுபற்றி ஶ்ரோத்ராதிகளுக்கு ஶ்ரோத்ராதி ரூபமான ப்ரம்ஹத்தை ஆத்மாவென அறிந்து अतिमुच्य (அதிமுச்ய) ஶ்ரோத்ராதிகளில் ஏற்பட்ட ஆத்மபுத்தியைவிடுத்து என்பது பொருள். எவர்கள் ஶ்ரோத்ராதிகளில் ஆத்மபுத்தியை விடுகின்றனரோ அவர்கள் தீரர்கள் (புத்தியுள்ளவர்கள்) ஆவர். சிறந்த புத்தி

धीमन्तः। नहि विशिष्टधीमत्त्वमन्तरेण श्रोत्राद्यात्मभावः शक्यः परित्यक्तुम्। प्रेत्य=व्यावृत्त्य, अस्माल्लोकात्=पुत्रमित्रकलत्रबंधुषु ममाहंभावसंव्यवहारलक्षणात्, त्यक्तसर्वैषणा भूत्वेत्यर्थः। अमृता:=अमरणधर्माणो भवन्ति। "न कर्मणा न प्रजया धनेन त्यागेनैके अमृतत्वमानशुः" "पराञ्चि खानि व्यतृणत्......आवृत्तचक्षुरमृतत्वमिच्छन्" "यदा सर्वे प्रमुच्यन्ते... अत्र ब्रह्म समश्नुते" इत्यादिश्रुतिभ्यः। अथवा—अतिमुच्येत्यनेनैवैषणात्यागस्य सिद्धत्वादस्माल्लोकात्प्रेत्य अस्माच्छरीरात्प्रेत्य मृत्वेत्यर्थः ॥ २ ॥

यस्माच्छ्रोत्रादेरपि श्रोत्राद्यात्मभूतं ब्रह्म अतः—

---

புள்ளவனுக இருந்தாலன்றி ஶ்ரோத்ராதிகளில் ஆத்ம புத்தியானது விடமுடியாதன்றோ. "अस्माल्लोकात्" (அஸ்மால்லோகாத்) புத்திர மித்திர களத்திர பந்துக்களிடத்து நான் என்னுடையது என்ற வியவஹார ரூபமான இந்த வுலகிலிருந்து प्रेत्य (ப்ரேத்ய) திரும்பி, எல்லா ஏஷணைகளையும் விட்டவர்களாகவாகி என்பது பொருள். அமிருதர்களாக=மரண தர்மமற்றவர்களாக ஆகின்றனர். "சில முக்கியாதிகாரிகள் தியாக (ஸன்யாஸ) த்தாலேயே அமிருதத்வத்தை அடைந்தனரேயொழிய கர்மத்தாலில்லை, ப்ரஜையினுலில்லை, தனத்தினுலில்லை" என்றும், "இந்திரியங்களை வெளிநோக்குள்ளனவாகச் செய்து ஹிம்ஸித்தார்" "அமிருதத்வத்தை விரும்புகின்றவன் சக்ஷுஸ்ஸை விஷயத்தினின்றும் திருப்பினவனுகவேண்டும்" என்றும், "எதுபோழ்து எல்லாம் விடுபடுகின்றனவோ" என்றும், "இவ்விடத்திலேயே ப்ரம்ஹத்தையடைகிறுன்" என்றுமான ஶ்ருதிகளுமிருக்கின்றன. அல்லது அதிமுச்ய=விடுத்து, என்றதினுலேயே ஏஷணுத்யாகமானது சித்தமாகவாகிவிடுவதால் இந்த லோகத்தினின்றும் ப்ரேத்ய=என்றதற்கு இந்தச் சரீரத்தினின்றும் மரித்தபின்னர் என்று பொருள். (ப்ராரப்தகர்மாயத்தமான இந்தச் சரீரம் போனதும் முக்தராகவாகிவிடுகின்றனர் என்றேற்படுகிறது.) (2) (எ—று)

(அ—கை) யாதுகாரணத்தால் ஶ்ரோத்ராதிகளுக்கு ஶ்ரோத்ராதியாயும், ஆத்மாவாகவானதாயும் ப்ரம்ஹமிருக்கிறதோ அக்காரணம் பற்றி அது வாகாதிகளுக்கு விஷயமாவதில்லை எனவுபதேசிக்கப்படுகிறது—

**न तत्र चक्षुर्गच्छति न वाग्गच्छति नो मनः ।**
**न विद्मो न विजानीमो यथैतदनुशिष्यात् ॥ ३ ॥**

ந தத்ர சக்ஷுர்கச்சதி ந வாக்கச்சதி நோ மந: ।
ந வித்மோ ந விஜாநீமோ யதைதத³நுஶிஷ்யாத் ॥ ௩ ॥

न तत्र=तस्मिन्ब्रह्मणि चक्षुर्गच्छति, स्वात्मनि गमनासंभवात्। तथा—न वाग्गच्छति। वाचा हि शब्द उच्चार्यमाणोऽभिधेयं प्रकाशयति यदा, तदाभिधेयं प्रति वाग्गच्छतीत्युच्यते। तस्य च शब्दस्य, तन्निर्वर्तकस्य च करणस्य आत्मा ब्रह्म। अतो न वाग्गच्छति। यथाग्निर्दाहकः प्रकाशकश्चापि

---

(ப—ரை) तत्र (தத்ர)=அந்த ப்ரப்ஹத்தினிடத்தில் चक्षुः (சக்ஷு:)=கண்ணானது, न गच्छति (ந கச்சதி)=செல்லுவதில்லை. वाक् (வாக்)=வாகிந்திரியமானது न गच्छति (ந கச்சதி)=செல்லுவதில்லை. मनः (மந:)=மனஸ்ஸும், नो (நோ)=செல்லுவதில்லை. ஆகவே न विद्मः (ந வித்ம:)=ப்ரப்ஹம் இத்தகையதென அறிகின்றோமில்லை. ஆனதுபற்றியே एतत् (ஏதத்)=இந்த ப்ரப்ஹத்தை यथा (யதா)= எவ்விதம் अनुशिष्यात् (அநுஶிஷ்யாத்)=சிஷ்யனுக்கு உபதேசிக்கக் கூடுமோ அப்முறையை न विजानीमः (ந விஜாநீம:)=அறிகின்றோமில்லை. (ப்) (எ—று)

பாஷ்யம்.—யாதுகாரணத்தால் ஸ்ரோத்ராதிகளுக்கு ஸ்ரோத்ராதியாயும் ஆத்மாவாகவானதாயும் ப்ரப்ஹமிருக்கின்றதோ அக்காரணத்தால் அந்த ப்ரப்ஹத்தினிடத்தில் கண் செல்லுவதில்லை. அவற்றுக்குச் சொந்த ஆத்மாவினிடத்தில் கதி ஸம்பவிக்கமுடியாதிருப்பதே அதன் காரணமாகும். அவ்விதமே வாக்கும் செல்லுவதில்லை. வாக்கினுலுச்சரிக்கப்படும் சப்தமானது அபிதேயத்தை=தனக்குரிய விஷயத்தை, எப்பொழுது ப்ரகாசப்படுத்துகிறதோ அப்பொழுது அபிதேயத்தை=தனக்குரிய விஷயத்தைக் குறித்து வாக்கானது போகிறது எனச் சொல்லப்படுகிறது. அந்தச் சப்தத்துக்கும் அதையுண்டுபண்ணும் கரணத்துக்கும் ஆத்மாவாக ப்ரப்ஹமிருக்கிறது. ஆனதுபற்றி வாக்கு செல்லுவதில்லை. அக்னியானது பொசுக்குவதாயும் ப்ரகாசகமாயுமிருப்பினுங்கூட தனது ஆத்

सच्चात्मानं प्रकाशयति दहति वा तद्वत्। नो मनः=मनश्चान्यस्य सङ्कल्पयितृ अध्यवसातृ च सन्नात्मानं सङ्कल्पयति अध्यवस्यति च। तस्यापि ब्रह्मात्मेति। इन्द्रियमनोभ्यां हि वस्तुनो विज्ञानं, तदगोचरत्वान्न विद्मस्तद्ब्रह्मेदृशमिति। अतो न विजानीमो यथा=येन प्रकारेणैतद्ब्रह्मानुशिष्यात्=उपदिशेच्छिष्यायेत्यभिप्रायः। यद्धि करणगोचरं तदन्यस्मा उपदेष्टुं शक्यं जातिगुणक्रियाविशेषणैः। न तज्जात्यादिविशेषणवद्ब्रह्म। तस्माद्विषमं शिष्याननुपदेशेन प्रत्याययितुं इति उपदेशे तदर्थग्रहणे च यत्नातिशयकर्तव्यतां दर्शयति न विद्मः इत्यादि ॥ ३ ॥

---

மாவை ப்ரகாசப்படுத்தவோ பொசுக்கவோ எவ்விதம் முடிவதில்லையோ அவ்விதமே இங்கும் காண்க. नो मनः (நொ மநः) மனஸானது பிறவற்றை ஸங்கல்பிப்பதாகவும், நிஸ்சயிப்பதாகவும் இருந்துக்கொண்டு தனது ஆத்மவிஷயமான ஸங்கல்பத்தையோ நிஸ்சயத்தையோ செய்யமுடியாததன்றோ. அந்த மனஸ்ஸுக்கும் ப்ரம்ஹம் ஆத்மாவாக இருப்பதாலென்க. இந்திரியம் மனஸ் இவற்றாலன்றோ வஸ்துவைப்பற்றிய அறிவேற்படுகிறது. அவற்றுக்கு விஷயமாக வாகாததால் அந்த ப்ரம்ஹம் இத்தகைஉடைதென அறிகின்றோமில்லை. ஆகவே எம்முறையாக இந்த ப்ரம்ஹத்தைச் சிஷ்யனுக்கு உபதேசிக்கக்கூடுமோ அம்முறையை அறிகின்றோமில்லை என்பது கருத்து. எது காரணங்களுக்குப் புலனாகக் கூடியதோ அதுவன்றோ *ஜாதி குணம், க்ரியை முதலிய விசேஷணங்களுடன் பிறருக்கு உபதேசிக்கக்கூடியதாகவாகும். ப்ரம்ஹமானது அத்தகைய ஜாதி முதலிய விசேஷமுள்ளதன்று. ஆகவே சிஷ்யர்களை வுபதேசமூலம் அறிவுறுத்தல் என்பது விஷமமானதே=முடியாததே ஆகும். உபதேசத்திலும் அதன் பொருளைக் கிரஹிப்பதிலும் பெருமுயற்சி செய்யவேண்டுமென்பதை "न विद्मः" ("ந வித்மஃ") என்றதாதியாலுபதேசிக்கிறது. (3) (எ—று)

---

* இவன் ப்ராம்ஹணன் என்பது ஜாதியை முன்னிட்டவுபதேசமாகவும், இவன் கருப்பன் என்பது குணத்தை முன்னிட்டவுபதேசமாகவும், இவன் சமையல்காரன் என்பது க்ரியையை முன்னிட்டவுபதேசமாகவும், இவன் ராஜபுருஷன் என்பது ஸம்பந்த விசேஷத்தை முன்னிட்டவுபதேசமாகவும் ஆகும்.

अत्यन्तमेवोपदेशप्रकारप्रत्याख्याने प्राप्ते तदपवादोऽयमुच्यते। सत्यमेवं प्रत्यक्षादिभिः प्रमाणैः न परः प्रत्याययितुं शक्यः, आगमेन तु शक्यत एव प्रत्याययितुमिति तदुपदेशार्थमागममाह—

**अन्यदेव तद्विदितादथो अविदितादधि।**
**इति शुश्रुम पूर्वेषां ये नस्तद्व्याचचक्षिरे ॥ ४ ॥**

அந்யதேவ தத்விதிதாதயோ அவிதிதாதயி ।
இதி ஶுஶ்ரும பூர்வேஷாம் யே நஸ்தத்வ்யாசசக்ஷிரே ॥ ௪ ॥

---

அவதாரிகா பாஷ்யம்.— முற்றிலும் உபதேசஞ்செய்யும் முறையின் மறுப்பு ப்ராப்த்தமாகவே அதற்குவேண்டி இந்த மறுப்பு சொல்லப்படுகிறது. ப்ரத்யக்ஷாதிகளான ப்ரமாணங்களால் பரமாத்மா இவ்விதமென அறிவுறுத்தக் கூடியவரல்லர் என்பது உண்மைதானுயினும் ஆகமங்களால் (சாஸ்திரங்களால்) அறிவுறுத்தக் கூடியவராகவே ஆகிறார். அதையுபதேசிக்கவேண்டி "அன்யதேவதத்விதிதாத் அதோ அவிதிதாத் அதி" என்ற சாஸ்திரத்தைச் சொல்லுகிறது.

(ப—ரை) ஆயினும் तत् (தத்)=அந்த ப்ரப்ஹமானது विदितात् (விதிதாத்)=ப்ரத்யக்ஷானுமான சப்தங்களால் அறியப்பட்ட பொருளைக்காட்டிலும் (வேதனுகார அந்தக்கரணவிருத்திக்கு விஷயமான பொருளைக்காட்டிலும்) अन्यदेव (அந்யதேவ)=வேறுபட்டதேயாகும். अविदितादथो (அவிதிதாதயோ)=அறியப்பட்டதற்கு மாறுனவற்றைக் காட்டிலும் அதாவது: ஸ்தூலப்பொருளுக்குக் காரணமான அவ்யாகிருதத்தைக் காட்டிலும் என்றும் अधि (அதி)=மேலாக அதாவது: வேருக இருக்கிறது. इति (இதி)=இவ்விதம், ये (யே)=எவர் नः (நঃ)=எங்களுக்கு तत् (தத்)=அந்த ப்ரப்ஹத்தை व्याचचक्षिरे (வ்யாசசக்ஷிரே)=தெளிவாயுபதேசித்தனரோ [तेषाम् (தேஷாம்)=அத்தகைய] पूर्वेषाम् (பூர்வேஷாம்)=ஞானவான்களுட்சிறந்த ஆசிரியர்களுடைய [वचनम् (வசநம்)=உபதேசத்தை] शुश्रुम (ஶுஶ்ரும)=கேட்டுளோம். ஆசாரியோபதேச பரம்பரையையொட்டி இதையறிந்து கொள்ளவேண்டுமேயல்லாது வேறு எம்முறையாலுமறியவியலாது என்பது கருத்து. (4) (எ—று)

अन्यदेव तद्विदितादथो अविदितादधि इति। अन्यदेव=पृथगेव, तत्=यत्प्रकृतं श्रोत्रादीनां श्रोत्रादीत्युक्तमविषयं च तेषाम्। तद्विदितादन्यदेव हि। विदितं नाम यद्विदिक्रिययातिशयेनाप्तं तत् विदिक्रियाकर्मभूतं क्व चित्किञ्चित्कस्यचिद्विदितं स्यादिति सर्वमेव व्याकृतं तत् विदितमेव। तस्मादन्य दित्यर्थः। अविदितमज्ञातं तर्हीति प्राप्त आह—अथो अविदितात्=विदितविपरीतादव्याकृतादविद्यालक्षणाद्व्याकृतबीजात्। अधीत्युपर्यर्थे लक्षणया ऽन्यदित्यर्थः। यद्धि यस्मादध्युपरि भवति तत्तस्मादन्यदिति प्रसिद्धं, यद्विदितं तदल्पं मर्त्यं दुःखात्मकं चेतिहेयम्। तस्माद्विदितादन्यद्ब्रह्मेत्युक्ते त्वहे-

---

பாஷ்யம் — ஸ்ரோத்ராதிகளுக்கு ஸ்ரோத்ராதி என்றும் அவற்றுக்கு விஷயமாகவாகாதது என்றும் எது தொடங்கப்பட்டதோ அது வேறாகவேயாகும். அது விதிதத்தை (அறியப்பட்டதை) க் காட்டிலும் வேறுபட்டதேயாகும். விதிதமா (அறியப்பட்டதா) வது=எது வேதனப்=அறிவு என்ற மானஸ க்ரியையினுல் மிக்க நோக்குடன் அடையப்பட்டதோ அதுவே விதிதம்=அறியப்பட்டது என்றும். அந்த ப்ரம்ஹமானது அதைக்காட்டிலும் (முற்கூறிய விதிதத்தைக்காட்டிலும்) வேறுபட்டது என்பது பொருள். அங்ஙனமாயின் அவிதிதம்=அறியப்படாதது என ப்ராப்த்தமாகவே ஸ்ருதி சொல்லுகிறது. अथो अविदितात्(அயொ அவிதிதாத்) விதிதத்துக்கு=அறியப்பட்டதுக்கு மாறுபட்டதை அவ்யாகிருதத்தை=அவித்யா ஸ்வரூபமானதும் வியாகிருதங்களுக்குக் காரணமானதுமானவற்றைக் காட்டிலும் अधि (அதி) வேறுபட்டது இங்குள்ள अधि (அதி) என்பதற்கு=மேலானது என்பது பொருள். ஆயினும் லக்ஷணமுறையால் வேறுபட்டது என்ற பொருளுள்ளதாகவாகிறது. எது, எதைக்காட்டிலும் अधि (அதி) மேலானதாக இருக்குமோ அது அதைக்காட்டிலும் வேறுபட்டது என்பது ப்ரஸித்தமானதே. எது விதிதமோ=வேதனம் என்ற மானஸக்ரியைக்கு விஷயமானதோ, அது அற்பமாகவும்=பரிச்சின்னமாகவும், மர்த்யமாகவும்=அழிவையடையக்கூடியதாகவும், துக்கஸ்வரூபமுள்ளதாகவும் ஆவதுபற்றி ஹேயமாக=விடக்கூடியதாகவாகும். அத்தகைய விதிதத்தைக்காட்டிலும் வேறானது ப்ரம்ஹம் என்று சொல்லப்பட்டாலோ அஹே

यत्वमुक्तं स्यात् । तथाऽविदितादधीत्युक्तेऽनुपादेयत्वमुक्तं स्यात् । कार्यार्थं हि कारणमन्यदन्येनोपादीयते । अतश्च न वेदितुरन्यस्मै प्रयोजनायान्यदुपादेयं भवतीत्येवं विदिताविदिताभ्यामन्यदिति हेयोपादेयप्रतिषेधेन स्वात्मनोऽन्यब्रह्मविषया जिज्ञासा शिष्यस्य निवर्तिता स्यात् । न ह्यन्यस्य स्वात्मनो विदिताविदिताभ्यामन्यत्वं वस्तुनः संभवतीत्यात्मा ब्रह्मेत्येष वाक्यार्थः । 'अयमात्मा ब्रह्म' 'य आत्माऽपहतपाप्मा' 'यत्साक्षादपरोक्षाद्ब्रह्म' 'य आत्मा सर्वान्तरः' इत्यादिश्रुत्यंतरेभ्यश्च । इत्येवं सर्वात्मनः सर्वविशेषरहितस्य चिन्मात्रज्योतिषो ब्रह्मत्वप्रतिपादकस्य वाक्यार्थस्याचार्योपदेश-

---

யத்வமானது=விடக்கூடியதன்று என்பதானது சொல்லப்பட்டதாகவாகிறது. அவ்விதமே "அவிதிதாததி" என்று சொல்லப்பட்டதும் அநுபாதேயத்வமானது=எடுக்கக்கூடியதன்று என்பதானது சொல்லப்பட்டதாகவாகிறது. காரியத்துக்கு வேண்டியன்றோ அதைக் காட்டிலும் வேறுபட்ட காரணமானது (இவ்விரண்டைக் காட்டிலும்) வேறானவொருவனால் எடுக்கப்படுகிறது. ஆகவே வேதிதாவை (அறிபவனை) க்காட்டிலும் வேறுபட்ட ப்ரயோஜனத்தையும் பொருட்டு வேறுபட்ட பொருள் உபாதேயமாக (எடுக்கக் கூடியதாக) ஆகிறது என்றும். இவ்விதம் விதிதம் அவிதிதம் இவற்றைக் காட்டிலும் வேறுபட்டது என்பதாய் ஹேய உபாதேயத் தன்மையை மறுத்ததனால் தனது ஆத்மாவைக்காட்டிலும் அன்னியமானவற்றில் ப்ரம்ஹ விஷயமான ஜிக்ஞாஸையானது போக்கப்பட்டதாகவாகிவிடுகிறது. தனது ஆத்மாவைக்காட்டிலும் வேறுபட்ட பொருளுக்கு விதிதா விதிதங்களைக்காட்டிலும் வேறுபட்டிருத்தல் ஸம்பவிக்கமாட்டாதானதுபற்றி ஆத்மாவே ப்ரம்ஹம் என்ற இந்த வாக்கியார்த்தம் ஏற்படுகிறது. "இந்த ஆத்மா ப்ரம்ஹம்" என்றும், "பாபஸம்பந்த மற்ற யாதொரு ஆத்மாவுண்டோ" என்றும், "ஸாக்ஷாத்தாயும் (கௌணமாக இல்லாததாயும்) அபரோக்ஷாத் (மறைந்துநிற்காததாயும்) உள்ள யாதொரு ப்ரம்ஹமுண்டோ" என்றும், "யாதொரு ஆத்மா ஸர்வாந்தரனோ" என்றுமான சுருதிகளுமிருக்கின்றன. இவ்விதம் ஸர்வாத்மாவும், எத்தகைய விசேஷமுமற்றதுமான சைதன்யமாத்திரமான ஜ்யோதிஸ்ஸுக்கு ப்ரம்ஹத்தன்மையை விளக்

परंपरया प्राप्तत्वमाह—इति शुश्रुमेत्यादि। ब्रह्म चैवमाचार्योपदेशपरंपरयै-वाधिगन्तव्यं न तर्कतः प्रवचनमेधाबहुश्रुततपोयज्ञादिभ्यश्चेत्येवं शुश्रुम श्रुतवन्तो वयं पूर्वेषामाचार्याणां वचनम्। य आचार्या नोऽस्मभ्यं तद्ब्रह्म व्याचचक्षिरे व्याख्यातवन्तो विस्पष्टं कथितवन्तस्तेषामित्यर्थः॥ ४॥

'अन्यदेव तद्विदितादथो अविदितादधि' इत्यनेन वाक्येनात्मा ब्रह्मेति प्रतिपादिते श्रोतुराशङ्का जाता तत्कथन्त्वात्मा ब्रह्म। आत्मा हि नामाधि-कृतः कर्मण्युपासने च संसारी कर्मोपासनं वा साधनमनुष्ठाय ब्रह्मादि-देवान्स्वर्गं वा प्राप्तुमिच्छति। तत्तस्मादन्य उपास्यो विष्णुरीश्वर इन्द्रश्च प्राणो वा ब्रह्म भवितुमर्हति न त्वात्मा। लोकप्रत्ययविरोधात्। यथान्ये

---

குகின்ற வாக்கியார்த்தமானது ஆசாரியோபதேச பரம்பரையால் ப்ராப்தமாகிறது என்பதை "என்று கேட்டோம்" என்றதாதியால் சுருதி சொல்லுகிறது. ப்ரம்ஹம் இவ்விதம் ஆசாரியோபதேச பரம்பரையினுலேயே அறியக்கூடியதேயொழிய (கேவல) யுக்தியினுலோ, ப்ரவசனம், மேதை, வெகுசாஸ்திரஞ்ஞானம், தபஸ், யக்ஞம் முதலிய வைகளினுலோ அறியக்கூடியதன்று என எந்த ஆசிரியர்கள் எங்களுக்கு அந்தப்ரம்ஹத்தை மிக்கத்தெளிவாக வுபதேசித்தனரோ அந்த முன்னருள்ள ஆசிரியர்களின் வசனத்தை நாம் கேட்டோம். என்று பொருள். (5) (எ—று)

அவதாரிகா பாஷ்யம்.—"अन्यदेव तद्विदितादथो अविदितादधि" ("அந்யதேவ தத்விதிதாதயோ அவிதிதாதயி") என்ற இந்த வாக்கியத்தினுல் ஆத்மாப்ரம்ஹம் எனவுபதேசிக்கப்பட்டதும் ஆத்மாவானது ப்ரம்ஹமாக எவ்விதமாகக் கூடும் எனஶ்ரோதாவுக்கு (சிஷ்யனுக்கு) ஆசங்கை உண்டாகிறது. ஆத்மாவென்பவனே கர்மாவிலும் உபாஸனத்திலும் அதிகாரம் பெற்றவனுகவும், ஸம்ஸாரியாகவும், கர்மம் உபாஸனம் இவையாகிற ஸாதனத்தை அனுஷ்டித்து ப்ரம்ஹாதிதேவர்களையோ ஸ்வர்க்கத்தையோ அடையவிரும்புகிறுன். ஆகவே அவனைக்காட்டிலும் வேறாகவே உள்ள விஷ்ணுவோ, ஈஶ்வரனே, இந்திரனே, ப்ராணனே, உபாஸ்யமான ப்ரம்ஹமாக வாகுமே யொழிய ஆத்மா ப்ரம்ஹமாக வாகமாட்டாது. லோகானு

तार्किका ईश्वरादन्य आत्मेत्याचक्षते,तथा कर्मिणः अमुं यजामुं यज इत्यान्या एव देवता उपासते। तस्माद्युक्तं यद्विदितमुपास्यं तद्ब्रह्म भवेत्ततोऽन्य उपासक इति। तामेतामाशङ्कां शिष्यलिङ्गेनोपलक्ष्य तद्वाक्याद्वाह—

**यद्वाचाऽनभ्युदितं येन वागभ्युद्यते।**
**तदेव ब्रह्म त्वं विद्धि नेदं यदिदमुपासते ॥ ५ ॥**

யத்3வாசா(அ)நப்4யுதி3தம் யேந வாக3ப்4யுத்3யதே ।
தத்3ஏவ ப்3ரஹ்ம த்வம் வித்3தி4 நேத3ம் யதி3த3முபாஸதே ॥ ௫ ॥

मैवं शङ्किष्ठाः। यच्चैतन्यमात्रसत्ताकम्। वाचा—वागिति जिह्वा-मूलादिष्वष्टसु स्थानेषु विषक्तमाग्नेयं वर्णानामभिव्यञ्जकं करणम्। वर्णाश्चा-

---

பவத்துக்கு முறண்படுவதே அதன் காரணமாகும். மற்றதார்க்கிகர்கள் ஆத்மாவை ஈஸ்வரனைக் காட்டிலும் வேறானவனாகவே எவ்விதம் சொல்லுகின்றனரோ, அவ்விதமே கர்மிகளும் “இவரை யஜிப்பாயாக, இவரையஜிப்பாயாக” என்பதாய் வேறாகவே யுள்ளதேவதைகளை உபாஸிக்கின்றனர். ஆகவே எது விதிதமோ அது உபாஸ்யமான ப்ரம்ஹமாகவாகும் என்பது பொருத்தமானது. உபாஸகன் அதைக் காட்டிலும் வேறுபட்டவனாவான் என்பதாய அந்த இந்த ஆசங்கையை சிஷ்யனுடைய முகக்குறியால் அறிந்து அல்லது அவனது வார்த்தையினாலாவது அறிந்து ஆசிரியருபதேசிக்கிறார்—

(ப—ரை) यत् (யத்)=சைதன்யமாத்ர ஸ்வரூபமான எது वाचा (வாசா)=பதஸமூஹத்தினால் अनभ्युदितम् (அநப்4யுதி3தம்)=ப்ரகாசப்படுத்தப்படாததோ, येन (யேந)=எந்தப்ரம்ஹத்தினால் वाक् (வாக்)=கரணத்துடன் கூடின சப்தமானது अभ्युद्यते (அப்4யுத்3யதே)=ப்ரகாசப்படுத்தப்படுமோ तदेव (தத்3ஏவ)=அதையே ब्रह्म (ப்3ரஹ்ம)=ப்ரம்ஹமாக त्वम् (த்வம்)=நீ विद्धि (வித்3தி4)=அறிவாயாக. यत् (யத்)=எதை इदम् (இத3ம்)=இது என்பதாய் உபாதிபேதத்துடன் கூடியதாக उपासते (உபாஸதே)=உபாஸிக்கின்றனரோ इदम् (இத3ம்)=இது न (ந)=ப்ரம்ஹமன்று. (4) (எ—று)

பாஷ்யம்.—இவ்விதமாசங்கை கொள்ளாதே சைதன்யமாத்திரமான ஸ்திதியையுடைய எது வாக்கினால் (சொல்லப்படாததோ)

र्थसङ्केतपरिच्छिन्ना एतावन्त एवङ्क्रमप्रयुक्ता इत्येवं तदभिव्यङ्ग्यश्शब्दः पदं वाक् इत्युच्यते। "अकारो वै सर्वा वाक्, सैषा (स्य) स्पर्शान्तस्थो-

இங்குள்ள வாக் என்றதனல் *நாக்கின் அடிமுதலிய எட்டுஸ்தானங்களில் ஸம்பந்தத்தையடைந்ததும், அக்னியைத் தேவதையாகவுடையதும், வர்ணங்களைப் பிரகாசப்படுத்துவதுமாக கரணமிருக்கிறது. எழுத்துக்களும் பொருளைப்பற்றிய ஸங்கேதத்தையொட்டி (1)பரிச்சின்னங்களாகவும் (அதாவது: இப்முறைப்படிப் பிரயோகிக்கக்கூடியனவென்றும் இத்தனை எழுத்துக்கள் சேர்ந்தனவென்றுமாம்) இருக்கின்றன. இத்தனையும் சேர்ந்த எழுத்துக்களினல்(2)ப்ரகாசப்படுத்தப்படும் சப்தமானது பதம் என்றும், வாக் என்றும் சொல்லப்படும். ஆகவே முற்கூறிய கரணம் அதனல் பிரகாசப்படுத்தப்படும் வர்ணம் ஆக இரண்டும் சொல்லப்பட்டதாகக்கொள்ளவேண்டும். अ(அ) "அ என்ற எழுத்தை முக்கியமாகவுடைய ओम्(ஓம்)ஓம் என்ற ப்ரணவத்தினல் உபலக்ஷணை முறையாற் காண்பிக்கப்பட்ட ஸ்போடமெ

*अष्टौ स्थानानि वर्णानामुरः कण्ठश्शिरस्तथा। जिह्वामूलञ्च दन्ताश्च नासिकोष्ठौ च तालु च॥ (அஷ்டௌ ஸ்தாநாநி வர்ணாநாமுர: கண்டஶ்ஶிரஸ்ததா। ஜிஹ்வாமூலஞ்ச தந்தாஶ்ச நாஸிகோஷ்டௌ ச தாலு ச॥)=வர்ணங்கள் (எழுத்துக்கள்) மார்பு, கண்டம், சிரஸ், ஜிஹ்வா (நாக்கின்) மூலம்—அடி, பற்கள், மூக்கு, உதடு தாலு முதலிய எட்டு இடங்களினின்றும் உண்டாவதாக சிக்ஷையென்றநூல் சொல்லுகின்றது.

(1) அர்தந்தப்பொருளைக் கூறுவதற்குத்தக்கபடி கூட்டியும் குறைத்தும் சொல்லப்படுவனவாகவும் என்று பொருள்.

(2) பாஷ்யத்தில் "तदभिव्यङ्ग्यश्शब्दः" ("ததபிவ்யங்க்யஶ்ஶப்த:") என்றதனல் गौः (கௌ:) என்றவிடத்தில் க், ஔ, :, க என்றும், ஔ என்றும், : என்றும், சொல்லப்பட்டவுடன் இம்மூன்று எழுத்துக்களும் அழிந்துவிடினும் இம்மூன்றும் சேர்ந்து ஒன்று என்பதாய் இவற்றினல் "கௌ:" என்ற அழியாத சப்தமறியப்படுவதாயும் அதுவே ஸ்போடம் என்றும், வியாகரண சாஸ்திரத்தில் சொல்லியிருப்பதையொட்டி ஸ்போடம் என்ற சப்தம் சொல்லப்பட்டதாகக் கொள்ளவும். மற்றும் இதுவிஷயமான விசேஷத்தை நமது ஸூத்திர பாஷ்ய தமிழ் மொழிபெயர்ப்பில் ம் 1-வது அத்யாயம் 375-வது முதலுள்ள பக்கங்களில் காண்க.

ष्मभिर्व्यज्यमाना बह्वी नानारूपा भवति" इति श्रुतेः। मितममितं स्वरः सत्यानृत एव विकारः यस्याः, तया वाचा पदत्वेन परिच्छिन्नया करण-गुणवत्या अनभ्युदितम्=अप्रकाशितमनभ्युक्तम्, येन=ब्रह्मणा विवक्षितेऽर्थे सकरणा वागभ्युद्यते=चैतन्यज्योतिषा प्रकाश्यते प्रयुज्यत इत्येतत्। "यद्वाचो ह वाक्" इत्युक्तम्। "वदन् वाक्," "यो वाचमन्तरो यमयति"

---

ன்ப்பெயரிய சித்சக்தியானது ஸர்வ வாக்ரூபமாகவிருக்கிறது. அந்த இந்த ஸ்போடசித் சக்தியானது ஸ்பர்சங்களாலும்=क (க) க என்ற எழுத்து தொடங்கி म (ம) ம என்ற எழுத்திறுதியுள்ள 25 அக்ஷரங்களாலும், அந்தஸ்தங்களாலும்=य र ल व (ய ர ல வ) ய ர ல வ என்ற 4 அக்ஷரங்களாலும், ஊஷ்மாக்களாலும்=श ष स ह (ஶ ஷ ஸ ஹ) ஶ ஷ ஸ ஹ என்ற 4 அக்ஷரங்களாலும், ப்ரகாசப்படுத்தப்படுவதாய்க்கொண்டு வெகுவாகவும் பலரூபமுள்ளதாகவும் ஆகிறது" என ச்ருதியிருக்கிறது. ஆகவே மிதம்=பாதத்தின் முடிவில் நியதமான (கணக்கிடப்பட்ட) அக்ஷரங்களையுடைய ருக்முதலியனவென்ன, அமிதம்=கணக்கிடப்படாத எழுத்துக்களடங்கிய பாதத்தின் முடிவையுடைய யஜுராதி என்ன, ஸ்வரம்=கானத்தை ப்ரதானமாகக்கொண்ட ஸாமம் என்ன, ஸத்யம்=கண்ணுற் காணப்பட்டபடிக்கான பொருளைப்பற்றி உலகிற்சொல்லப்படும் சப்தத்திலுள்ள அக்ஷரங்களென்ன, அந்ருதம்=அதற்கு நேர்மாறான பொருளைப்பற்றிச் சொல்லும் சப்தத்திலுள்ள அக்ஷரங்களென்ன, இவையாவும் எந்த ஸ்போடசக்தியினுடைய காரியமோ பதத்வத்தினால் பரிச்சின்னமானதும், கரணம்=வாகிந்த்ரியமென்ன, குணம்=உபஸர்ஜனமென்ன இவையுள்ளதுமான அந்த வாக்கினால் अनभ्युदितम् (அநப்யுதிதம்) சொல்லப்படாததும், येन (யேந) எந்த ப்ரம்ஹத்தினால் கரணத்துடன் கூடின வாக்கானது சொல்ல விரும்பப்பட்ட பொருளில் अभ्युद्यते (அப்யுத்யதே) சைதன்ய ஜ்யோதிஸ்ஸினால் ப்ரகாசப்படுத்தப்படுகிறதோ அதாவது: ப்ரயோகிக்கப்படுகிறதோ என்றும். "எது வாக்குக்கும் வாக்கோ" என்று முன்னர் சொல்லப்பட்டிருக்கிறது. "பேசுகின்றவனாகவிருந்துகொண்டு வாக் எனப்படுகிறான்" என்றும், "எவர் வாக்கை உள்நின்று நியமனம் செய்கின்றாரோ" என்றதாதி

इत्यादिच वाजसनेयके। "या वाक्पुरुषेषु सा घोषेषु प्रतिष्ठिता। कश्चित्तां वेद ब्राह्मणः" इति प्रश्नमुत्पाद्य प्रतिवचनमुक्तम् "सा वाग्यया स्वप्ने भाषते" इति। सा हि वक्तुर्वक्तिः नित्या वाक् चैतन्यज्योतिस्स्वरूपा। "नहि वक्तुर्वक्तेर्विपरिलोपो विद्यते" इतिश्रुतेः। तदेवात्मस्वरूपं, ब्रह्म= निरतिशयं भूमाख्यं बृहत्त्वाद्ब्रह्मेति विद्धि=विजानीहि त्वम्, यैः वागाद्युपाधिभिः "वाचो हवाक्, चक्षुषश्चक्षुः, श्रोत्रस्य श्रोत्रं मनसो मनः" "कर्ता भोक्ता विज्ञाता नियन्ता प्रशासिता" "विज्ञानमानन्दं ब्रह्म" इत्येवमादयस्संव्यवहारा असंव्यवहार्ये निर्विशेषे परे साम्ये ब்रह्मणि प्रवर्तन्ते, तान्व्युदस्यात्मानमेव निर्विशेषं ब्रह्म विद्धि इति एवशब्दार्थः।

---

யும், வாஜஸநேயகோபநிடதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. "புருஷர் (சேதனர்) களிடத்தில் யாதொரு வாக் சக்தியுண்டோ அது கோஷங்களில்=எழுத்துக்களில் நிலையையடைந்திருக்கிறதென அதை அறியும் ப்ராம்ஹணன் யார்" என்ற கேள்வியை உண்டாக்கி அதற்குப் பதில் சொல்லுமிடத்து "எதனால் ஸ்வப்பினத்தில் பேசுகிறானோ அதுதான் வாக்காகும்" எனச் சொல்லப்பட்டிருக்கிறது. சைதன்னியஜ்யோதிஸ்ஸ்வரூபமான அந்த நித்யமான வாக்கன்றோ வக்தாவினது வக்தியாக (வசனரூபமான அந்தக்கரணவிருத்திக்கு ப்ரகாசகமாக) வரும் "வக்தாவினது வக்திக்கு (வசனரூப அந்தக்கரணவிருத்தி ப்ரகாசக சைதன்னியத்துக்கு) நாசமானது கிடையாது" என ஶ்ருதியுமிருக்கிறது. அதையே=ஆத்மஸ்வரூபத்தையே,ப்ரம்ஹமாக=ஒப்புயர்வற்றதும் எங்கும் நீக்கமறநிறைந்துள்ளதுமாக இருப்பதுபற்றி பூமா எனப்பெயரிய ப்ரம்ஹமாக நீ அறிந்து கொள்ளுவாயாக. வாகாதிகளான எந்த வுபாதிகளால் வாக்குக்கு வாக்கென்றும், கண்ணுக்குக் கண்ணென்றும், காதுக்குக் காதென்றும், மனஸ்ஸுக்கு மனஸ்ஸென்றும், கர்த்தா, போக்தா, விக்ஞாதா, நியந்தா, ப்ரஶாஸிதா, விக்ஞானம் ஆனந்தம் ப்ரம்ஹ என்றதாதிகளுமான வியவஹாரங்கள் எவ்வித வியவஹாரத்தையும் கடந்ததும், நிர்விசேஷமும், எல்லாவற்றிலும் ஸமமாகவுள்ளதுமான பரப்ரம்ஹத்தினிடத்தில் ஏற்படுகின்றனவோ அந்த வியவஹாரங்களைப் போக்கி ப்ரத்யகாத்மாவையே நிர்விசேஷமான ப்ரம்ஹமாக அறிந்து

नेदं ब्रह्म यदिदमिति उपाधिभेदविशिष्टमनात्मेश्वरादि, उपासते=ध्यायन्ति। तदेव ब्रह्म त्वं विद्धि इत्युक्तेऽपि नेदं ब्रह्मेत्यनात्मन अब्रह्मत्वं पुनरुच्यते नियमार्थम्। अन्यब्रह्मबुद्धिपरिसङ्ख्यानार्थं वा ॥ ५ ॥

---

கொள்ளுவாயாக என்பது (ஶ்ருதியில் तदेव (ததேவ) என்றவிடத்திலுள்ள) ஏவ என்ற சப்தத்தின் பொருளாகும். எதை இதென்பதாக=உபாதிமூலமேற்பட்ட பேதத்துடன் கூடினதும், ஆனது பற்றி ப்ரத்யகாத்மாவாக இல்லாததுமான ஈஶ்வராதியாக,உபாஸிக்கின்றனரோ=தியானிக்கின்றனரோ, இது ப்ரம்ஹமாகவாகாது. "அதையே ப்ரம்ஹமாக நீ அறிந்துகொள்ளு" எனவுபதேசிக்கப்பட்டிருப்பினுங்கூட "இது ப்ரம்ஹமன்று" என்றதால் ப்ரத்யகாத்மாவாகவில்லாததற்கு ப்ரம்ஹத்தன்மையானது கிடையாதென (1)நியமத்துக்கு வேண்டியோ, வேறிடத்தில் ப்ராப்தமான ப்ரம்ஹ புத்தியை விலக்கவேண்டியோ திருப்பவும் உபதேசிக்கப்படுகிறது. (5)

---

(1) பாஷ்யத்தில் "நியமார்த்தம் என்றதால் நியம விதியும் "அந்ய ப்ரம்ஹ புத்தி பரிஸங்க்யாநார்த்தம் வா" என்றதால் பரிஸங்க்யா விதியும் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது:—அபூர்வவிதி என்றும், நியம விதி என்றும், பரிஸங்க்யா விதி என்றும் விதிகள் மூன்று விதங்களாகும். அவற்றுள் வேறு ப்ரமாணத்தால் முற்றிலும் ப்ராப்தமாகவாகாத பொருளை விதிப்பது அபூர்வவிதி எனப்படும். அதாவது: "வ்ரீஹீன் ப்ரோக்ஷதி" (நெல்லை ப்ரோக்ஷணம் செய்தல் வேண்டும்.) என்றவிடத்தில் விதிக்கப்படும் வ்ரீஹி ப்ரோக்ஷணமானது ப்ரோக்ஷணத்தை விதிக்கும் இந்தச் சாஸ்திரத்தைத் தவிர்த்து வேறு எந்த ப்ரமாணத்தினாலும் ப்ராப்தமாகவாகாததால் இது அபூர்வவிதியாகும். இவ்விதமே "அக்னிஹோத்ரம் ஜுஹுயாத்" (அக்னிஹோத்ர ஹோமத்தைச் செய்தல்வேண்டும்) என்பதும் அபூர்வ விதியாகும். இவ்விடத்தில் அக்னிஹோத்ர ஹோமமானது அதை விதிக்கும் இந்த வசனத்தைத் தவிர்த்து வேறு எந்த ப்ரமாணத்தாலும் ப்ராப்தமாகவாகாததால் இதுவும் அபூர்வவிதியே யாகும். ஒரு பக்ஷத்தில் ப்ராப்தமானவற்றுக்கு அப்ராப்தமான வேறு பக்ஷத்தையும் சேர்ப்பிக்கும் விதி நியமவிதி எனப்படும். அதாவது: "ஸமே யஜேத" என்பதாம். "தர்சபூர்ணமாஸாப்யாம் யஜேத" (தர்சபூர்ணமாஸங்கள் என்ற யாகங்களால் இஷ்டத்தைப் பாவிக்கவேண்டும்) என்பதாய் யாகமானது செய்யவேண்டுவதாக விதிக்கப்பட்டது. அந்த யாகமானது யாதானு

மொரு தேசமின்றிச் செய்யவியலாதானதுபற்றி அவ்விதியினின்றும் தேசமும் ப்ராப்த்தமாகிறது. அந்தத் தேசமானது ஸமமானதாகவும் (மேடு பள்ளமற்றதாகவும்) விஷமமாகவும் (மேடுபள்ளமுள்ளதாகவும்) ஆகலாம். யாகஞ் செய்பவன் எதுபோழ்து ஸமமான தேசத்தில் யாகஞ்செய்யவிரும்புவானோ அதுபோழ்து "ஸமே யஜேத" (ஸமமானவிடத்தில் யாகஞ் செய்தல் வேண்டும்) என்ற வசனமானது உதாஸீனமாக (தான் தனது பொருளை விதிக்காததாக) இருக்கும். எதுபோழ்து விஷமமான தேசத்தில் யாகஞ்செய்ய விரும்புவானோ அதுபோழ்து "ஸமமானவிடத்தில் யாகஞ் செய்தல் வேண்டும்" என்பதாய் தனது பொருளை விதிக்கும். விஷமதேசத்தில் யாகஞ்செய்யுங்கால் தனது பொருள் அப்ராப்த்தமாக வாகிவிடுவதால் இவ்விதி அப்பொழுது அவச்யமாகவாகிவிடுகிறது. விஷம தேசத்தின் நிவிருத்தியோ சொல்லாமலே ஏற்பட்டுவிடுகிறது. அதாவது:—சாஸ்திரத்தினால் விதிக்கப்பட்ட தேசத்தினாலேயேதான் யாகநிஷ்பத்தியேற்படுமேயொழிய சாஸ்திரம் விதிக்காத தேசத்தில் செய்தலால் சாஸ்திரஞ் சொன்னபடி யாகமானது அனுஷ்டிக்கப்பட்டதாகவாகாது என்றும். "கிழக்குமுகமாக இருந்துகொண்டு அன்னங்களைப் புஜிக்க வேண்டும்" என்பதும் இந்த நியமவிதியில் உதாஹரணமாகவாகலாம். அனேகவிடங்களில் ப்ராப்தமான ஒன்றுக்கு வேறு இடத்தினின்றும் நிவிருத்தி ஏற்படவேண்டி ஓரிடத்தில் திரும்பவும் விதித்தல் பரிஸங்க்யா விதியாகும். அதாவது:—"இமாமக்ருப்ணந் ரசநாம்ருதஸ்ய" ருதஸ்ய (உண்மையான பலனையுடைய யாகத்தினது இமாம் ரசநாம்—இந்தக்கயிற்றை அக்ருப்ணந்—தேவர்கள் எடுத்தனர்) எனச் சயனயாகப்ரகரணத்தில் படிக்கப்படும் இந்தமந்திரமானது பொதுவாய் கழுதையைக் கட்டுவதாகவோ, குதிரையைக் கட்டுவதாகவோவுள்ள கயிற்றை எடுப்பதைப்போதிக்கக் கூடியதாகவாகிறது. இதனின்றும் கழுதையைக் கட்டும் கயிற்றை எடுத்தலிலும் குதிரையைக் கட்டும் கயிற்றை எடுத்தலிலும் இம்மந்திரம் பிராப்த்தமாகும். அவ்விதம் ப்ராப்த்தமாகவே இமாமக்ருப்ணந் ரசநாம்ருதஸ்யேத்யச்வாபிதாநீமாதத்தே "இமாமகிருப்ணந்ரசநாமிருதஸ்ய" என்ற மந்திரத்தைச்சொல்லிக்கொண்டு அச்வத்தைக் கட்டும் கயிற்றையெடுக்கவேண்டுமென விதிக்கப்படுகிறது. இவ்விடத்தில் அச்வத்தைக் கட்டும் கயிர் எனச்சொன்னதானது கர்த்தபத்தை (கழுதையைக்) கட்டும் கயிற்றினின்றும் நிவிருத்தி செய்வதால் இதுபரிஸங்க்யாவிதியாக—(நித்ய ப்ராப்தங்களான இரண்டனுள் ஒன்றைவிலக்குவதாக)வாகிறது என்றும். அதுபோல இவ்விடத்தில் உபாதிக்கு அனாத்மத்வமானது சுருதியினால் ப்ராப்த்

**यन्मनसा न मनुते येनाहुर्मनो मतम् ।**
**तदेव ब्रह्म त्वं विद्धि नेदं यदिदमुपासते ॥ ६ ॥**

யந்மநஸா ந மநுதே யேநாஹுர்மநோ மதம் ।
ததேவ ப்ரஹ்ம த்வம் வித்தி நேதம் யதிதமுபாஸதே ॥ ௬ ॥

यन्मनसा न मनुते । मन इत्यन्तःकरणं बुद्धिमनसोरेकत्वेन गृह्यते । मनुते अनेनेति मनः सर्वकरणसाधारणं सर्वविषयव्यापकत्वात् । " काम-

---

(ப—ரை) यत् (யத்)=எதை मनसा (மநஸா) = மனத்தினுல் न मनुते (ந மநுதே)=எண்ணுவதில்லையோ, येन (யேந)=எதனுல் मनः (மநঃ)=மனதானது मतम् (மதம்)=விஷயமாக்க (ப்ரகாசப் படுத்தப்) பட்டதென आहुः (ஆஹுঃ)=சொல்லுகின்றனரோ तदेव (ததேவ)=அதையே ब्रह्म (ப்ரஹ்ம)=ப்ரம்ஹமாக त्वम् (த்வம்)=நீ विद्धि (வித்தி)=அறிந்துகொள்வாயாக यत् (யத்)=எதை इदम् (இதம்)=இது என்பதாய் உபாதி பேதத்துடன் கூடினதாக उपासते (உபாஸதே)= உபாஸிக்கின்றனரோ इदम् (இதம்)=இது न (ந)=ப்ரம்ஹமன்று.

பாஷ்யம்.—यन्मनसा न मनुते (யந்மநஸா ந மநுதே) புத்தி மனஸ் இரண்டையும் ஒன்ருக்கி மனஸ் என்றதால் அந்தக்கரணம் கிரஹிக்கப்படுகிறது. இதனுல் மனனம் செய்கிறுன் என்ற வ்யுத் பத்தியால் மனஸ் என்பது எல்லாக் கரணங்களுக்கும் பொதுவாகவு மாகிறது. எல்லா விஷயங்களிலும் வியாபகமாக இருப்பதும்

---

தமாகவாகிறது லோகத்தினுல் அப்ராப்த்தமாகவாகிறது. இங்கு ச்ருதியா னது லோகத்தினுல் அப்ராப்தமான அனுஷ்டத்வத்தை "நேதம்" என்ற தால் பூர்த்தி செய்வதால் இது நியமவிதியாகவாகலாம். அல்லது ப்ரத்ய க்ஷாதிப்ரமாணங்களால் ப்ரத்யகாத்மாவுக்கு அப்ரம்ஹத்வமானது ப்ராப்த்த மாகவாகிறது. ப்ரத்யகாத்மாவாக இல்லாத ஈச்வராதிகளுக்கு ப்ரம்ஹத் வமானது ப்ராப்த்தமாகவு மாகிறது "ப்ரத்யகாத்மாவாக இல்லாதது எதுவோ அதற்கு ப்ரம்ஹத்வம் கிடையாது" என்று கூறினதும் ப்ரத்ய காத்மாவாகவுள்ளதுக்கு அப்ரம்ஹத்வநிஷேதம் ப்ராப்தமாகிறது. அதா வது: ப்ரத்யகாத்மாவாகவுள்ளது ப்ரம்ஹம் என்பதுதானே கிடைத்து விடுகிறது. ஆகவே இதைப் பரிஸங்க்யா விதியாகவும் கொள்ளலாம் என் றேற்பட்டது. (எ—று)

स्सङ्कल्पो विचिकित्सा श्रद्धाऽश्रद्धा धृतिरधृतिर्ह्रीर्धीर्भीरित्येतत्सर्वं मन एव" इतिश्रुतेः कामादिवृत्तिमन्मनः। तेन मनसा यत्=चैतन्यज्योतिः मनसोऽवभासकं न मनुते न सङ्कल्पयति, नापि निश्चिनोति मनसोऽवभासकत्वेन नियन्तृत्वात्। सर्वविषयं प्रति प्रत्यगेवेति स्वात्मनि न प्रवर्ततेऽन्तःकरणम्। अन्तःस्थेन हि चैतन्यज्योतिषा अवभासितस्य मनसः मननसामर्थ्यम्, तेन सवृत्तिकं मनः येन=ब्रह्मणा, मतम्=विषयीकृतम् व्याप्तमाहुः=कथयन्ति ब्रह्मविदः। तस्मात्तदेव मनसः आत्मानं प्रत्यक्चेतयितारं ब्रह्म विद्धि। नेदमित्यादिपूर्ववत्॥ ६॥

**यच्चक्षुषा न पश्यति येन चक्षूꣳषि पश्यति।**
**तदेव ब्रह्म त्वं विद्धि नेदं यदिदमुपासते ॥ ७ ॥**

யச்சக்ஷுஷா ந பச்யதி யேந சக்ஷூꣳஷி பச்யதி।
ததேவ ப்ரஹ்ம த்வம் வித்தி நேதம் யதிதமுபாஸதே ॥ எ ॥

---

அதன் காரணமாகும். "காமம், ஸங்கல்பம், ஸம்சயம், ச்ரத்தை, அச்ரத்தை, தைரியம், அதைரியம், வெட்கம், புத்தி, பயம் என்ற இவையாவும் மனதே' என ச்ருதியுமிருக்கிறது. காமம் முதலிய விருத்திகளுள்ளது மனது. அந்த மனத்தினால் மனத்துக்கு அவபாஸகமான (ப்ரகாசகமான) யாதொரு சைதன்யஜ்யோதிஸ்ஸுண்டோ (அதை) மனனம் செய்வதில்லை=ஸங்கல்பிப்பதுமில்லை நிச்சயிப்பதுமில்லை. மனஸ்ஸுக்கு ப்ரகாசகமாக வாவதிலிருந்து நியந்தாவாக (ப்ரப்ஹம்) இருப்பதே அதன் காரணமாகும். எல்லாவிஷயத்தையும் குறித்து ப்ரத்யக்காகவே இருப்பதிலிருந்து அந்தக்கரணமானது தனது ஆத்மாவினிடத்தில் ப்ரவிருத்திப்பதில்லை. தன்னுள்ளிலிருக்கின்ற சைதன்யஜ்யோதிஸ்ஸினால் ப்ரகாசப்படுத்தப்பட்ட மனஸ்ஸுக்கன்றோ மனனஞ்செய்யும் ஸாமர்த்தியம் ஏற்படுகிறது. அதனுற்றான் ப்ரம்ஹவித்துக்கள் விருத்திகளுடன் கூடின மனது ப்ரம்ஹத்தினுல் மதம்=விஷயீகரிக்கப்பட்டது அதாவது: வியாபிக்கப்பட்டது என சொல்லுகின்றனர். ஆகவே அதையே= ப்ரத்யக்சேதனரூபியான மனத்தினது ஆத்மாவையே, ப்ரம்ஹமாக அறிந்து கொள்ளுவாயாக. "நேதம் யதிதமுபாஸதே" என்றதாதிகளுக்கு முன்போலவே பொருள் கொள்ளவும். (6) (எ—று)

यच्चक्षुषा न पश्यति=न विषयीकरोति अन्तःकरणवृत्तिसंयुक्तेन लोकः, येन चक्षूंषि=अन्तःकरणवृत्तिभेदभिन्नाः चक्षुर्वृत्तीः पश्यति चैतन्यात्मज्योतिषा विषयीकरोति व्याप्नोति ॥ ७ ॥

यच्छ्रोत्रेण न शृणोति येन श्रोत्रमिदꣳ श्रुतम् ।
तदेव ब्रह्म त्वं विद्धि नेदं यदिदमुपासते ॥ ८ ॥

யச்ச்ரோத்ரேண ந ஶ்ருணோதி யேந ஶ்ரோத்ரமிதꣳ ஶ்ருதம் ।
தடேவ ப்ரஹ்ம த்வம் வித்தி நேதம் யதிதமுபாஸதே ॥ அ ॥

---

(ப—ரை) यत् (யத்)=எதை चक्षुषा (சக்ஷுஷா)=கண்ணினால் न पश्यति (ந பஶ்யதி)=லோகமானது பார்ப்ப (விஷயீகரிப்ப) தில்லையோ. येन (யேந)=அந்தக்கரணவிருத்தி ஸம்யுக்தமான எதனால், அதாவது: ப்ரம்ஹத்தினால் चक्षूंषि (சக்ஷூꣳஷி)=அந்தக்கரண விருத்திகளின் பேதத்தையொட்டி பேதப்பட்ட சக்ஷுர்விருத்திகளை पश्यति (பஶ்யதி)=லோகமானது விஷயீகரிக்கின்றதோ तदेव (தடேவ)=அதையே ब्रह्म (ப்ரம்ஹ)=ப்ரம்ஹமாக, त्वम् (த்வம்)=विद्धि (வித்தி)=அறிவாயாக. यदिदमुपासते (யதிதமுபாஸதே) = (எதை இதம் என்பதாய் உபாதிபேதத்துடன் கூடினதாக உபாஸிக்கின்றனரோ इदं न (இதம் ந)=இது ப்ரம்ஹமன்று. (7) (எ—று)

பாஷ்யம்.—यच्चक्षुषा न पश्यति (யச்சக்ஷுஷா ந பஶ்யதி) எதைக் கண்ணினால் விஷயீகரிப்பதில்லையோ=(எது சாக்ஷுஷமான அந்தக்கரணவிருத்திக்கு விஷயமாகவாவதில்லையோ என்றுகருத்து) அந்தக்கரணத்தின் விருத்திகளுடன் கூடின எதனால் சக்ஷுஸ்ஸுகளை=அந்தக்கரணத்தின் விருத்திபேதத்தை யொட்டி பேதப்பட்டவைகளான சாக்ஷுஷவிருத்திகளை, லோகமானது பார்க்கிறதோ சைதன்யாத்மஜ்யோதிஸ்ஸினால் விஷயீகரிக்கிறதோ அதாவது: எங்கும் நிறைந்து நிற்கிறதோ என்றும். (7) (எ—று)

(ப—ரை) यत् (யத்)=எதை லோகமானது श्रोत्रेण (ஶ்ரோத்ரேண)=ஶ்ரோத்ரேந்திரியத்தினால் न शृणोति (ந ஶ்ருணோதி)=விஷயீகரிப்பதில்லையோ येन (யேந)=எந்த சைதன்யாத்மஜ்யோதிஸ்ஸினால் इदम् (இதம்)=இந்த श्रोत्रम् (ஶ்ரோத்ரம்)=ஶ்ரோத்ரேந்திரியமானது

यच्छ्रोत्रेण न शृणोति दिग्देवताधिष्ठितेन आकाशकार्येण मनोवृत्तिसंयुक्तेन न विषयीकरोति लोकः। येन श्रोत्रमिदं श्रुतं=यत्प्रसिद्धं चैतन्यात्मज्योतिषा विषयीकृतं तदेवेत्यादि पूर्ववत्॥ ८॥

यत्प्राणेन न प्राणिति येन प्राणः प्रणीयते।
तदेव ब्रह्म त्वं विद्धि नेदं यदिदमुपासते॥ ९॥

யத்ப்ராணேந ந ப்ராணிதி யேந ப்ராண: ப்ரணீயதே।
ததேவ ப்ரஹ்ம த்வம் வித்தி நேதம் யதிதமுபாஸதே ॥ ௯ ॥

---

श्रुतम् (ஶ்ருதம்)=விஷயமாக்க (ப்ரகாசிப்பிக்க)ப்பட்டதோ तदेव (ததேவ)=அதையே ब्रह्म (ப்ரஹ்ம)=ப்ரம்ஹமாக त्वम् (த்வம்)=நீ विद्धि (வித்தி)=அறிந்துகொள்ளுவாயாக. यत् (யத்)=எதை इदम् (இதம்)=இது என்பதாய் உபாதிபேதத்துடன் கூடினதாக उपासते (உபாஸதே)=உபாஸிக்கின்ற (தியானிக்கின்ற) னரோ इदम् (இதம்)=இது न (ந)=ப்ரம்ஹமன்று. (8) (எ—று)

பாஷ்யம்.—यच्छ्रोत्रेण न शृणोति (யச்ச்ரோத்ரேண ந ஶ்ருணோதி) திக்கு தேவதை இவற்றால் அதிஷ்டிதமும், ஆகாசத்தின் காரியமும், மனோவிருத்தியுடன் கூடினதுமான (ஶ்ரோத்திரத்தினால்) லோகமானது எதை விஷயீகரிப்பதில்லையோ எதனால்=சைதன்னியாத்மஜ்யோதிஸ்ஸினால், இந்த ஶ்ரோத்ரமானது ஶ்ருதமோ=விஷயமாக்கப்பட்டதோ तदेव (ததேவ) என்றதாதிக்கு முன்போலவே பொருள் கொள்க. (8) (எ—று)

ப—ரை) यत् (யத்)=எதை, प्राणेन (ப்ராணேந)=க்ராணேந்திரியத்தினால் न प्राणिति (ந ப்ராணிதி)=லோகமானது விஷயீகரிப்பதில்லையோ. येन (யேந)=எந்த சைதன்யாத்மஜ்யோதிஸ்ஸினால் प्राणः (ப்ராண:)=க்ராணேந்திரியமானது प्रणीयते (ப்ரணீயதே)=தனது விஷயத்தைக்குறித்து செல்லும்படிசெய்யப்படுகிறதோ, तदेव (ததேவ)=அதையே ब्रह्म (ப்ரஹ்ம)=(ப்ரம்ஹமாக) त्वम् (த்வம்)=நீ विद्धि (வித்தி)=அறிந்து கொள்ளுவாயாக. यत् (யத்)=எதை इदम् (இதம்)=இது என உபாதிபேதவிசிஷ்டமாக उपासते (உபாஸதே)=த்யானிக்கின்றனரோ इदम् (இதம்)=இது न (ந)=ப்ரம்ஹமன்று. (9) (எ—று).

यत्प्राणेन=घ्राणेन पार्थिवेन नासिकापुटान्तरवस्थितेन अन्तःकरण-प्राणवृत्तिभ्यां सहितेन यन्न प्राणिति=गन्धवन्न विषयीकरोति, येन चैतन्या-त्मज्योतिषा अवभास्यत्वेन स्वविषयं प्रति प्राणः प्रणीयते। तदेवेत्यादि-सर्वं समानम् ॥ ९ ॥

इति श्रीगोविन्दभगवत्पूज्यपादशिष्यस्य श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यस्य श्रीमच्छङ्करभगवतः कृतौ केनोपनिषत्पदभाष्ये प्रथमः खण्डः समाप्तः ॥

---

பாஷ்யம்.—எதை ப்ராணனுல்=பார்த்திவமும், நாஸிகையின் ஓட்டையினுள்ளிலிருப்பதும் அந்தக்கரணம் ப்ராணன் இவற்றின் விருத்திகளுடன் கூடினதுமான க்ராணேந்திரியத்தினுல் न प्राणिति (ந ப்ராணிதி) மணத்தைப்போன்று விஷயீகரிப்பதில்லையோ, எந்த சைதன்யாத்மஜ்யோதிஸ்ஸினுல் ப்ரகாஶ்யமாக இருப்பதன்மூலம் க்ராணேந்திரியமானது தனது விஷயத்தை (மணத்தை) க்குறித்து போகும்படி செய்யப்படுகிறதோ तदेव (ததேவ) என்றதாதிகளுக்கு முன்போலவே பொருள் கொள்க. (9) (எ—று)

இவ்விதம் கோவிந்தபகவத்பூஜ்யபாதசிஷ்யரும், பரமஹம்ஸ பரிவ்ராஜகாசாரியருமான ஸ்ரீமத்சங்கரபகவத்பாதர் அவர்களின் கிருதியான கேநோபநிடதத்தின் பதபாஷ்யத்தில் முதலாவது கண்டம் முற்றிற்று.

## இரண்டாவது கண்டம்.

यस्माद्विश्वमुदेति यत्र निवसत्यन्ते यदप्येति य-
त्सत्यज्ञानसुखस्वरूपमवधिद्वैतप्रणाशोज्झितम् ।
यज्जाग्रत्स्वपनप्रसुप्तिषु विभात्येकं विशोकं परं
प्रत्यग्ब्रह्म तदस्मि यस्य कृपया तं देशिकेन्द्रं भजे ॥

அவதாரிகா பாஷ்யம்.—இவ்விதம் ஹேயமும் உபாதேயமுமானவற்றுக்கு மாறுபட்ட 'ஆத்மாவே ப்ரம்ஹம்' என வுபதேசிக்கப்

## अथ द्वितीयः खण्डः ॥

एवं हेयोपादेयविपरीतस्त्वात्मा ब्रह्मेति प्रत्यायितः शिष्योऽहमेव ब्रह्मेति सुष्ठु वेदाहमिति मा गृह्णीयादित्याशङ्क्याहाचार्यः शिष्यबुद्धिविचालनार्थम् यदीत्यादि। ननु इष्टैव सुवेदाहमिति निश्चिता प्रतिपत्तिः, सत्यमिष्टा निश्चिता प्रतिपत्तिः नहि सुवेदाहमिति। यद्धि वेद्यं वस्तु विषयी भवति तत्सुष्टुवेदितुं शक्यम्। दाह्यमिव दग्धुमग्नेर्दग्धुर्नत्वग्नेः स्वरूपमेव। सर्वस्य हि वेदितुः स्वात्मा ब्रह्मेति सर्ववेदान्तानां सुनिश्चितोऽर्थः। इहच तदेव प्रतिपादितं प्रश्नप्रतिवचनोक्त्या "श्रोत्रस्य श्रोत्रम्" इत्याद्यया। "यद्वाचानभ्युदितम्" इति च विशेषतोऽवधारितम्। ब्रह्मवित्संप्रदायनिश्चयश्चोक्तः॥

---

பட்ட சிஷ்யனானவன் நானே ப்ரம்ஹமென்றும், நான் என்னை நன்கு அறிவேன் என்றும் எண்ணிவிடுவான் எனவாசங்கித்து ஆசிரியர் சிஷ்யனுடைய புத்தியைப் பரிசோதித்துப்பார்க்கவேண்டி यदिमन्यसे (யதிமந்யஸே) என்றதாதியாலுபதேசிக்கத் தொடங்குகிறார்—

சங்கை—நன்கு அறிவேன் என்பதான நிஸ்சிதமான அறிவானது இஷ்டமானதுதானே எனின்?

உத்தரம்—நிஸ்சிதமான அறிவுவேண்டுமென்பது உண்மைதான். ஆயினும் (ப்ரம்ஹத்தை) நான் நன்கு அறிவேன் என்ற எண்ணம் வேண்டற்பாலதன்று. பொசுக்கும் திறமையுடைய நெருப்புக்கு பொசுக்கக்கூடிய பொருள் பொசுக்கமுடிவதாக வாகலாமேயொழிய அக்னியின் ஸ்வரூபமே அக்கினிக்கு பொசுக்கக்கூடியதாக வாவதில்லை என்பதுபோல, வேத்யமான எந்தவஸ்து விஷயமாகவாகக்கூடுமோ அது நன்கு அறியக்கூடியதாகவாகலாம். அறிபவனை எல்லாருக்கும் சொந்த ப்ரத்யகாத்மாவே ப்ரம்ஹம் என்பது எல்லா வேதாந்தங்களுடையவும் நன்கு நிஸ்சயிக்கப்பட்ட பொருள். இவ்விடத்திலும் "ஸ்ரோத்ரஸ்ய ஸ்ரோத்ரம்" என்றதாதியான ப்ரஸ்னப்ரதிவசன வார்த்தையினால் அதுவே சொல்லவும்பட்டது. "எது வாக்கினால் சொல்லப்படாததோ" என விசேஷித்து உறுதிப்படுத்தவும்பட்டது. ப்ரம்ஹ வித்துக்களின் ஸம்ப்ர

"अन्यदेव तद्विदितादथो अविदितादधि" इत्युपन्यस्तम्, उपसंहरिष्यति च "अविज्ञातं विजानतां विज्ञातमविजानताम्" इति। तस्माद्युक्तमेव शिष्यस्य सुवेदेति बुद्धिं निराकर्तुम्। नहि वेदिता वेदितुर्वेदितुं शक्योऽग्निरिव दग्धुमग्नेः, नचान्यो वेदिता ब्रह्मणोऽस्ति यस्य वेद्यमन्यत्स्याद्ब्रह्म। "नान्यदतोऽस्ति विज्ञातृ" इत्यन्यो विज्ञाता प्रतिषिध्यते। तस्मात्सुष्ठु वेदाहं ब्रह्मेति प्रतिपत्तिर्मिथ्यैव। तस्माद्युक्तमेवाहाचार्यो यदीत्यादि ॥

**यदि मन्यसे सुवेदेति *दभ्रमेवापि नूनं त्वं वेत्थ ब्रह्मणो रूपं यदस्य। त्वं यदस्य देवेष्वथ नु मीमांस्यमेव ते मन्ये विदितम् ॥ १ ॥**

𑌯𑌦𑌿 𑌮𑌨𑍍𑌯𑌸𑍇 𑌸𑍁𑌵𑍇𑌦𑍇𑌤𑌿 𑌦𑌭𑍍𑌰𑌮𑍇𑌵𑌾𑌪𑌿 𑌨𑍂𑌨𑌂 𑌤𑍍𑌵𑌂 𑌵𑍇𑌤𑍍𑌥 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌰𑍂𑌪𑌂 𑌯𑌦𑌸𑍍𑌯। 𑌤𑍍𑌵𑌂 𑌯𑌦𑌸𑍍𑌯 𑌦𑍇𑌵𑍇𑌷𑍍𑌵𑌥 𑌨𑍁 𑌮𑍀𑌮𑌾𑌂𑌸𑍍𑌯𑌮𑍇𑌵 𑌤𑍇 𑌮𑌨𑍍𑌯𑍇 விதிதம் ॥ க ॥

---

தாய மூலம் ஏற்படும் நிர்ஸயமும் சொல்லப்பட்டது. "அன்ய தேவ தத்விதிதாத் அதோ அவிதாத் அதி" எனவுபன்னியஸிக்கவும் பட்டது. "(1)அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாதம் அவிஜாநதாம்" என முடிவில் கூறவும் போகிறது. ஆகவே 'நன்கு அறிவேன்' என்ற ஸிஷ்யனது எண்ணத்தை மறுத்தது பொருந்தக்கூடியதாகவே யாகிறது. அக்னியானது அக்னியினால் பொசுக்கக்கூடியதாக எவ்விதமாகாதோ அவ்விதமே அறிபவனால் அறிபவனை தானே அறியக்கூடியவனாக வாகமாட்டான். எதற்கு வேத்யமாகவும் வேறாகவும் ப்ரம்ஹமாகுமோ ப்ரம்ஹத்தைக் காட்டிலும் அன்னியனை வேதிதாவும்=அறிபவனும் இல்லை. "அறியும் பொருள் யாதுண்டோ அது இந்த ப்ரம்ஹத்தைக் காட்டிலும் வேறுபட்டதன்று" என வேறு விக்ஞாதா=அறிபவன், மறுக்கவும்படுகிறான். ஆகவே நான் ப்ரம்ஹத்தை நன்கு அறிவேன் என்ற எண்ணம் பொய்யேயாகும். ஆனதுபற்றி ஆசிரியர் **यदि मन्यसे** (𑌯𑌦𑌿 𑌮𑌨𑍍𑌯𑌸𑍇) என்றுதொடங்கிக் கூறினது பொருத்தமுள்ளதே யாகும்.

---

*दहरमेवापि (𑌦𑌹𑌰𑌮𑍇𑌵𑌾𑌪𑌿) என்றும வேறுபாடமுண்டு. அதன் படியும் பொருள் ஒன்றேயாகும். (1) இதன் பொருளை இரண்டாவது கண்டம் 3-வது மந்திரத்தில் காண்க.

यदि कदाचिन्मन्यसे सुवेदेति,सुष्ठु वेदाहं ब्रह्मेति। कदाचिद्यथाश्रुतं दुर्विज्ञेयमपि क्षीणदोषः सुमेधाः कश्चित्प्रतिपद्यते कश्चिन्नेति साशङ्कमाह—यदीत्यादि। दृष्टं च—"य एषोऽक्षिणि पुरुषो दृश्यत एष आत्मेति होवाचैतदमृतमभयमेतद्ब्रह्म" इत्युक्ते प्राजापत्यः पण्डितोप्यसुरराड्विरोचनःस्व-

---

(ப—ரை) सुवेद (ஸுவேத)= நன்கு அறிவேன் इति (இதி)= என்று यदिमन्यसे (யதிமந்யஸெ)=ஒருஸமயம் எண்ணுவாயேயாஞல் अस्य ब्रह्मणः (அஸ்ய ப்ரஹ்மண:)=இந்தப்ரம்ஹத்தினுடைய தான यत् रूपम् (யத் ரூபம்)=யாதொரு ஸ்வரூபமுண்டோ அதை त्वम् (த்வம்)=நீ दभ्रमेवापि वेत्थ (தப்ரமேவாபி வேத்த)=அற்பமாகவே அறிந்தவனுகின்ருய். अस्य (அஸ்ய)=இந்த ப்ரம்ஹத்துக்கு देवेषु (தேவேஷு)=அதிதைவதத்திலிருப்பதாக यत् (யத்)=எந்த ரூபத்தை எண்ணுகின்ருயோ அதையும் त्वम् (த்வம்)=நீ அற்பமாகவே அறிந்தவனுகின்ருய். अथनु (அதநு)=ஆகவே ते (தே)=உன்னுல் ப்ரம்ஹமானது मीमांस्यमेव (மீமாம்ஸ்யமேவ)=விசாரித்தறியக்கூடியதாகவே ஆகிறது. இவ்விதம் ஆசிரியரால் சொல்லப்பட்ட சிஷ்யன் தனித்த இடத்திலிருந்து மனத்தையடக்கினவனுய்க்கொண்டு ஆசிரியராலிவ்விதஞ் சொல்லப்பட்ட சாஸ்திரத்தின் பொருளை விசாரித்தறிந்து யுக்தியினுலுமுறுதிப்படுத்திக்கொண்டு சொந்த அனுபவத்துக்குக் கொண்டுவந்து ஆசிரியரின் அருகில் வந்து "நான் இப்பொழுது विदितम् (விதிதம்) ப்ரம்ஹ மறியப்பட்டதாகவாகலாம் என मन्ये (மந்யே) எண்ணுகிறேன்" என்ருன். (1) (எ—று)

பாஷ்யம்.—ஒருஸமயம் நான் ப்ரம்ஹத்தை நன்கு அறிவேன் என எண்ணுவாயேல், ஶ்ருதியில் கூறப்பட்டபடிக்கான ப்ரம்ஹமானது அறிதற்கரிதானதாயினும் தேய்ந்த தோஷமுள்ளவனும் மிக்க மேதாவியுமான வொருவன் ஒரு ஸமயம் அறிந்தாலும் அறிவான். ஒருவன் அறியாமலுமிருக்கலாம் எனக்கருதி यदि (யதி) என்பதாய் (இங்கு மூலத்தில்) சந்தேஹத்துடன் உபதேசிக்கப்பட்டது. இவ்விஷயம் வேறு ஶ்ருதி மூலம் காணவும்பட்டிருக்கிறது. அதாவது:—"கண்ணில் யாதொரு இந்தப் புருஷன் காணப்படுகிருனே இவன் ப்ராணிகளின் ஆத்மா எனச்சொன்னுர். (எதை ஆத்மதத்த்வமென்ருேமோ) இதுவே அமிருதமும் அபயமுமாகும். (ஆனதுபற்

भावदोषवशादनुपपद्यमानमपि विपरीतमर्थं शरीरमात्मेति प्रतिपन्नः। तथे- न्द्रो देवराट् सकृत् द्विस्त्रिरुक्तं चाप्रतिपद्यमानः स्वभावदोषक्षयमपेक्ष्य चतुर्थे पर्याये प्रथमोक्तमेव ब्रह्म प्रतिपन्नवान्। लोकेऽप्येकस्माद्गुरोः शृण्वतां कश्चिद्यथावत्प्रतिपद्यते, कश्चिदयथावत्, कश्चिद्विपरीतं, कश्चिन्न प्रतिपद्यते, किमुवक्तव्यमतीन्द्रियमात्मतत्त्वम्। अत्र हि विप्रतिपन्नाः सदसद्वादिन- स्तार्किकास्सर्वे। तस्माद्विदितं ब्रह्मेति सुनिश्चितोक्तमपि विषमप्रतिपत्ति- त्वात् "यदिमन्यसे" इत्यादि साशङ्कं वचनं युक्तमेवाचार्यस्य। दभ्रम्= अल्पमेवापि नूनं त्वं वेत्थ=जानीषे ब्रह्मणो रूपम्। किमनेकानि ब्रह्मणोरूपा-

---

ரியே) இது ப்ரம்ஹமுமாகும்" என்று குருவான ப்ராஜாபதியினால் சொல்லப்பட்டதும், ப்ராஜாபதியின் புத்திரனும், பண்டிதனும், அசுர ராஜனுமான விரோசனன் இயற்கையிலமைந்துள்ள தோஷ வசத்தினால் சரீரமே ஆத்மா என்பதாய் பொருந்தக்கூடாததாகவிருப்பினும் கூட விபரீதமான (நேர்மாறான) பொருளையே க்ரஹித்துக் கொண்டான். அவ்விதமே தேவராஜனான இந்திரன் ஒருதடவை இரண்டு தடவை மூன்றுதடவை சொல்லப்பட்டதையும் கூடக் க்ரஹித்துக் கொள்ளமுடியாதவனாய் இயற்கையிலேற்பட்ட தோஷத்தின் தேய்தலை அபேக்ஷித்து நான்காவது தடவையில் முதற்றடவையிற் சொல்லப்பட்டதாகவே உள்ள ப்ரம்ஹத்தை அறிந்துகொண்டான். உலகிலுங்கூட ஒரே குருவினிடமிருந்து கேட்பவருள் ஒருவன் உள்ளபடி அறிந்துகொள்ளுகிறான். ஒருவன் உள்ளபடி அறிந்து கொள்ளுவதில்லை. ஒருவன் நேர்மாறாக அறிந்து கொள்ளுகிறான். ஒருவன் அறிந்து கொள்ளுவதேயில்லை. இவ்விதமிருக்க இந்திரியங்களுக்குப் புலனாகாத ஆத்மதத்த்வத்தைப்பற்றிச் சொல்லவும்வேண்டுமோ? காரணமான ப்ரம்ஹம் உண்டென்றும் இல்லையென்றும் சொல்லுகின்றவர்களான தார்க்கிகர்கள் யாவரும் இவ்விஷயத்திலன்றோ முறண்பட்ட எண்ணங்கொள்ளுகின்றனர். ஆகவே அவிதிதம்= வேதனைரூபமான விருத்திக்கு விஷயமாகாதது ப்ரம்ஹம் என நன்கு நிச்சிதமாகச் சொல்லப்படினுங்கூட மாறுதலான அறிவேற்படல் கூடுமானதால் "நன்கு அறிவேன் என ஒரு ஸமயம் எண்ணுவாயேல்" என்றதாதியான ஆசங்கையுடன் கூடின ஆசிரியரின் வசன

णि महान्त्यर्भकाणि च येनाह दभ्रमेवेत्यादि? बाढम्। अनेकानिहि नामरूपोपाधिकृतानि ब्रह्मणो रूपाणि न स्वतः। स्वतस्तु "अशब्दमस्पर्शमरूपमव्ययं तथाऽरसं नित्यमगन्धवच्च यत्" इति शब्दादिभिस्सह रूपाणि प्रतिषिध्यन्ते। ननु येनैव धर्मेण यद्रूप्यते तदेव तस्य स्वरूपमिति ब्रह्मणोऽपि येन विशेषेण निरूपणं तदेव तस्य रूपं स्यात्। अत उच्यते-चैतन्यं पृथिव्यादीनाम यतमस्य सर्वेषां विपरिणतानां वा धर्मो न भवति, तथा श्रोत्रादीनामन्तःकरणस्य च धर्मो न भवतीति ब्रह्मणो रूपमिति=ब्रह्म

---

மானது பொருத்தமானதேயாகும். நீ நிஶ்சிதமாகவே அற்பமாகவேயுள்ள ப்ரம்ஹத்தின் ரூபத்தை அறிந்தவனாகின்றனே.

சங்கை—எக்காரணத்தினால் அற்பமாகவேயுள்ள ப்ரம்ஹத்தினது ரூபத்தை யறிகின்றாய் என்றதாதியைச் சொல்லுகிறாரோ அக்காரணம் பற்றி ப்ரம்ஹத்துக்குப் பெரியனவும் சிறியனவுமான அனேக ரூபங்களுண்டோ? எனின்.

உத்தரம்—ஆம். ப்ரம்ஹத்துக்கு நாமரூபங்களாகிற உபாதிகளினாற் செய்யப்பட்ட ரூபங்கள் அனேகங்கள் உண்டே யொழிய இயற்கையிலில்லை. இயற்கையிலோவெனில் "யாதொரு ப்ரம்ஹமுண்டோ அது "அசப்தம்=சப்தமற்றது, ஸ்பர்சமற்றது ரூபமற்றது, அழிவற்றது, அவ்விதமே ரஸமற்றது, நித்யமானது, கந்தமுள்ளதுமன்று" என்பதாய் சப்தாதிகளுடன் கூட ரூபங்களும் நிஷேதிக்க (மறுக்க) ப்படுகின்றன.

சங்கை—எந்தத்தர்மத்தினாலேயே எது நிரூபிக்கப்படுகின்றதோ அதுவே அதனுடைய ஸ்வரூபமாகும் என்பதுபற்றி ப்ரம்ஹத்துக்குங்கூட எந்த விசேஷணத்தினால் நிரூபணம் ஏற்படுகிறதோ அதுவே அதனுடைய=ப்ரம்ஹத்தினுடைய ரூபமாகலாம். ஆனதுபற்றியே தான் சைதன்யமானது பூமி முதலியவைகளுள் ஒன்றினுடையவோ எல்லாவற்றினுடையவோ, சரீரமாக மாறுதலையடைந்தவைகளுடையவோ தர்மமாகவாகமாட்டாது. அவ்விதமே ஸ்ரோத்ராதிகளுடையவும் அந்தக் கரணத்தினுடையவும் தர்மமாகவாகாது என்று சொல்லப்படுகிறது. "ப்ரம்ஹணோ ரூபம்" என்பதாய் ப்ரம்ஹமா

रूप्यते चैतन्येन। तथाचोक्तम्—"विज्ञानमानन्दं ब्रह्म" "विज्ञानघन एव" "सत्यं ज्ञानमनन्तं" "प्रज्ञानं ब्रह्म" इति च ब्रह्मणो रूपं निर्दिष्टं श्रुतिषु। सत्यमेवम्। तथापि तदन्तःकरणदेहेन्द्रियोपाधिद्वारेणैव विज्ञानादिशब्दैर्निर्दिश्यते तदनुकारित्वाद्देहादिवृद्धिसङ्कोचच्छेदादिषु नाशेषु च, न स्वतः। स्वतस्तु "अविज्ञातं विजानतां, विज्ञातमविजानताम्" इति स्थितं भविष्यति। यदस्य ब्रह्मणोरूपमिति पूर्वेण संबन्धः। न केवलं अध्यात्मोपाधिपरिच्छिन्नस्यास्य ब्रह्मणोरूपं त्वमल्पं वेत्थ, यदप्यधिदैवतोपाधिपरिच्छिन्नस्यास्य ब्रह्मणो रूपं देवेषु वेत्थ त्वं तदपि नूनं दभ्रमेव वेत्थेति मन्ये-

---

னது சைதன்னியத்தினுல் நிரூபிக்கப்படுகிறது. அவ்விதமே "விக்ஞானம் ஆனந்தம் ப்ரம்ஹ" என்றும், "விச்ஞானகனனே" என்றும், "ஸத்யம் க்ஞானம் அனந்தம்" என்றும், "ப்ரக்ஞானம் ப்ரம்ஹ" என்றுமானவைகளால் சுருதிகளில் ப்ரம்ஹத்துக்கு ரூபமானது சொல்லவும்பட்டிருக்கிறது. எனின்?

உத்தரம்—இஃதுண்மைதான் ஆயினும் அந்தப்ரம்ஹமானது அந்தக்கரணம் தேஹம் இந்திரியம் இவையாகிற உபாதியின் வாயிலாகவே விச்ஞானுதிசப்தங்களால் குறிப்பிடப்படுகிறது. தேஹாதிகளின் விருத்தி, ஸங்கோசம், வெட்டுப்படல் முதலியவற்றிலும் நாசங்களிலும் சைதன்யத்துக்குப் பொய்யான தேஹதர்மங்களை யனுஸரித்துத் தோன்றுதல் காணப்படுவதே அதன் காரணமாகுமேயொழிய இயற்கையில் அவ்விதமுபதேசிக்கப்படுவதில்லை. இயற்கையிலோ வெனில் விஜாநதாம் = விக்ஞானமென்ற அந்தக்கரணவிருத்திக்கு விஷயமாக அறிகிறவர்களுக்கு, அறியப்படாதது, முற்கூறியவாறு அறியாதவர்களுக்கு அறியப்பட்டதாக வாகிறது, என்பது நிலைத்ததாக வாகி விடுகிறது. "यदस्य ब्रह्मणो रूपम्" (யதஸ்ய ப்ரஹ்மணோ ரூபம்") என்பதாய் முன்னுள்ள வாக்கியத்துடன் சேர்த்துக் கொள்ளவேண்டும். சரீரத்திலுள்ள உபாதிபரிச்சின்னமான இந்த ப்ரம்ஹத்தினுடைய ரூபத்தை நீ அற்பமாகத் தெரிந்து கொள்ளுகின்றாய் என்பது மட்டுமில்லை. அதிதைவோபாதி பரிச்சின்னமான இந்த ப்ரம்ஹத்தினுடைய தேவர்களிடத்திலிருப்பதாக யாதொரு ரூபத்தை நீ அறிகின்றாயோ அதையும் நீ அற்பமாக

ऽहम्। यदध्यात्मं यदधिदैवं तदपि च देवेषूपाधिपरिच्छिन्नत्वाद्भ्रत्वान्न निवर्तते। यत्तु विध्वस्तसर्वोपाधिविशेषं शान्तमनन्तमेकमद्वैतं भूमाख्यं नित्यं ब्रह्म न तत्सुवेद्यमित्यभिप्राय:। यतएवमथनु=तस्मान्मन्येऽद्यापि मीमांस्यं विचार्यमेव ते=तव ब्रह्म। एवमाचार्योक्त: शिष्य एकान्त उपविष्ट: समाहितस्सन्यथोक्तं आचार्येणागममर्थतो विचार्य तर्कतश्च निर्धार्य स्वानुभवं कृत्वाऽऽचार्यसकाशमुपगम्योवाच–मन्येऽहमथेदानीं, विदितं ब्रह्मेति॥

कथमिति शृणुत।

नाहं मन्ये सुवेदेति नो न वेदेति वेद च।
यो नस्तद्वेद तद्वेद नो न वेदेति वेद च॥ २॥

𑌨𑌾𑌹𑌂 𑌮𑌨𑍍𑌯𑍇 𑌸𑍁𑌵𑍇𑌦𑍇𑌤𑌿 𑌨𑍋 𑌨 𑌵𑍇𑌦𑍇𑌤𑌿 𑌵𑍇𑌦 𑌚 ।
𑌯𑍋 𑌨𑌸𑍍𑌤𑌦𑍍𑌵𑍇𑌦 𑌤𑌦𑍍𑌵𑍇𑌦 𑌨𑍋 𑌨 𑌵𑍇𑌦𑍇𑌤𑌿 𑌵𑍇𑌦 𑌚 ॥ ௨ ॥

---

வேதான் அறிகின்றாய் என நான் எண்ணுகிறேன். அத்யாத்மத்தில் எதுண்டோ, அதிதைவத்தில் எதுண்டோ அதுவும் தேவர்களிடத்தில் உபாதியினால் பரிச்சின்னமாக்க (குறைக்க) ப்பட்டிருப்பதால் அற்பமாக விருக்குஞ்தன்மையினின்றும் நீங்குவதில்லை. அழிக்கப்பட்ட எல்லாவுபாதிவிசேஷத்தையு முடையதும், சாந்தமும், அனந்தமும், ஏகமும், அத்வைதமும், பூமா எனப் பெயரியதும், நித்யமுமான ப்ரஹ்மம் யாதுண்டோ அது நன்கு அறியக்கூடியதாக வாகாது என்பது கருத்து. யாதுகாரணத்தால் இவ்விதமிருக்கிறதோ அக்காரணத்தால் இப்பொழுதுங்கூட உன்னால் ப்ரம்ஹம் விசாரித்தறியக்கூடியதாகவே தானிருக்கிறது. இவ்விதம் ஆசிரியாலுபதேசிக்கப்பட்ட சிஷ்யன் தனியானவிடத்தில் உட்கார்ந்து சித்தத்தை யடக்கினவனாய்க் கொண்டு உள்ளபடி ஆசிரியராலுபதேசிக்கப்பட்ட சாஸ்திரத்தை அர்த்தத்துடன் விசாரித்தும் யுக்தியினாலுறுதிப்படுத்தியும் சொந்த அனுபவத்துக்கும் கொண்டுவந்து பிறகு ஆசிரியருடைய அருகில் வந்து 'ப்ரம்ஹமானது அறியப்பட்டதாகவிருக்கலாமென நானிதுபோழ்து எண்ணுகிறேன்' என்றான். (1)

அவதாரிகா பாஷ்யம்.—எவ்விதமெனின்? கேளுங்கள் எனச் சொல்லுகிறான்—

नाहं मन्ये सुवेदेति नैवाहं मन्ये सुवेद ब्रह्मेति । नैव तर्हि विदितं त्वया ब्रह्मेत्युक्त आह—नो नवेदेति वेद च । वेद चेति च शब्दात्नवेद च । ननु

---

(ப—ரை) सुवेदेति (ஸுவேதேதி)=ப்ரம்ஹத்தை நன்கு அறிவேன் என * नाहमन्ये (நாஹமன்யே)=நான் எண்ணவேயில்லை. न वेदेति(ந வேதேதி)=அறியவில்லையென்றும், नो (நோ)=எண்ணவேயில்லை. பின்னேயோவெனில் वेद (வேத)=அறியவும் செய்கிறேன். च (அ)=அறியவுமில்லை. नो नवेदेति वेद च (நோ நவேதேதி வேத அ)="நோ நவேதேதி வேத ச" என்றவிடத்தில் वेद च(வேத அ)=என்றதனால் அறியவும் செய்கிறேன் ஆனால் அறியவுமில்லை என்ற तत् (தத்)=அந்த வார்த்தையை नः (ந:)=என்னுடன் அத்யயனஞ்செய்பவருள் यः (ய:)=எவனொருவன் वेद (வேத)=அறிவானோ அவன் तत् (தத்)=அந்த ப்ரம்ஹத்தை वेद (வேத)=அறிந்தவனாகவாகிறான்.

பாஷ்யம்.—नाहं मन्ये सुवेदेति (நாஹம் மன்யே ஸுவேதேதி) நன்கு அறிவேன் ப்ரம்ஹத்தையென நான் எண்ணவேயில்லை. அங்

---

* இங்கு மூலத்தில் "नाहमन्ये" ("நாஹமன்யே") என்றே பாடமிருக்க வேண்டுமெனப் படுகிறது. नाहं मन्ये (நாஹம் மன்யே) என்றபாடம் அவ்வளவு பொருத்தமானதன்று. ஏன்? मन्ये (மன்யே) என்ற உத்தமபுருஷப்ரயோகத்திலிருந்தே நான் என்பது கிடைத்துவிடுவதும், பாஷ்யத்தில் नाह (நாஹ) என்பதற்கு नैव (நைவ) என அர்த்தம் செய்திருப்பதுமே அதன் காரணமாகும். नैवाहं मन्ये (நைவாஹம் மன்யே) என்றவிடத்தில் अहम् (அஹம்) என்ற சப்தம் பாஷ்யத்தில் காணப்படுவதானது मन्ये (மன்யே) என்ற உத்தமபுருஷப்ரயோகத்தால் கிடைத்த अहम् (அஹம்) என்றதைச் சேர்த்துக்கொண்டதாகவே கொள்ளவேண்டும். இல்லையேல் नैव (நைவ) எனக் கூறினதும் मन्ये (மன்யே) என்ற உத்தமபுருஷ ப்ரயோகத்தாலேயே अहम् (அஹம்) என்பது கிடைக்கக்கூடியதாக இருக்கத் திரும்பவும் அந்த अहम् (அஹம்) என்பதைக் கூறினதும் வீணாகிவிடும். மேலும் வாக்ய பாஷ்யத்தில் "अह" ("அஹ") என்பது தேற்றத்தைச் சொல்லும் சப்தமாகும். அதாவது: "नैवमन्ये" ("நைவமன்யே") அறியவேயில்லையென்பது அதன் பொருள்" என பாஷ்யக்காரர் பொருள் கூறியிருப்பதும் மற்றொரு காரணமாகும்.

विप्रतिषिद्धं नाहं मन्ये सुवेदेति, नो न वेदेति, वेद चेति। यदि न मन्यसे सुवेदेति कथं मन्यसे वेद चेति। अथ मन्यसे वेदैवेति कथं न मन्यसे सुवेदेति। एकं वस्तु येन ज्ञायते तेनैव तदेव वस्तु न सुविज्ञायत इति विप्रतिषिद्धं संशयविपर्ययौ वर्जयित्वा। नच ब्रह्म संशयितत्वेन ज्ञेयं विपरीतत्वेनवेति नियन्तुं शक्यम्। संशयविपर्ययौ हि सर्वत्रानर्थकरत्वेनैव प्रसिद्धौ। एवमाचार्येण विचाल्यमानोऽपि शिष्यो न विचचाल। 'अन्देव तद्विदितादथो अविदितादधि' इत्याचार्योक्तागमसंप्रदायबलादुपपत्त्यनुभवबलाच्च

---

னமாயின் உன்னால் ப்ரம்ஹமானது அறியப்படவேயில்லை என்று ஆசிரியரால் சொல்லப்படவே சிஷ்யன சொல்லுவதாவது—**नो नवेदेति** (நோ நவெதெதி) நான் அறியவில்லையென்பதுமில்லை. ஆயினும் **वेद**(வெத) அறிவேன் **च**(ச) என்ற சப்தமிருப்பதைக்கொண்டு **न वेद च** (ந வெத ச) எனச் சேர்த்துக்கொண்டு அறியவுமில்லை எனப் பொருள் சொள்ளவேண்டும்.

சங்கை—'நன்கு அறிகிறேன் என எண்ணவேயில்லை. அறியவில்லை என்பதுமில்லை அறியவும் அறிகிறேன். ஆனால் அறியவுமில்லை.' என்பது ஒன்றுக்கொன்று முறண்படுவதாகும். நன்கு அறியவில்லை என எண்ணுவாயேல் அறியவுமறிவேன் என எவ்விதமெண்ணக்கூடும். அறியவே அறிவேன் என எண்ணுவாயேல் நன்கு அறிவேன் என எவ்விதமெண்ணாமலிருப்பாய். எவனால் ஒருவஸ்து அறியப்படுகிறதோ அவனாலேயே அதே பொருள் நன்கு அறியப்படவில்லை என்பது ஸம்சயம், விபரீதக்ஞானம் இவையில்லாதவிடத்தில் முறண்பட்டதேயாகுமன்றோ. ப்ரம்ஹமானது ஸம்சயிக்கப்பட்டதாக அறியவேண்டுமென்றோ, விபரீதமாக (மாறுபட்டதாக) அறியவேண்டுமென்றோ வற்புறுத்தக் கூடியதில்லையன்றோ. ஸம்சயம் விபரீதக்ஞானம் இரண்டும் எல்லாவிடத்திலும் அனர்த்தத்தைத் தரக்கூடியனவென்பது ப்ரஸித்தமன்றோ என இவ்விதம் ஆசிரியரால் அசைக்கப்பட்டினுங்கூட சிஷ்யன் தனது நிர்ணயத்தினின்றும் மாறினானில்லை. *"அன்யதேவ தத்விதிதாத் அதோ அவிதிதாத்

---

* இம்மந்திரத்தின் பொருளை 1-வது கண்டம் 4-வது மந்திரத்தில் பார்க்கக் காண்க.

जगर्ज च ब्रह्मविद्यायां दृढनिश्चयतां दर्शयन्नात्मनः। कथमिति। उच्यते। यः= यः कश्चित्, नः=अस्माकं सब्रह्मचारिणां मध्ये तत्=उक्तं वचनं तत्वतो वेद स तत्=ब्रह्म वेद। किं पुनस्तद्वचनमित्यत आह—नो नवेदेति वेद चेति। यदेव 'अन्यदेव तद्विदितादथो अविदितादधि' इत्युक्तं तदेव वस्त्वनुमानानुभवाभ्यां संयोज्य निश्चितं वाक्यान्तरेण नो नवेदेति वेदचेत्यवोचदाचार्यबुद्धिसंवादार्थं मन्दबुद्धिग्रहणव्यपोहार्थं च। तथा च गर्जितमुपपन्नं भवति यो नस्तद्वेदेति ॥ २ ॥

शिष्याचार्यसंवादात्प्रतिनिवृत्य स्वेन रूपेण श्रुतिः समस्तसंवादनिर्वृत्तमर्थमेव बोधयति—यस्यामतमित्यादिना ॥

---

அதி" என்பதாய் ஆசிரியர் சொல்லிய சாஸ்திரம், ஸம்பிரதாயம், இவற்றின் வலுக்கொண்டும், அதற்குப் போதிய யுக்தி அனுபவம் இவற்றின் வலுக்கொண்டும் ப்ரம்ஹவித்யையில் தனக்குள்ள திருட நிய்சயத்தைக் காட்டவேண்டி கர்ஜித்துப் பேசத்தொடங்கினன். எவ்விதமெனின்? சொல்லுகிறோம். எனது தோழர்களான வித்யார்த்திகளுள் யாரேனுமொருவன் அதை=நான் சொன்னவார்த்தையை உண்மையாக அறிவானேல், அவன் அதை ப்ரம்ஹத்தை அறிந்தவனுவான். நீ சொன்ன அந்த வசனம் யாதெனில் சொல்லுகிறன். அதாவது:—"नो नवेदेति वेद च" ("நொ நவெதெதி வெத ச") (அறியவில்லை என்பதில்லை. ஆனல் அறியவும் அறிவேன், அறியவும் மாட்டேன்) என்றும். "அந்யதேவ தத்விதிதாத் அதோ அவிதாத் அதி" என்பதால் எதேபொருள் சொல்லப்பட்டதோ அதையே அனுமானம் சொந்த அனுபவம் இவற்றுடன் சேர்த்து வேறு வாக்கியத்தினுலும் நிய்சயித்துக்கொண்டு ஆசிரியருடைய எண்ணத்துடன் ஒற்றுமையைக் காட்டவேண்டியும், தான் மந்தமான புத்தியுள்ளவன் எனத் தன்னைப்பற்றி ஆசிரியர் கொண்ட எண்ணத்தைப் போக்கவேண்டியும், "नो न वेदेति वेद च" ("நொ நவெதெதி வெத ச") எனச் சிஷ்யன் சொன்னன். அவ்விதமானல்தான் "எங்களுக்குள் எவனொருவன் அதையறிவானே" எனக் கர்ஜித்தது பொருத்தமுள்ளதாகவாகும். (2) (எ—று)

**यस्यामतं तस्य मतं मतं यस्य न वेद सः ।
अविज्ञातं विजानतां विज्ञातमविजानताम् ॥ ३ ॥**

𑌯𑌸𑍍𑌯𑌾𑌮𑌤𑌂 𑌤𑌸𑍍𑌯 𑌮𑌤𑌂 𑌮𑌤𑌂 𑌯𑌸𑍍𑌯 𑌨 𑌵𑍇𑌦 𑌸𑌃 ।
𑌅𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌂 𑌵𑌿𑌜𑌾𑌨𑌤𑌾𑌂 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌮𑌵𑌿𑌜𑌾𑌨𑌤𑌾𑌮𑍍 ॥ ௩ ॥

---

அவதாரிகா பாஷ்யம்.—சிஷ்யன் ஆசிரியர் இவ்விருவரும் ஒத்துப்பேசும் முறையினின்றும் விலகி ச்ருதியானது சொந்த ரூபத்தினால் (தனது அபிப்பிராயமாக) இதுவரை சொல்லிய எல்லா வியவஹாரத்தாலும் ஏற்பட்டபொருளையே "யஸ்யாமதம்" என்றதாதியாற் சொல்லுகிறது—

(ப—ரை) **यस्य** (𑌯𑌸𑍍𑌯)=எந்த ப்ரம்ஹவித்துக்கு ப்ரம்ஹமானது **अमतम्** (𑌅𑌮𑌤𑌮𑍍)=அறியப்படாதது=அறிவென்ற அந்தக்கரணவிருத்திக்கு விஷயமாகவாகாதது, [என **मतम्** (𑌮𑌤𑌮𑍍)=அபிப்பிராயமோ] **तस्य** (𑌤𑌸𑍍𑌯)=அவருக்கு, **मतम्** (𑌮𑌤𑌮𑍍)=அது நன்கு அறியப்பட்டதாகவாகிறது என்பது அபிப்ராயம். **यस्य** (𑌯𑌸𑍍𑌯)=எவனுக்கு **मतम्** (𑌮𑌤𑌮𑍍)=என்னால் அறியப்பட்டது ப்ரம்ஹமென்ற நிம்சயமேற்படுகிறதோ, **सः** (𑌸𑌃)=அவன் **न वेद** (𑌨 𑌵𑍇𑌦)=ப்ரம்ஹத்தை அறிந்தவனேயில்லை. இவ்விதம் வித்வான் அவித்வான் இவர்களைப்பற்றிச் சொல்லப்பட்ட இரண்டு பக்ஷங்களையும் ச்ருதி உறுதிப்படுத்திப் பின்வருமாறு கூறுகிறது—**विजानताम्** (𑌵𑌿𑌜𑌾𑌨𑌤𑌾𑌮𑍍) = ப்ரம்ஹம் அறியப்பட்டதே என்று நன்கு எண்ணுகின்றவர்களுக்கு **अविज्ञातम्** (𑌅𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌮𑍍)=அறியப்படாததேயாகிறது. **अविजानताम्** (𑌅𑌵𑌿𑌜𑌾𑌨𑌤𑌾𑌮𑍍)=ஸம்யக்தர்சனமில்லாதவர்களுக்குங்கூட அதாவது:—இந்திரியம் மனஸ் புத்தி இவைகளிலேயே ஆத்மபுத்தியுள்ளவர்களுக்குங்கூட என்றும். அது **विज्ञातम्** (𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌮𑍍)=அறியப்பட்டதாகவே ஆகிறது. இவ்விதம் எண்ணுகின்றவர்களுக்குங்கூட இந்திரியமனோபுத்தியாதிகளுக்கு ப்ரகாசத்தைத்தருவதாக ப்ரம்ஹமிருப்பதே அதன் காரணமாகும் என்பது கருத்து.* (3) (எ—று)]

---

* க்ஞானக்ஞானாதி ஸகல நிலைகளிலுங்கூட ப்ரம்ஹமானது உள்நின்று ஸகலத்தையும் ப்ரகாசப்படுத்துவதாகவாகிறது என்று சொல்லப்பட்டதாகவாகிறது. ஆகவே ஸர்வாதிஷ்டான சின்மாத்ரமாகவுள்ளது ப்ரம்ஹம் என்பது இதனால் பெறப்பட்டது என்பது கருத்து.

यस्य=ब्रह्मविदः, अमतम्=अविज्ञातमविदितं ब्रह्मेति मतम्=अभिप्रायो निश्चयः तस्य मतम्=ज्ञातं सम्यग्ब्रह्मेत्यभिप्रायः। यस्य पुनर्मतं=ज्ञातं विदितं मया ब्रह्मेति निश्चयः, न वेदैव सः=न ब्रह्म विजानाति सः। विद्वदविदुषोर्यथोक्तौ पक्षाववधारयति—अविज्ञातम्=अमतमविदितमेव ब्रह्म, विजानताम्=सम्यग्विदितवतामित्येतत्। विज्ञातम्=विदितं ब्रह्म, अविजानताम्=असम्यग्दर्शिनामिन्द्रियमनोबुद्धिष्वेवात्मदर्शिनामित्यर्थः। न त्वत्यन्तमेवाव्युत्पन्नबुद्धीनाम्। नहि तेषां विज्ञातमस्माभिर्ब्रह्मेति मतिर्भवति। इन्द्रियमनोबुद्ध्युपाधिष्वात्मदर्शिनां तु ब्रह्मोपाधिविवेकानुपलंभात् बुद्ध्याद्युपाधेश्च

---

பாஷ்யம்.—எந்த ப்ரப்ஹவித்துக்கு அமதம்=அவிக்ஞாதம் அதாவது: அறியப்படாதது ப்ரப்ஹம் என்பது மதமோ=அபிப்பிராயமோ=எண்ணமோ, அவருக்கு மதமாக=ப்ரப்ஹமானது நன்கு அறியப்பட்டதாகவே ஆகிறது என்பது கருத்து. எவருக்கு என்றால் ப்ரப்ஹமானது அறியப்பட்டது என நிஸ்சயமோ அவர் அறியவே மாட்டார். அதாவது:—ப்ரம்ஹத்தை அவர் அறிந்தவராகவாகமாட்டார் என்றும். வித்வான் அவித்வான் இருவர்க்கும் இதுவரை சொல்லப்பட்ட இரண்டு பக்ஷங்களையும் ஸ்ருதி உறுதியாக்கிக்கூறுகிறது—विजानताम् (விஜாநதாம்) நன்கு அறிந்தவர்களுக்கு ப்ரம்ஹமானது அவிக்ஞாதம்=அமதமாக=அறியப்படாததாகவே (அறிவுக்கு விஷயமாகவாகாததாகவே) ஆகிறது என்றும். அவிஜாநதாம்=ஸம்யக்தர்சனமில்லாதவர்களுக்கு, அதாவது:—இந்திரியம் மனஸ் புத்தி இவைகளிலேயே ஆத்மக்ஞானமுள்ளவர்களுக்கு என்பது பொருள். ப்ரம்ஹமானது விக்ஞாதமாக=அறியப்பட்டதாகவு மாகிறது. முற்றிலுமே வ்யுத்பத்தியில்லாத புத்தியுடையவர்களுக்கு என்பது अविजानताम् (அவிஜாநதாம்) என்றதின் பொருளன்று. அம்மாதிரியானவர்களுக்கு ப்ரம்ஹம் எங்களாலறியப் பட்டது என்ற புத்தியுண்டாக மாட்டாதன்றோ. இந்திரியம் மனஸ் புத்தி இவையாகிற உபாதிகளில் ஆத்மபுத்தி உள்ளவர்களுக்கோ வெனில் ப்ரம்ஹத்துக்கும், உபாதிக்கும் பகுத்தறிவேற்படாததாலும் புத்தியாதியாகிற உபாதியானது அறியப்பட்டதாக விருப்பதாலும் ப்ரம்ஹமானது அறியப்பட்டது என்ற ப்ராந்தியானது (மயக்கமானது)

**विज्ञातत्वाद्विदितं ब्रह्मेत्युपपद्यते भ्रान्तिरित्यतःसम्यग्दर्शन पूर्वपक्षत्वेनोपन्यस्यते विज्ञातमविजानतामिति। अथवा हेत्वर्थ उत्तरार्धो अविज्ञातमित्यादिः ॥ ३ ॥**

**अविज्ञातं विजानतामित्यवधृतम्। यदि ब्रह्मात्यन्तमेवाविज्ञातं लौकिकानां ब्रह्मविदां चाविशेषः प्राप्तः। अविज्ञातं विज्ञानतामिति च परस्परविरुद्धम्। कथं नु तद्ब्रह्म सम्यग्विदितं भवतीत्येवमर्थमाह—**

---

உண்டாகலாம் என்ற இக்காரணத்தால் ஸம்யக்தரிசனத்துக்குப் பூர்வபக்ஷமாக வாகுந்தன்மையில் "**विज्ञातमविजानताम्**" ("விஜ்ஞாதம விஜாநதாம்") எனவுபதேசிக்கப் படுகிறது*. அல்லது:—"அவிக்ஞாதம்" என்றதாதியான மந்திரத்தின் உத்தரார்த்தமானது=பிற்பாதியானது காரணங் கூறவேண்டி கூறப்பட்டது என்று கொள்ளவும். அதாவது:—யாதுகாரணத்தால் அறியப்பட்டதாக எண்ணுகின்றவர்களுக்கு அறியப்படாததாயும், அறியப்படாதது=அறிவுக்கு விஷயமாக வாகாதது, என வெண்ணுகின்றவர்களுக்கு அறியப்பட்டதாகவும் ப்ரம்ஹமாகிறதோ அக்காரணம்பற்றி எவனுக்கு அறியப்படாதது என்பது மதமோ அவனுக்கு அறியப்பட்டதாகவும், எவனுக்கு அறியப்பட்டது என்பது மதமோ அவன் ப்ரம்ஹத்தை அறியாதவனாகவும் ஆகிறான் என்றும் என்பது **अथ वा हेत्वर्थ उत्तरार्धः** (அத வா ஹேத்வர்த உத்தரார்த:) என்றதாதி பாஷ்யத்தின் கருத்து. (3) (எ—று)

அவதாரிகா பாஷ்யம்.—அறியப்பட்டதாக எண்ணுகின்றவர்களுக்கு அது அவிச்ஞாதம்=அறியப்படாதது என வுறுதிப்படுத்தப் பட்டது. ப்ரம்ஹமானது முற்றிலுமே அறியப்படாததாகவாகுமானால் லௌகிகர்களுக்கும், ப்ரம்ஹவித்துக்களுக்கும் வேற்றுமை

---

* ஸம்யக்தர்சனமில்லாதவர் இந்திரியாதி உபாதிகளிலேயே ஆத்மபுத்தியுள்ளவர்களாக இருப்பதால் ஆத்மாப்ரம்ஹம் என்றதும் தங்களாலாத்மாவாகவறியப்பட்ட இந்திரியாதிகளேயே ப்ரம்ஹமாக எண்ணுகின்றனர் என்பதுபற்றி அத்தகைய அவரது எண்ணம் ஸம்யக்தரிசனத்தின் பூர்வபக்ஷமாகவாலதால் பாஷ்யத்தில் இவ்விதமுபதேசிக்கப்பட்டது என்று கொள்ளவும்.

प्रतिबोधविदितं मतममृतत्वं हि विन्दते ।
अत्मना विन्दते वीर्यं विद्यया विन्दतेऽमृतम् । ४ ॥

ப்ரதிபோதவிதிதம் மதமம்ருதத்வம் ஹி விந்ததே ।
ஆத்மநா விந்ததே வீர்யம் வித்யயா விந்ததேம்ருதம் ॥ ௪ ॥

प्रतिबोधविदितं=बोधं बोधं प्रतिविदितम् । बोधशब्देन बौद्धाः प्रत्यया उच्यन्ते । सर्वे प्रत्यया विषयीभवन्ति यस्य स आत्मा सर्वबोधान्प्रति-

---

யின்மையானது ப்ராப்தமாகவாகிவிடுகிறது. 'அறிகின்றவர்களுக்கு அறியப்படாதது' என்பது ஒன்றுக்கொன்று முறண்பாடுள்ளதாகவே யாகிறது. எவ்விதமானால் அந்த ப்ரம்ஹம் நன்கு அறியப்பட்டதாக வாகும் என்ற இதைக் கூறவேண்டி மேலுள்ளமந்திரத்தை ஶ்ருதிசொல்லுகிறது—

(ப—ரை) प्रतिबोधविदितम् (ப்ரதிபோதவிதிதம்)=ப்ரம்ஹமானது ஒவ்வொருபுத்தி விருத்திதோறும் அறியப்பட்டதாக அதாவது:=ப்ரத்யயப்ரத்யகாத்மாவாக எப்பொழுது அறியப்பட்டதாக வாகுமோ அப்பொழுதே मतम् (மதம்)=மதமாக=அறியப்பட்டதாக வாகும். हि (ஹி)=யாதுகாரணத்தால் अमृतत्वम् (அம்ருதத்வம்)=ஸ்வாத்மாவஸ்தான ரூபமான மோக்ஷத்தை विन्दते (விந்ததே)=அடைகிறானோ. அக்காரணத்தால் ப்ரதிபோதவிதிதமே=ஒவ்வொரு புத்தியிலும் ப்ரம்ஹம் ஸாக்ஷியாகவிருக்கிறது என்றறிதலே ப்ரம்ஹத்தையறிதலாகவாகும் என்பதுகருத்து. ஆத்மவித்யையானது आत्मना (ஆத்மநா)=சொந்தஸ்வரூபத்தினால் वीर्यम् (வீர்யம்)=அஜ்ஞானஸம்சயவிபரீதாதிகளின் நிவிருத்தியை, विन्दते (விந்ததே)=அடைகிறது. विद्यया (வித்யயா)=அத்தகைய வீர்யத்துடன்கூடின ஆத்மவித்யையினால் अमृतम् (அம்ருதம்)=மோக்ஷத்தை, विन्दते (விந்ததே)=அடைகிறான். (4) (எ—று)

பாஷ்யம். —प्रतिबोधविदितम् (ப்ரதிபோதவிதிதம்) ஒவ்வொரு போதத்திலும் அறியப்படுவது. இங்குள்ள बोध (போத) என்ற சப்தத்தினால் புத்தியிலுண்டாகின்ற ப்ரத்யயங்கள்=விருத்திகள், சொல்லப்படுகின்றன. எல்லாப்புத்திவிருத்திகளும் எதற்கு

बुध्यते सर्वप्रत्ययदर्शी चिच्छक्तिस्वरूपमात्रः प्रत्ययैरेव प्रत्ययेष्वविशिष्टतया लक्ष्यते। नान्यद्द्वारमात्मनो विज्ञानाय। अतः प्रत्ययप्रत्यगात्मतया विदितं ब्रह्म यदा तदा तन्मतम्=तदा तत्सम्यग्दर्शनमित्यर्थः। सर्वप्रत्ययदर्शित्वे चोपजननापायवर्जितदृक्स्वरूपता नित्यत्वं विशुद्धस्वरूपत्वमात्मत्वं, निर्विशेषता, एकत्वं च सर्वभूतेषु सिद्धं भवेत्। लक्षणभेदाभावाद्व्योम्न इव घटगिरिगुहादिषु। विदिताविदिताभ्यामन्यद्ब्रह्मेत्यागमवाक्यार्थ एवं परिशुद्ध एवोपसंहृतो भवति। 'दृष्टेर्द्रष्टा, श्रुतेश्श्रोता, मतेर्मन्ता, विज्ञाते

விஷயமாக்வாகின்றனவோ (எல்லாப் புத்திவிருத்திகளுக்கும் எது ப்ரகாசகமாகவிருக்கின்றதோ) அந்த ஆத்மாவானது ஸர்வபுத்திகளையும் ப்ரகாசப்படுத்துகிறது. எல்லாப் புத்திவிருத்திகளுக்கும் ஸாக்ஷியாகவும், சைதன்யமாத்ரஸ்வரூபனாகவும், தன்னால் ப்ரகாசப் படுத்தப்படும் புத்திவிருத்திகளினாலேயே எல்லாப்புத்திவிருத்திகளிலும்=அவிசிஷ்டனாக=ஒவடுருவிக் கலந்தவனாகவும், காணப்படுகிறான். ஆத்மாவை அறிவதற்கு இதைக் காட்டிலும் வேறுவழியில்லை. ஆன துபற்றி ஸகலபுத்திவிருத்திகளுக்கும் ப்ரத்யகாத்மாவாக எப்பொழுது ப்ரம்ஹமானது அறியப்பட்டதாக வாகுமோ அப்பொழுது தான் அதுமதமாகவாகிறது. அதுவே ஸம்யக்தர்சனமுமாகும் என்பது பொருள். ஸர்வப்ரத்யயதர்சித்வம்=எல்லாப் புத்திவிருத்திகளுக்கும் ஸாக்ஷித்தன்மை, சொன்னதிலிருந்து உத்பத்தி விநாசமற்ற திருக்ஸ்வரூபத்வமும், நித்யத்வமும், விசுத்தஸ்வரூபத்வமும் (மாயா அதன்காரியம் இவையற்றிருத்தலும்) எத்தகைய விசேஷமும் (பேதமும்) அற்றிருத்தலும், எல்லாப்பூதங்களிலும் ஒன்றாக இருத்தலும், ஸித்தமாக (ஏற்பட்டதாக) வாகிவிடுகிறது. ஆகாசத்துக்குக் குடம் மலை குஹை இவைகளிற்போல லக்ஷணபேதம்=(விலக்கிக்காட்டும் தர்மபேதம்) இல்லாதிருப்பதாலென்க. விதிதம்=அறிவுக்கு விஷயமானது, அவிதிதம்=அறிவுக்கு விஷயமாகாதது (அதாவது: சூக்ஷ்மமானது) இவற்றைக்காட்டிலும் வேறுபட்டது ப்ரம்ஹம் என்ற இந் பொருள்) இவற்றைக்காட்டிலும் வேறுபட்டது ப்ரம்ஹம் என்ற இங் தச்சாஸ்திர வாக்கியார்த்தமானது இவ்விதம் சொன்னால்தான் எவ்வித தோஷமுமற்றதாகவே முடிக்கப்பட்டதாகவாகும். "திருஷ்டிக்கு= தர்சனாகாரமான அந்தக்கரணவிருத்திக்கு, த்ரஷ்டா=ப்ரகாசகம்,

विज्ञाता ' इति हि श्रुत्यन्तरम्। यदा पुनर्बोधक्रियाकर्तेति बोधक्रियालक्षणेन तत्कर्तारं विजानातीति बोधलक्षणेन विदितं प्रतिबोधविदितमितिव्याख्यायते, यथा यो वृक्षशाखाश्चालयति स वायुरिति तद्वत्। तदा बोधक्रियाशक्तिमानात्मा द्रव्यं न बोधस्वरूप एव। बोधस्तु जायते विनश्यति च। यदा बोधो जायते तदा बोधक्रियया सविशेषः। यदा बोधो नश्यति तदा नष्टबोधो द्रव्यमात्रं निर्विशेषः। तत्रैवं सति विक्रियात्मकः सावयवोऽनित्योऽशुद्ध इत्यादयो दोषा न परिहर्तुं शक्यन्ते। यदपि काणादानाम्—

---

ஶ்ருதிக்கு=ஶ்ரவணகார அந்தக்கரணவிருத்திக்கு, ஶ்ரோதா=ப்ரகாசகம், மதிக்கு மந்தா, விஞ்ஞாதிக்கு விஞ்ஞாதா, என்றல்லவோ வேறுசுருதியுமிருக்கிறது.

* போதமென்ற மானஸக்ரியைக்குக் கர்த்தாவாகவாவதால் போதமென்ற க்ரியாரூபமான லக்ஷணத்திஞல் அதன் கர்த்தாவை அறிதல் கூடும். என்பது பற்றி போதமென்ற லக்ஷணத்திஞல் அறியப்பட்டதே ப்ரதிபோதவிதிதமாகும், எது மரக்கிளைகளை அசைக்கின்றதோ அது வாயுவாகும் என்பது போலவாம், என எதுபோழ்து வியாக்கியானஞ் செய்யப்படுமோ அதுபோழ்து ஆத்மாவானது போதமென்ற க்ரியைக்குரிய சக்தியுள்ளவஞக வாவதிலிருந்து த்ரவ்யமாக (குடம் முதலியனபோன்று) பட்டும் ஆகுமே யொழிய அறிவுருவஞகவே ஆகமாட்டாது. போதமோ=அறிவோ, உண்டாவதும் அழிவதுமாக விருக்கிறது. எதுபோழ்து போதமானது உண்டாகிறதோ அதுபோழ்து போதமென்ற க்ரியையினல் விசேஷமுள்ளவஞகவாகிறுன். எதுபோழ்து போதமானது நசிக்கிறதோ அதுபோழ்து நசித்த போதமுள்ளவஞய்க் கொண்டு த்ரவியமாத்திரமாக வாகி நிர்விசேஷஞக (எவ்விதவிசேஷமுமற்றவஞக) வாகிறுன். (1)அந்த ஆத்மா இவ்விதமாகும்பொழுது (திரவியமாத்ரமாகவாகும் பொழுது) விக்ரியாரூபனென்றும் அவயவத்துடன் கூடினவனென்

---

* இது முதலுள்ளபாஷ்யத்திஞல் வேறுசிலர் இம்மந்திரத்துக்குச் செய்யும் வியாக்யானம் பொருத்தமானதன்று எனவுபதேசிக்கப்படுகிறது.

(1) இது முதலுள்ள பாஷ்யத்தால் முற்கூறிய வியாக்கியானத்தால்வரும் தோஷமின்னதென வுபதேசிக்கப்படுகிறது.

**ब्राह्मीं–ब्रह्मण: परमात्मन इयं तां परमात्मविषयत्वादतीतविज्ञानस्य वाव एव, त उपनिषदमब्रूमेत्युक्तामेव परमात्मविद्यामुपनिषदमब्रूमेत्यवधारयत्युत्तरार्थम् । परमात्मविषयामुपनिषदं श्रुतवत उपनिषदं भो ब्रूहीति पृच्छतः शिष्यस्य कोऽभिप्राय:? यदि तावच्छ्रुतस्यार्थस्य प्रश्नः कृतः, ततः पिष्टपेषणवत्पुनरुक्तोऽनर्थक: प्रश्नस्स्यात् । अथ सावशेषोक्तोपनिषत्स्यात्ततस्तस्याः फलवचनेनोपसंहारो न युक्तः 'प्रेत्यास्माल्लोकादमृता भवन्ति' इति । तस्मादुक्तोपनिषच्छेषविषयोऽपि प्रश्नोऽनुपपन्न एवानवशेषितत्वात् । कस्तर्ह्यभिप्रायः प्रष्टुरिति । उच्यते । किं पूर्वोक्तोपनिषच्छेषतया तत्सहकारि-**

---

பாஷ்யம்.—ஹே பகவன்! சிந்திக்கக்கூடியதான உபநிஷத்தை–(ரஹஸ்யத்தைச்) சொல்லுவீராக எனச் சீடன் சொன்னதும் ஆசிரியர் சொல்லுகிறார். உனக்கு உபநிஷத்துச் சொல்லியாகிவிட்டது. அந்த உபநிஷத்து யாது எனின்? சொல்லுகிறார். ப்ராம்ஹீம்—ப்ரம்ஹத்தினுடைய–ப்ரமாத்மாவினுடையதாக இது இருப்பதால் ப்ராம்ஹீயாகும், இதுவரை சொல்லி முடித்த விக்ஞானமானது பரமாத்மவிஷயமாக விருப்பதால் "**त उपनिषदमब्रूम**" ("த உபநிஷதமப்ரூம") என்றதால் சொல்லப்பட்டதாகவேயுள்ள பரமாத்மவித்யா ரூபமான உபநிஷத்தையே பின்னர் ஒன்றைச் சொல்லவேண்டி உறுதிப்படுத்திக் கூறுகிறார். பரமாத்மவிஷயமான உபநிஷத்தைக்கேட்ட பிறகு உபநிஷத்தை ஹேபகவன்! சொல்லும் எனக் கேட்ட சிஷ்யனுடைய எண்ணம் என்னே? கேட்டதான பொருளையே கேட்கிறான் என்றாலோ? அப்பொழுது பிசைந்தமாவையே திரும்பவும் பிசைவது போலத்திரும்பவும் ப்ரஶ்னம்செய்தது பயனற்றதாகவாகிவிடும். முன்னர் சொல்லப்பட்ட உபநிஷத்தானது சொல்லவேண்டியதை மிச்சம் வைத்தேதான் உபதேசிக்கப்பட்டது என்றாலோ? அங்ஙனமாயின் "இந்தச் சரீரத்தினின்றும் நீங்கி அமிருதர்களாக வாகின்றனர்" என்பதாய் அந்த உபநிஷத்துக்குப் பலவசனத்துடன் முடிவு கூறினது பொருத்தமற்றதாக வாகும். ஆகவே சொல்லப்பட்ட உபநிஷத்தின் சேஷத்தைப்பற்றிய ப்ரஶ்னம் என்பதும் பொருத்தமற்றதாகும். சொல்லவேண்டுவது மிச்சப்படுத்தப்படாததே அதன் காரணமாகும். அங்ஙனமாயின் ப்ரஶ்னம் செய்தவரின் அபிப்பிரா

साधनान्तरापेक्षा, अथ निरपेक्षैव। सापेक्षाचेदपेक्षितविषयामुपनिषदं ब्रूहि। अथ निरपेक्षाचेदवधारय पिप्पलादवत् नातः परमस्तीत्येवमभिप्रायः। एतदुपपन्नमाचार्यस्यावधारणवचनमुक्ता त उपनिषदिति। ननु नावधारणमिदं यतोऽन्यद्वक्तव्यमाह 'तस्यै तपो दमः' इत्यादि। सत्यं वक्तव्यमुच्यत आचार्येण। नतूक्तोपनिषच्छेषतया तत्सहकारिसाधनान्तराभिप्रायेण वा, किन्तु ब्रह्मविद्याप्राप्त्युपायाभिप्रायेण, वेदैस्तदङ्गैश्च सहपा-

---

யந்தான் என்னை எனின்? சொல்லப்படுகிறது. முன்னர் சொன்ன உபநிஷத்துக்குச் சேஷமாகும் முறையில் அதற்கு உதவக்கூடிய வேறு ஸாதனங்களின் அபேக்ஷையுண்டா? அல்லது இல்லையா? அபேக்ஷயிருக்குமாயின், அபேக்ஷிக்கப்பட்ட விஷயத்தையுடைய உபநிஷத்தைச் சொல்லும். அபேக்ஷயில்லையாயின் பிப்பலாதர் போல இதற்குமேல் கிடையாது என உறுதிப்படுத்திக்கூறும் என்பது சிஷ்யனின் கருத்து. "உனக்கு உபநிஷத்தானது சொல்லப் பட்டுவிட்டது" என்ற ஆசாரியருடைய அவதாரண வசனமானது பொருத்தமுள்ளதாகவுமாகிவிடும் என்றும்.

சங்கை—இது அவதாரணமாகவாகாது. ஏன்? "அதற்கு தவம் தமம்" என்றதாதியால் சொல்லவேண்டிய வேறையும் சொல்லுகிறார் அன்றோ எனின்?

உத்தரம்.—ஆசிரியரால் சொல்லவேண்டுவது சொல்லப்படுகிறது என்பது உண்மைதான். ஆயினும் சொல்லப்பட்ட உபநிஷத்தின் சேஷமிருக்கின்றதென்றோ, அதற்கு உதவக்கூடிய வேறு ஸாதனத்தை எண்ணத்திற்கொண்டோ சொல்லப்படவில்லை. பின்னையோவெனில் ப்ரம்ஹ வித்யையின் ப்ராப்த்திக்கு உபாயத்தை எண்ணத் திற்கொண்டு சொல்லப்பட்டதாகும். ஏன்? வேதங்களுடனும் அதனங்கங்களுடனும் சேர்த்துப்படிக்கப்படுவதன் மூலம் தவம் முதலியவற்றை அவற்றுடன் ஒன்றுபடுத்தியிருப்பதே அதன் காரணமாகும். வேதங்களுக்கும், அவற்றின் அங்கங்களான சிக்ஷை முதலியவற்றுக்கும் நேரில் ப்ரம்ஹ வித்தைக்கு சேஷத்தன்மையோ (அங்கமாகவிருத்தலோ) அதற்கு உதவக்கூடிய ஸாதனமாகவிருத்தலோ கிடையாதன்றோ.

ठेन समीकरणात्तपःप्रभृतीनाम् । नहि वेदानां शिक्षाद्यङ्गानां च साक्षा-द्ब्रह्मविद्याशेषत्वं तत्सहकारिसाधनत्वं वा संभवति । सहपठितानामपि यथायोगं विभज्य विनियोगस्स्यादिति चेत् यथा सूक्तवाकानुमन्त्रणमन्त्रा-णां यथादैवतं विभागः तथा तपोदमकर्मसत्यादीनां ब्रह्मविद्याशेषत्वं तत्सहकारिसाधनत्वं वेति कल्प्यते । वेदानान्तदङ्गानां चार्थप्रकाशकत्वेन कर्मात्मज्ञानोपायत्वमित्येवंह्ययं विभागो युज्यतेऽर्थसंबन्धोपपत्तिसामर्थ्या-

---

*சங்கை—சேர்த்துப் படிக்கப்பட்டவைகளுக்குங்கூட அதன தன் யோக்யதைக்குத் தக்கவாறு பிரித்து விநியோகம் ஏற்படலாம் என்கிறோம். அதாவது:-*ஸூக்தவாகத்தினால் தேவதையை அநுமந்த்ர ணம்=(புனஸ்மரணம்) செய்யும் மந்திரங்களுக்கு அந்தந்தத் தேவ தைக்குத் தக்கபடி விபாகம் ஏற்படுவதுபோல, தபஸ், தமம், கர்மம் ஸத்யம் முதலியவற்றுக்கு ப்ரம்ஹ வித்யாசேஷத்வமோ, ப்ரம்ஹ வித்யையின் ஸஹகாரிஸாதனமாக இருத்தலோ கல்பிக்கப்படுகிறது. வேதங்களுக்கும் அதன் அங்கங்களான சிக்ஷாதிகளுக்கும் கர்ம மென்ன, ஆத்மக்ஞானமென்ன இவற்றுக்கு ஸாதனமாகவிருக்கும் தன்மையேற்படுகிறது என்ற இந்த விபாகமன்றோ அர்த்தத்தின் பொருத்தவிஷயத்திலுள்ள யுக்திஸாமர்த்தியத்தை யொட்டி ஏற்படு கிறது என்கிறோம் எனின் ?*

---

*"अग्निरिदꣳहविरजुषतावीवृधत महो ज्यायोऽकृत । अग्नीषोमाविदꣳहविरजुषेतामवीवृ-धेतां महोज्यायोऽक्रातम्॥" ("அக்நிரித ஹவிரஜுஷதாவீவ்ருதத மஹோ ஜ்யாயோऽக்ருத । அக்நீஷோமாவித ஹவிரஜுஷேதாமவீவ்ருதேதாம் மஹோஜ்யாயோऽக்ராதாம் ॥") என்றதாதிய ஸூக்தவாகத்தினால் ஸர்வ யாகங்களுடையவும் முடிவில் தேவதாநுமந்த்ரணமானது செய்யப் படுகிறது. அவ்விடத்தில் இந்தச் ஸூக்தவாகத்தில் வெகு தேவதைகள் படிக்கப்படுகின்றனவாயினும், எந்தயாகத்தில் எந்தத்தேவதை ஸ்மரிக்கப் பட்டதோ அந்தத் தேவதைக்கே விஸர்ஜநகாலத்தில் ஸ்மரணம் தேவை யாகையால் யோக்யதையையொட்டி இந்த ஸூக்தவாகத்துக்கு விநியோகம் காணப்படுகிறது என்பது எவ்விதமோ அவ்விதமே தபஸ் முதலியவற்றுக் குங்கூட வித்யாங்கமாகவாகும் முறையில் விநியோகம் ஏற்படலாம் என் பது பூர்வபக்ஷியின் கருத்து. அனேகம் மந்த்ரங்களை ஒன்று சேர்த்து ஒரு இடத்தில் படிப்பது ஸூக்தவாகம் எனப்படும்.

दितिचेत् । न । अयुक्तेः। नह्ययं विभागो घटनां प्राञ्चति । नहि सर्वक्रियाकारकफलभेदबुद्धितिरस्कारिण्याः ब्रह्मविद्यायाः शेषापेक्षा सहकारिसाधनसंबन्धो वा युज्यते । सर्वविषयव्यावृत्तप्रत्यगात्मविषयनिष्ठत्वाच्च ब्रह्मविद्यायास्तत्फलस्य च निःश्रेयसस्य—“ मेक्षमिच्छन् सदा कर्म त्यजेदेव ससाधनम् । त्यजतैवहि तज्ज्ञेयं त्यक्तुः प्रत्यक्परं पदम् । ” तस्मात्कर्मणां सहकारित्वं कर्मशेषापेक्षावा न ज्ञानस्योपपद्यते । ततोऽसदेव सूक्तवाकानुमन्त्रणवद्यथायोगं विभाग इति । तस्मादवधारणार्थतैव प्रश्नप्रतिवचनस्योपपद्यते । एतावत्येवेयमुपनिषदुक्तान्यनिरपेक्षामृतत्वाय यामिमां ब्राह्मीमुपनिषदं तवाग्रेऽब्रूमेति ॥ ७ ॥

---

உத்தரம்—இது பொருத்தமற்றது. அதாவது:—இந்த விபாகமானது நல்ல பொருத்தமுள்ளதாக வாகாதன்றோ என்றும். ஏன்? எல்லாவிதமான கர்மம், அதற்குரிய காரகம்—ஸாதனம், அதன்பலன் இவற்றுக்குரிய பேதபுத்தியைப் போக்குகின்ற ப்ரம்ஹவித்யைக்கு அங்காபேக்ஷையோ, உதவிசெய்யும் ஸாதனத்தின் ஸம்பந்தமோ பொருந்தாதன்றோ. ஏன்? ப்ரம்ஹவித்யையோ, அதன் பலனை மோக்ஷமோ எல்லாவிஷயங்களின்றும் விலகின ப்ரத்யகாத்மஸ்வரூபாவஸ்தானரூபமாக விருத்தலே அதன் காரணமாகும். இவ்விதமே “மோக்ஷத்தை விரும்பினவன் கர்மத்தை அதன் ஸாதனத்துடனேயே எப்பொழுதுமே விட்டுவிடவேண்டும். ஸர்வத்தையும் த்யாகஞ்செய்கின்றவனாலேயே யன்றோ விடுபவனுக்கு ப்ரத்யக்காகவிருக்கும் அந்தஸ்வரூபம் அறியக்கூடியதாகவாகும்” என வேறிடத்திலுபதேசிக்கவும் பட்டிருக்கிறது. ஆகவே க்ஞானத்துக்குக் கர்மங்கள் ஸஹகாரியாகவாகுதலோ கர்மரூபமான அங்கத்தை யபேக்ஷித்தலோ பொருந்தமாட்டாது. ஆனதுபற்றி ஸூக்தவாகானுமந்த்ரண மந்திரத்துக்குப் போல அதனதன் தகுதிக்குத்தக்கபடி விபாகம் செய்து கொள்ளவேண்டும் என்றது அசாதுவேயாகும் என்றும். ஆகவே ப்ரஶ்னத்தின் ப்ரதிவசனத்துக்கு அவதாரணார்த்தத்வம் சொல்லுவதுதான் பொருந்தும். அதாவது:—யாதொரு இந்தப்ரம்ஹஸம்பந்தமான உபநிஷத்தை—ரஹஸ்ய விக்ஞானத்தை, உனக்கு முன்னர் சொன்னேமோ இவ்வளவேதான் இப்பொழுதும் இந்த உப

**तस्यै तपो दमः कर्मेति प्रतिष्ठा वेदाः सर्वाङ्गाणि सत्य-मायतनम् ॥ ८ ॥**

தஸ்யை தபோ தம: கர்மேதி ப்ரதிஷ்டா வேதா: ஸர்வாங்காணி ஸத்யமாயதநம் ॥ அ ॥

**तस्यै=तस्याः, उक्ताया उपनिषदः प्राप्त्युपायभूतानि तप आदीनि। तपः कायेन्द्रियमनसां समाधानम्। दमः–उपशमः। कर्म–अग्निहोत्रादि। एतैर्हि संस्कृतस्य सत्वशुद्धिद्वारा तत्वज्ञानोत्पत्तिः। दृष्टाह्यमृदितकल्मषस्योक्तेऽपि ब्रह्मण्यप्रतिपत्तिः विपरीतप्रतिपत्तिश्च। यथेन्द्रविरोचनप्रभृतीनाम्। तस्मादिहवातीतेषु वा बहुषु जन्मान्तरेषु तप**

---

நிஷத்து வேறொன்றையும் எதிர்பாராது முக்தியையும் பொருட்டு ஆகிறது என உபதேசிக்கப்பட்டது என்றும். (7) (எ—று)

(ப—ரை) **तस्यै** (தஸ்யை)–அந்த உபநிஷத்துக்கு **तपः** (தப:)–காயம் இந்திரியம் மனஸ் இவற்றை அசையாது நெருக்தலும், **दमः** (தம:)–ஸந்நியாஸமும், **कर्म** (கர்ம)–அக்னி ஹோத்ராதியான கர்மமும், **इति** (இதி)–என்பன **प्रतिष्ठा** (ப்ரதிஷ்டா)–நிலைத்தற்குரிய பாதங்களாகும். மேலும், **वेदाः** (வேதா:)–நான்கு வேதங்களும், **सर्वाङ्गाणि** (ஸர்வாங்காணி)–சிக்ஷை முதலிய எல்லா அங்கங்களும், **आयतनम्** (ஆயதநம்)–உபநிஷத்தினிருப்பிடமான **सत्यम्** (ஸத்யம்)–உண்மை பேசலும் ப்ரதிஷ்டையாகவாகின்றது. (8) (எ—று)

பாஷ்யம்.—சொல்லப்பட்ட அந்த உபநிஷத்துக்குத் தபஸ் முதலியன ப்ராப்த்தி உபாயங்களாகவாகின்றன. சரீரம் இந்திரியம் மனஸ் இவற்றை அடக்குதல் தபஸ் எனப்படும். தமம் என்பது ஸந்யாஸமாகும். கர்மமென்பது அக்னி ஹோத்ராதியாகவாகும். இவற்றால் ஸம்ஸ்கிருதனுக்கு=தோஷம் நீங்கினவனுக்கு, அன்றோ சித்த சுத்திவாயிலாக தத்த்வக்ஞானோத்பத்தியேற்படுகிறது. தோஷம் நீங்காதவனுக்கு ப்ரம்ஹமுபதேசிக்கப்படினுங்கூட இந்திரன், விரோசனன் முதலியவர்களுக்குப்போல க்ஞானமுண்டாகாமையோ மாறான க்ஞானமேற்படுவதோ அனுபவத்தில் காணப்படுகின்றதன்றோ. ஆகவே இதே பிறவியிலோ சென்ற பல பிறவிகளிலோ தபஸ்

आदिभिः कृतसत्त्वशुद्धेः ज्ञानं समुत्पद्यते यथाश्रुतम्। "यस्य देवे पराभक्तिर्यथादेवे तथा गुरौ। तस्यैतेऽकथिता ह्यर्थाः प्रकाशन्ते महात्मनः।" इति मन्त्रवर्णात्। "ज्ञानमुत्पद्यते पुंसां क्षयात्पापस्य कर्मणः" इति स्मृतेश्च। इतिशब्द उपलक्षणत्वप्रदर्शनार्थः। इत्येवमाद्यन्यदपि ज्ञानोत्पत्तेरुपकारकम् "अमानित्वमदंभित्वम्" इत्याद्युपदर्शितं भवति। प्रतिष्ठा-पादौ, पादाविवास्याः। तेषु हि सत्सु प्रतितिष्ठति ब्रह्मविद्या प्रवर्तते। पद्भ्यामिव पुरुषः। वेदाश्चत्वारः, सर्वाणि चाङ्गानि शिक्षादीनि षट् कर्मज्ञानप्रकाशकत्वाद्वेदानां तद्रक्षणार्थत्वादङ्गानां प्रतिष्ठात्वम्। अथवा—प्रतिष्ठाशब्दस्य पादरूपककल्पनार्थत्वाद्वेदास्त्वितराणि सर्वाङ्गाणि शिर आ-

---

முதலியவற்றால் சித்த சுத்தியை அடைந்தவனுக்குக் கேட்டபடிக்கான ச்ஞானமுண்டாகும். "எவனுக்குத் தேவனிடத்தில் மேலான பக்தியேற்படுகிறதோ, தேவனிடத்தில் எவ்விதமோ அவ்விதமே குருவினிடத்திலும் பக்தியேற்படுமோ அந்த மஹாத்மாவுக்கு உபதேசிக்கப்பட்ட பொருள்கள் (அல்லது உபதேசிக்கபபடாத பொருள்களும்) நன்கு ப்ரகாசத்தையடைகின்றன" என மந்திரவர்ணமுமிருக்கின்றது. "பாபமான கர்மத்தினுடைய தேய்தலுக்குப் பிறகு புருஷர்களுக்கு ச்ஞானமுண்டாகிறது" என ஸ்மிருதியுமிருக்கிறது. மூலத்திலுள்ள इति (இதி) என்ற சப்தமானது இதுபோன்ற ஏனைய ஸாதனங்களையும் காட்டுகிறது. அதாவது:—ச்ஞானோத்பத்திக்கு அமானித்வம், அதம்பித்வம் என்றதாதியான வேறுஸாதனமும் காட்டப்பட்டதாகவாகிறது. प्रतिष्ठा (ப்ரதிஷ்டா) பாதங்களாகும், இவை இந்த உபநிஷத்துக்குப் பாதங்கள்போன்றன. அவை இருந்தாலன்றோ புருஷன் கால்களினால் ப்ரவிருத்திப்பதுபோல ப்ரம்ஹவித்யை நிலைபெற்றதாக வாகின்றது. வேதா:—என்றதால் நான்கு வேதங்களும் சொல்லப்படும். ஸர்வாங்காணி—என்றதால் சிக்ஷை முதலிய ஆறு அங்கங்களும் சொல்லப்படும். வேதங்கள் கர்மம் ச்ஞானம் இவற்றை ப்ரகாசப்படுத்துவதாலும், அங்கங்கள் வேதத்தை ரக்ஷிப்பனவாக விருப்பதாலும் இவை ப்ரதிஷ்டையாக வாகும். அல்லது—प्रतिष्ठा (ப்ரதிஷ்டா) என்றசப்தத்தால் பாதரூபகம் செய்யப்பட்டபடியால் வேதங்களோ தலைமுதலிய மற்ற எல்லா அங்கங்களா

दीनि । अस्मिन्पक्षे शिक्षादीनां वेदग्रहणेनैव ग्रहणं कृतं प्रत्येतव्यम् । अङ्गिनि गृहीतेऽङ्गानि गृहीतान्येव भवन्ति, तदायतनत्वादङ्गानाम् । सत्यमायतनम् । यत्र तिष्ठत्युपनिषत्तदायतनम् । सत्यमिति अमायिता–अकौटिल्यं वाङ्मनःकायानां तेषु ह्याश्रयति विद्या येऽमायाविनः साधवः नासुरप्रकृतिषु मायाविषु । 'न येषु जिह्ममनृतं न माया च' इतिश्रुतेः । तस्मात्सत्यमायतनमिति कल्प्यते । तप आदिष्वेव प्रतिष्ठात्वेन प्राप्तस्य सत्यस्य पुनरायतनत्वेन ग्रहणं साधनातिशयत्वज्ञापनार्थम् ।

" अश्वमेधसहस्रं च सत्यं च तुलया धृतम् ।
अश्वमेधसहस्राच्च सत்यमेकं विशिष्यते ।" इतिस्मृतेः ॥

---

கவாகின்றன. இந்தப்பொருள் கொள்ளும் பக்ஷத்தில் வேதம் என்றதனாலேயே அவற்றின் அங்கங்களான சிக்ஷை முதலியனவும் சொல்லப்பட்டனவாகக் கொள்ளவேண்டும். அங்கங்கள் அங்கியை யாம்ரயித்திருப்பனபற்றி அங்கியைக் கிரஹித்ததிலிருந்து அங்கங்களும் கிரஹிக்கப்பட்டனவாகவே ஆகிவிடுகின்றன. ஸத்யமாயதநமாகும். (எது) எதிலிருக்கின்றதோ அது ஆயதனமெனப்படும். ஸத்யம் என்பதால் மாயாவியாகவில்லாதிருத்தல், மனமொழிமெய்களில் குடிலனாக (வக்ரியாக) இல்லாதிருத்தல் இவை சொல்லப்படுகின்றன. மாயாவிகளாக இல்லாத ஸாதுக்கள் எவர்களோ அவர்களிடத்தில் வித்தை ஆம்ரயித்திருக்கின்றதேயொழிய ஆஸுர ப்ரகிருதிகளான மாயாவிகளிடத்தில் ஆம்ரயித்திருப்பதில்லையன்றோ. "எவர்களிடத்தில் கபடமும் பொய்யும் கிடையாதோ, மாயையும் கிடையாதோ" என ம்ருதியுமிருக்கிறது. ஆகவே ஸத்யம் ஆயதநமாகக் கல்பிக்கப்படுகிறது. தபஸ் முதலியவற்றிலேயே ப்ரதிஷ்டாத்வ மூலம் ப்ராப்தமாகவான ஸத்யத்துக்குத் திரும்பவும் ஆயதநத்தன்மை கூறும் வாயிலாகக்கிரஹித்ததானது எல்லா ஸாதனங்களுக்குள்ளும் சிறந்த ஸாதனமாக ஸத்யமாகும் என்பதைக் காட்டவேண்டியாம். இவ்விதமே "அம்வமேதம் ஆயிரமும், ஒரு ஸத்யமும் தராசில் வைத்து நெருக்கப்பட்டது. அப்பொழுது ஆயிரம் அம்வமேதத்தைக் காட்டிலும் ஒரு ஸத்யமே கனமுள்ளதாகவாயிற்று" என ஸ்மிருதியுமிருக்கிறது.

**यो वा एतामेवं वेदाऽपहत्य पाप्मानमनन्ते स्वर्गे लोके ज्येये प्रतितिष्ठति प्रतितिष्ठति ॥ ९ ॥**

*யொ வா ஏதாமெவம் வெதா sபஹத்ய பாப்மானமநந்தெ ஸ்வர்கெ லொகெ ஜ்யெயெ ப்ரதிதிஷ்டதி ப்ரதிதிஷ்டதி ॥ கூ ॥*

**सहनाववतु...शान्तिः ॥ आप्यायन्तु...ते मयि सन्तु...शान्तिः ॥**

*ஸஹநாவவது....ஶாந்திः ॥ ஆப்யாயந்து....தெ மயி ஸந்து....ஶாந்திः ॥*

**इति चतुर्थः खण्डः ॥ ४ ॥**

**इति सामवेदीय तलवकारोपनिषत् समाप्ता ॥**

**यो वा एतां–ब्रह्मविद्यां 'केनेषितम्' इत्यादिना यथोक्तामेवंमहाभागां 'ब्रह्म ह देवेभ्यः' इत्यादिस्तुतां सर्वविद्याप्रतिष्ठां वेद 'अमृतत्वं हि विन्दते' इत्युक्तमपिब्रह्मविद्याफलमन्ते निगमयति—अपहत्य पाप्मानम्–**

---

(ப–ரை) **यो वा** (யொ வா)–எவனொருவன் **एताम्** (ஏதாம்)–இந்த உபநிஷத்தை **एवम्** (ஏவம்)–இவ்விதம், **वेद** (வெத)–அறிவானோ [**सः** (ஸः)–அவன், **पाप्मानम्** (பாப்மாநம்)–அவித்யாகாமகர்மரூபமான ஸம்ஸாரபீஜத்தை **अपहृत्य** (அபஹ்ருத்ய)–போக்கி **अनन्ते** (அநந்தெ)–முடிவற்றதும் **ज्येये** (ஜ்யெயெ)–எதற்கும் மேலானதுமான **स्वर्गे लोके** (ஸ்வர்கெ லொகெ)–சுகாத்மகமான ப்ரம்ஹத்தினிடத்தில் **प्रतितिष्ठति** (ப்ரதிதிஷ்டதி)–நிலைபெற்றவனாக வாகிறான். **प्रतितिष्ठति** (ப்ரதிதிஷ்டதி)–என இரண்டாவது தடவை சொன்னது உபநிஷத்தின் முடிவைக்காட்டுகிறது. (9) (எ–று)

பாஷ்யம்.—எவனொருவன் இந்த ப்ரம்ஹ வித்யையை (அதாவது:—"கேநேஷிதம்" என்றதாதியால் உள்ளபடி உபதேசிக்கப்பட்டதும், இவ்விதச் சிறப்பு வாய்ந்ததும் "**ब्रह्म ह देवेभ्यः**" ("ப்ரஹ்ம ஹ தெவெப்ய:") என்றதாதியால் ஸ்துதிக்கப்பட்டதும், எல்லா வித்யைக்கும் ஆதாரமானதுமானதை என்றும்.) அறிவானோ அவன் "**अमृतत्वं हि विन्दते**" ("அம்ருதத்வம் ஹி விந்ததெ") 'மோக்ஷத்தையன்றோ அடைகிறான்' என்றதால் முன்னர் சொல்லப்பட்ட போதிலுங்கூட ப்ரம்ஹ வித்யா பலனை முடிவில் முடிக்கி

**अविद्याकामकर्मलक्षणं संसारबीजं विधूय, अनन्ते—अपर्यन्ते, स्वर्गे लोके सुखात्मके ब्रह्मणीत्येतत् । अनन्त इतिविशेषणाच्च त्रिविष्टपे । अनन्तशब्द औपचारिकोऽपि स्यादित्यत आह—ज्येय इति । ज्येये—ज्यायसि सर्वमहत्तरे स्वात्मनि मुख्य एव प्रतितिष्ठति । न पुनस्संसारमापद्यत इत्यभिप्रायः॥**

**इति श्रीगोविन्दभगवत्पूज्यपादशिष्यस्य श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यस्य श्रीमच्छङ्करभगवतः कृतौ केनोपनिषत्पदभाष्ये चतुर्थः खण்டः ॥**

**इति केनोपनिषत्पदभाष्यम् ॥**



---

றது. அவித்யாகாமகர்மலக்ஷணமான ஸம்ஸாரபீஜத்தை அநந்த மும்—முடிவற்றதும், ஸ்வர்க்கமும்—சுகாத்மகமுமான லோகத்தில்—ப்ரம்ஹத்தில் என்பது பொருள். அநந்தே எனவிசேஷணம் கொடுத்ததால் த்ரிவிஷ்டபமன்று எனக் கிடைக்கிறது. அநந்த என்ற சப்தம் உபசாரமுறையாகவும் சொல்லப்பட்டிருக்கலாமெனக் கருதி **ज्येये** (ஜெஞ்யெ) எதற்கும் மேலானதும் ஜ்யாயஸ்ஸுமான முக்யமான சொந்தப்ரத்யகாத்மாவினிடத்தில் எனக் கூறப்பட்டது. நிலையை யடைகிறான். திரும்பவும் ஸம்ஸாரத்தை யடைவதில்லை என்று கருத்து.

ஸ்ரீகோவிந்த பகவத்பூஜ்யபாதரின் சிஷ்யரும், ஸ்ரீமத்பரமஹம்ஸ பரிவ்ராஜகாசாரியருமான ஸ்ரீமத்சங்கரபகவத்பாதர் அவர்களின் கிருதியான கேநோபநிஷத் பதபாஷ்யத்தில்

நான்காவது கண்டம் முற்றிற்று.

கேநோபநிஷத் பதபாஷ்யம் முற்றிற்று.



# केनोपनिषद्वाक्यभाष्यम् ॥

—••꧁••—

## प्रथमः खण्डः ॥

समाप्तं कर्मात्मभूतप्राणविषयं विज्ञानम् । कर्मचानेकप्रकारम् । ययोर्विकल्पसमुच्चयानुष्ठानाद्दक्षिणोत्तराभ्यां सृतिभ्यामावृत्त्यनावृत्ती भवतः । अत ऊर्ध्वं फलनिरपेक्षज्ञानकर्मसमुच्चयानुष्ठानात्कृतात्मसंस्कारस्योच्छिन्नात्मज्ञानप्रतिबन्धकस्य द्वैतविषयदोषदर्शिनो निर्ज्ञाताशेषबाह्यविषयत्वात्संसारबीजमज्ञानमुच्चिच्छित्सतः प्रत्यगात्मविषयजिज्ञासोः केनेषितमित्यात्मस्वरूपतत्त्वविज्ञानायायमध्याय आरभ्यते । तेन च मृत्युपदमज्ञानमुच्छेत्तव्यं

---

# கேநோபநிஷத்தின் வாக்கியபாஷ்யம்.

## முதல் கண்டம்

அவதாரிகா பாஷ்யம்.—எந்த க்ஞான (உபாஸன) கர்மங்களின் ஸமுச்சயத்தினலோ, அவற்றைத் தனித்தனி அனுஷ்டித்தலாலோ தக்ஷிணயன உத்தராயணமார்க்கங்களினால் இங்கு திரும்பிவருதலும், அஃதின்மையும் ஏற்படுகின்றனவோ அந்தக் கர்மங்களுக்கு ஆச்ரயமாகவான ப்ராணனை விஷயமாகக் கொண்ட உபாஸனமும், அநேகப்ரகாரமான கர்மமும் சென்றபாகத்தில் உபதேசிக்கப்பட்டு முடிந்தது. இதற்குமேல் பயனை எதிர்பாராத க்ஞானகர்ம ஸமுச்சயானுஷ்டானத்தினின்றும் பெறப்பட்ட மனத்தின் ஸம்ஸ்காரத்தை= சுத்தியை, உடையவனும், ஆத்மக்ஞானத்தை யடைதற்குரிய பிரதிபந்த நிவிருத்தியை யடைந்தவனும், த்வைதமான விஷயத்தில் தோஷதிருஷ்டியை யுடையவனும், ஆத்மாவுக்குப் புறம்பான விஷயங்கள் யாவற்றையும் நன்கு அறிந்திருப்பதுபற்றி ஸம்ஸாரபீஜமான அக்ஞானத்தை நாசமாக்கவெண்ணுகின்றவனும், ப்ரத்யகாத்மவிஷயமான ஜிக்ஞாஸையுள்ளவனுமான (அதிகாரிக்கு) ஆத்மஸ்வரூப ஸா

तत्तन्त्रो हि संससारो यतः । अनधिगतत्वादात्मनो युक्ता तदधिगमाय तद्विषया जिज्ञासा । कर्मविषये चानुक्तिः तद्विरोधित्वात् । अस्य विजिज्ञासितव्यस्यात्मतत्वस्य कर्मविषयेऽवचनं कस्मादितिचेदात्मनो हि यथावद्विज्ञानं कर्मणा विरुध्यते । निरतिशयब्रह्मस्वरूपो ह्यात्मा विजिज्ञापयिषितः। "तदेव ब्रह्म त्वं विद्धि नेदं यदिदम्" इत्यादिश्रुतेः। नहि स्वाराज्येऽभिषिक्तो ब्रह्मत्वं गमितः कञ्चन नमितुमिच्छति । अतो ब्रह्मास्मीति संबुद्धो न कर्म कारयितुं शक्यते । नह्यात्मानमवाप्तार्थं ब्रह्म मन्यमानः प्रवृत्तिं प्रयोजनवतीं पश्यति । नच निष्प्रयोजना प्रवृत्तिः । अतो विरुध्यत एव

---

க்ஷாத்காரத்தை யுண்டாக்கவேண்டி "கேநேஷிதம்" என்ற இந்த அத்தியாயமானது ஆரம்பிக்கப்படுகிறது—அந்த ஆத்மஸாக்ஷாத்காரத்தால் தான் ஸம்ஸாரத்துக்குக் காரணமான அக்ஞானம் நாசமாக்கக்கூடும். அதன்மூலம் அன்றோ ஸம்ஸாரம்—சுகதுக்கானுபவம், ஏற்படுகிறது. சென்ற பாகத்தினால் ஆத்மா அறியப்படாதிருப்பதுபற்றி அதையறிவதற்கு வேண்டி அதைப்பற்றிய ஜிக்ஞாஸை (விசாரம்) யானது பொருத்தமுள்ளதாகிறது. கர்மத்தைப் பற்றியுபதேசிக்குமிடத்தில் இந்த ஆத்மதத்த்வம் சொல்லப்படவில்லை. ஏன்? இது கர்மத்துக்கு விரோதியாக விருப்பதே அதன் காரணமாகும். அதாவது:—அறியவிரும்பப்பட்ட இந்த ஆத்மதத்த்வத்துக்குக் கர்மம் சொல்லுமிடத்தில் உபதேசமில்லை. ஏனெனின்? உள்ளபடி யேற்படும் ஆத்மக்ஞானமானது கர்மாவுடன் விரோதப்படுமன்றோ. எவ்விதபேதமுமற்ற ப்ரம்ஹஸ்வரூபனான ஆத்மாவன்றோ உபதேசிக்க விரும்பப்பட்டிருக்கிறான். "அதையே ப்ரம்ஹமென நீ அறிந்து கொள். எதை இது இது எனவுபாஸிக்கின்றனரோ இது ப்ரம்ஹமாகாது" என ஶ்ருதியிருக்கிறது. ஸ்வாராஜ்யத்தில் அபிஷிக்தனாகி ப்ரம்ஹத்தன்மையை அடைவிக்கப்பட்டவன் ஒருவனையும் வணங்க விரும்பானன்றோ. ஆனதுபற்றி ப்ரம்ஹமாக நானிருக்கிறேன் என நன்கு அறிந்தவன் கர்மத்தைச் செய்விக்கக்கூடியவனன்று. தன்னை ஆப்தகாமமான ப்ரம்ஹமாக எண்ணுபவன் பிரவிருத்தியைப் பயனுள்ளதென எண்ணமாட்டானன்றோ. பயனற்ற ப்ரவிருத்தியோ கிடையாது. ஆனதுபற்றி க்ஞானமானது கர்மத்துடன் முறண்

कर्मणा ज्ञानम् । अतः कर्मविषयेऽनुक्तिः। विज्ञानविशेषविषयैव जिज्ञासा। कर्मानारंभ इतिचेत् । न । निष्कामस्य संस्कारार्थत्वात् । यदिह्यात्मविज्ञानेनात्माविद्याविषयत्वात्परित्याजयिषितं कर्म, ततः "प्रक्षालनाद्धि पङ्कस्य दूरादस्पर्शनं वरम्" इत्यनारंभ एव कर्मणः श्रेयानल्पफलत्वादायासबहुलत्वात्तत्वज्ञानादेव च श्रेयःप्राप्तेरिति चेत् । सत्यम् । एतदविद्याविषयं कर्माल्पफलत्वादिदोषवद्बन्धरूपं च सकामस्य । "कामान्यः काम-

---

பட்டதாகவேதானுகிறது. ஆகவேதான் அது கர்மம் சொல்லியவிடத்திற்சொல்லப்படவில்லை. க்ஞானவிசேஷத்தை விஷயமாகக்கொண்டே ஜிக்ஞாஸை யேற்படுகிறது.

கர்மத்தை ஆரம்பிக்கவே வேண்டுவதில்லை என்கிறோம் எனின்? அது பொருந்தாது. ஏன்? காமனையற்றவனுக்குச் சித்த சுத்தியைத்தருவதாக அது இருப்பதாலென்க. (இதைவிளக்குவாம்) ஆத்மவிக்ஞானத்தினுல் ஆத்மாச்ரயமான அவித்யையை விஷயமாகக்கொண்டிருப்பதுபற்றிக் கர்மமானது பரித்யாகஞ் செய்விக்க விரும்பப் பட்டிருக்குமாயின் அதுபோழ்து "சேற்றைப் பூசிக்கொண்டு அலம்புவதைவிட வெகுதூரத்தில் அதைத் தொடாதிருப்பதே மேலானது" என்ற நியாயத்தை யொட்டிக் கர்மாவை ஆரம்பிக்காதிருப்பதே மேலானது. அற்பபலனுள்ளதா யிருப்பதுபற்றியும், வெகுபாடுள்ளதாயிருப்பதுபற்றியுமே என்க. ஆகவே தத்த்வக்ஞானத்தினின்றே மோக்ஷமானது கிடைக்கக்கூடியதாகவுமே ஆகிறது என்கிறோம் எனின்? இஃதுண்மைதான். அற்பமான பலனையுடைத்தாயிருத்தல் முதலிய தோஷமுள்ளதும், அவித்யையை விஷயமாகக்கொண்டதுமான இந்தக்கர்மமானது காமனையுள்ளவனுக்குப் பந்தரூபமாக இருக்கிறது. "காமங்களை எவன் விரும்புகின்றானே" "இவ்விதமன்றோ காமனையுள்ளவனுகிறான்" என்றதாதி ச்ருதிகளிருப்பதே அதன் காரணமாகும். நிஷ்காமனுக்கோ அவ்விதமில்லை. அவனுக்கோ அக்கர்மாவை உண்டுபண்ணுகின்றதும் அதற்கு ஆச்ரயமுமான ப்ராணனுடைய உபாஸனத்துடன் கூடினவைகளான கர்மங்கள் சித்தசுத்தியைத் தரக்கூடியனவாகவே ஆகின்றன. "பலனில் ஆசைகொண்டு தேவர்களைக் குறித்து யாகஞ்செய்பவன் சிறந்

**यते" "इति नु कामयमान:" इत्यादिश्रुतिभ्य:। न निष्कामस्य। तस्य तु संस्कारार्थान्येव कर्माणि भवन्ति तन्निर्वर्तकाश्रयप्राणविज्ञानसहितानि "देवयाजी श्रेयानात्मयाजी वा" इत्युपक्रम्य "आत्मयाजी तु करोति इदं मेऽनेनाङ्गं संस्क्रियते" इति संस्कारार्थमेव कर्माणीति वाजसनेयके। "महायज्ञैश्च यज्ञैश्च ब्राह्मीयं क्रियते तनु:। यज्ञो दानं तपश्चैव पावनानि मनीषिणाम्।" इत्यादिस्मृतेश्च। प्राणादिविज्ञानं च केवलं कर्मसमुच्चितं वा सकामस्य प्राणात्मप्राप्त्यर्थमेव भवति। निष्कामस्य तु आत्मज्ञानप्रतिबन्धनिर्माष्ट्यै भवति आदर्शनिर्माजनवत्॥**

**उत्पन्नात्मविद्यस्य त्वनारम्भो निरर्थकत्वात्। "कर्मणा बध्यते जन्तुर्विद्यया च विमुच्यते। तस्मात्कर्म न कुर्वन्ति यतय: पारदर्शिन:॥" इति**

---

*தவனா? சித்த சுத்திக்குவேண்டியே ஸ்வர்க்காதிகளில் பற்றை யொழித்து யஜிப்பவன் சிறந்தவனா?" என்று தொடங்கி ஆத்மயாஜியோவெனில் "இந்த என்னுடையமனது இக்கர்மத்தினால் சுத்தமாக்கப்படுகிறது" எனச் சுத்திக்குவேண்டியே கர்மங்களைச் செய்கிறான் எனவாஜஸநேயகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. "இந்தச் சரீரமானது (ஸூக்ஷ்ம சரீரமான மனதானது) மஹாயக்ஞங்களாலும், ஸாதாரணயக்ஞங்களாலும் ப்ரம்ஹக்ஞானார்ஹமாகச் செய்யப்படுகிறது" என்றும், "யக்ஞம் தானம் தவம் என்ற இவை புத்திமான்களுக்குப் பரிசுத்தியைத் தரக்கூடியன" என்றும் ஸ்ம்ருதிகளிருக்கின்றன. ப்ராணாதிகளின் உபாஸனமானது தனித்தோ கர்மஸமுச்சிதமாகவோ செய்யப்படுமாயின் ஸகாமனுக்கு ப்ராணரூபமான ஆத்மாவின் ப்ராப்த்தியைத் தருவதாகவே ஆகிறது. நிஷ்காமனுக்கோ வெனில் ஆத்மக்ஞானத்தின் ப்ரதிபந்தநிவிருத்தியையும் பொருட்டு ஆகிறது. கண்ணாடியைத் துடைப்பதுபோலவாம் ஆத்மக்ஞானத்திலுத்பத்தியை யடைந்தவனுக்கோ வெனில் அவற்றின் ஆரம்பமேகிடையாது. அதனால் (இவனுக்குப்) பயனெதுவுமில்லாதிருப்பதே அதன் காரணமாகும். "மனிதன் கர்மத்தினால் பந்தத்தை யடைகிறான். வித்யையினாலோ விமுக்தியையடைகிறான். ஆனது பற்றி ப்ரம்ஹதர்சிகளான யதிகள் கர்மத்தைச் செய்வதில்லை" என்றும், "முன்னர் க்ரியாவழியும் பின்னர் ஸன்னியாஸமும் சொல்லப்*

"क्रियापथश्चैव पुरस्तात्सन्न्यासश्च तयोः सन्न्यास एवात्यरेचयत्" इति "त्यागेनैके" "नान्यः पन्था विद्यते" इत्यादिश्रुतिभ्यश्च। न्यायाच्च। उपायभूतानि हि कर्माणि संस्कारद्वारेण ज्ञानस्य। ज्ञाने त्वमृतत्वप्राप्तिः। "अमृतत्वं हि विन्दते" "विद्यया विन्दतेऽमृतम्" इत्यादिश्रुतिस्मृतिभ्यश्च। नहि नद्याः पारगो नावं न मुञ्चति यथेष्टदेशगमनं प्रति स्वातन्त्र्ये सति। नहि स्वभावसिद्धं वस्तु सिषाधयिषति साधनैः। स्वभावसिद्धश्चात्मा। तथा नापिपयिषितः। आत्मत्वे सति नित्याप्तत्वात्। नापि विचिकारयिषितः। आत्मत्वे सति नित्यत्वादविकारित्वादविषयत्वादमूर्तत्वाच्च। श्रुतेश्च—"न वर्धते कर्मणा" इत्यादि। स्मृतेश्च—

---

பட்டது. அவற்றுள் ஸன்னியாஸமே மேம்பட்டதாகவாயிற்று" என்றும், "சிலமுக்கியாதிகாரிகள் த்யாகத்தினலேயே (அமிருதத்வத்தை யடைந்தனர்)" என்றும், "ப்ரப்ஹப்ராப்த்திக்கு வேறுமார்க்கமானது கிடையாது" என்றுமாதிய சுருதிகளு மிருக்கின்றன. யுக்தியுமிருக்கின்றது—கர்மங்கள் ஸம்ஸ்காரத்தை (சித்த சுத்தியைத்) தரும் வாயிலாக ஜ்ஞானத்துக்கு உபாயங்களாக (ஸாதனங்களாக) மட்டுமாகின்றன. ஜ்ஞானத்தினலோ அமிருதத்வப்ராப்த்தியேற்படுகிறது. "அமிருதத்வத்தையன்றோ அடைகிறான்" என்று சுருதியும், "வித்யையினல் அமிருதத்வத்தை யடைகிறான்" என ஸ்மிருதியும் இருக்கின்றது. நதியின் அக்கரையை யடைந்தவன் தனது இஷ்டப்படி வேறுதேசத்தை யடையும் விஷயத்தில் ஸ்வாதந்திரிய மிருக்குங்கால் ஓடத்தை விடமாட்டான் என்பதுண்டோ. இயற்கையில் கிடைத்த பொருளை ஸாதனங்கள் கொண்டு சம்பாதிக்க முயற்சிக்கமாட்டானன்றோ. ஆத்மாவோ ஸ்வபாவஸித்தமாகவிருப்பதால் அடையவிருப்பப்படக்கூடியதன்று. ஆத்மாவாகவிருப்பதன் மூலம் நித்யப்ராப்தமாக விருப்பதே அதன் காரணமாகும். விகாரத்தைச் செய்விக்க விரும்பப்படக் கூடியதுமன்று. ஆத்மாவாக விருப்பதிலிருந்து நித்யமாகவிருப்பதுபற்றியும், அவிகாரியாகவிருப்பதுபற்றியும், விஷயமாகவில்லாதிருப்பதுபற்றியும், அமூர்த்தமாக (தேஹேந்திரிய ஸம்பந்தமற்றதாக) விருப்பதுபற்றியுமே என்க. "கர்மத்தினல் விருத்தியையடைவதில்லை" என ஸ்ருதியும், "இவன்

"अविकार्योऽयमुच्यते" इति। न च सञ्चिस्कीर्षितः। "शुद्धमपापविद्धम्" इत्यादिश्रुतिभ्यः। अनन्यत्वाच्च। अन्येनान्यत्संस्क्रियते। नचात्मनोऽन्यभूता क्रियास्ति। नच स्वेनैवात्मना स्वमात्मानं सञ्चिस्कीर्षेत्। नच वस्त्वन्तराधानं नित्यं, प्राप्तिर्वा वस्त्यन्तरस्य नित्या। नित्यत्वं चेष्टं मोक्षस्य। अत उत्पन्नविद्यस्य कर्मारम्भोऽनुपपन्नः। अतो व्यावृत्तबाह्यबुद्धेरात्मविज्ञानाय केनेषितमित्याद्यारंभः। प्रवृत्तिलिङ्गाद्विशेषार्थः प्रश्न उपपन्नः। रथादीनां हि चेतनवदधिष्ठितानां प्रवृत्तिर्दृष्टा नानधिष्ठितानाम्। मन आदीनां चाचेतनानां प्रवृत्तिर्दृश्यते। तद्धि लिङ्गं चेतनावतोऽधिष्ठातुरस्तित्वे। करणानिहि

---

அவிகார்யன் எனச் சொல்லப்படுகிறன்" என ஸ்மிருதியும் இருக்கின்றன. "சுத்தமும் பாபஸம்பந்தமற்றதுமாகும்" என்ற ஶ்ருதியிருப்பதிலிருந்து குணதானஞ் செய்விக்கப்படக் கூடியதுமன்று. அன்யமாகவில்லாதிருப்பதும் மற்றொரு காரணமாகும். அன்னியத்தினல் அன்னியமானது ஸம்ஸ்கரிக்க (குணதானஞ்செய்விக்க) ப்படுகின்றது. க்ரியையென்பது ஆத்மாவைக்காட்டிலும் வேறுபட்டதாகவில்லை. தனது ஆத்மாவினலேயே தனது ஆத்மாவை ஸம்ஸ்கரிக்கச் செய்யவிரும்பமுடியாதன்றே. வேறு வஸ்துவை ஆதானஞ் செய்தலோ வேறு வஸ்துவின் ப்ராப்த்தியோ நித்யமாகவாகாதன்றே. மோக்ஷத்துக்கோ நித்யத்வமானது விரும்பப்பட்டிருக்கிறது. ஆகவே ஆத்மக்ஞானமுண்டானவனுக்குக் கர்மாரம்பமானது பொருந்தக்கூடியதாகவாகாது. வெளியிலுள்ளவற்றினின்றும் திரும்பின புத்தியுள்ளவனுக்கு ஆத்ம ஸாக்ஷாத்கார முண்டாக வேண்டி "கேநேஷிதம்" என்றதாதியானது ஆரம்பிக்கப்படுகிறது. ஶிஷ்யாசாரிய ப்ரஶ்ன ப்ரதிவசன ரூபமான ப்ரவிருத்தி காணப்படுவதிலிருந்து விசேஷத்தைப்பற்றிய ப்ரஶ்னம் என்பது பொருத்தமுள்ளதாகவாகிறது. சேதனனலோட்டப்பட்ட தேர் முதலியவற்றுக்கு ப்ரவிருத்தி காணப்படுகின்றதேயொழிய சேதன ஸம்பந்தம் பெருதவற்றுக்குக் காணப்படவில்லை. மனம் முதலிய அசேதனங்களுககோ ப்ரவிருத்தியானது காணப்படுகிறது. அது சேதனவானை அதிஷ்டாதா இருக்கிறன் என்பதில் லிங்கமாகவாகிறது. மனம் முதலிய கரணங்களோ நியமமாக (முறைபிறழாது) ப்ரவிருத்

मन आदीति नियमेन प्रवर्तन्ते। तत्रासति चेतनवत्यधिष्ठातर्युपपद्यते । तद्वि शेषस्यचानधिगमाच्चेतनावत्सामान्ये चाधिगते विशेषार्थः प्रश्न उपपद्यते ॥

**केनेषितम्...........क उ देवो युनक्ति ॥ १ ॥**

கெநேஷிதம்...........க உ தேவோ யுநக்தி ॥க॥

केनेषितम्=केनेष्टम्, कस्येच्छामात्रेण, मनः पतति=गच्छति स्वविषये नियमेन व्याप्रियत इत्यर्थः । मनुते अनेनेति विज्ञाननिमित्तमन्तःकरणं मनः। प्रेषितमिवेत्युपमार्थः । न त्विषितप्रेषितशब्दयोरर्थाविह संभवतः । नहि शिष्यानिव मन आदीनि विषयेभ्यः प्रेषयत्यात्मा। विविक्तनित्यचित्स्वरूपतयातु निमित्तमात्रं प्रवृत्तौ । नित्यचिकित्साधिष्ठातृवत् । प्राण

---

திக்கின்றன. அது சேதனுவானுன அதிஷ்டாதா இல்லாவிடில் பொருந்தமாட்டாது. அதைப்பற்றிய விசேஷமானது அறியப்படாமையாலும், சேதனனொருவனிருக்கவேண்டுமெனப் பொதுப்படையாக அறியப்படுவதாலும் விசேஷத்தைப்பற்றிய ப்ரச்னம் பொருத்தமுடையதாகவாகிறது.

பாஷ்யம்.—**केनेषितम् = केन इष्टम्** (கெநேஷிதம் = கேந இஷ்டம்)=எவரது இச்சாமாத்திரத்தினுல் **मनः पतति=गच्छति** (மநஃ பததி=கச்சதி)=மனஸ்ஸானது தனது விஷயத்தில் நியமமாகப் பிரவிருத்திக்கின்றதோ என்பது பொருள். "இதனுல் மனனம் செய்கிறுன்" என்ற வ்யுத்பத்தியினுல் விக்ஞானத்துக்கு நிமித்தமான அந்தக்கரணமானது மன: என்றதால் சொல்லப்படும். **प्रेषितम्** (ப்ரேஷிதம்)=என்பதற்கு ப்ரேஷிதம் போல என்று உபமைப் பொருள் கொள்ளவேண்டும். **इषितम्** (இஷிதம்)=என்றும், **प्रेषितम्** (ப்ரேஷிதம்)=என்றுமான சப்தங்களின் பொருளோ இங்கு ஸம்பவிக்க (பொருத்தமுள்ளதாக) மாட்டாது. ஆத்மாவானது (குரு) சிஷ்யர்களைப்போல மனம் முதலியவற்றை விஷயங்களையும் பொருட்டு அனுப்புவதில்லை. பின்னையோவெனில் விஷய ஸம்பந்தமற்றதும் நித்தியமும், சித்ரூபமுமாகவிருப்பதிலிருந்து நித்திய சிகித்ஸையில் அதிஷ்டாதாவான *சகோரம் என்ற பக்ஷிபோல மன ஆதிக

---

* ராஜாக்கள் போஜனஞ் செய்யுங்கால் சகோரம் என்ற பக்ஷியை அவர் சாப்பிடுமன்னத்துக்கெதிரில் வைத்திருப்பதுண்டு. அவ்வன்னத்

इति नासिकाभव: । प्रकरणात् । प्रथमत्वं चलनक्रियाया: प्राणनिमित्तत्वात् । स्वतो विषयावभासमात्रं करणानां प्रवृत्ति: । चलिक्रिया तु प्राणस्यैव मन आदिषु । तस्मात्प्राथम्यं प्राणस्य । प्रैति=गच्छति, युक्त:=प्रयुक्त: इत्येतत् । वाचो वदनं किं निमित्तं प्राणिनाम् । चक्षु:श्रोत्रयोश्च को देव: प्रयोक्ता । करणानामाधिष्ठाता चेतनवान्य: स किंविशेषण इत्यर्थ: ॥ १ ॥

श्रोत्रस्य श्रोत्रम्.........अमृता भवन्ति ॥ २ ॥

ச்ரோத்ரஸ்ய ச்ரோத்ரம்.........அம்ருதா பவந்தி ॥ உ ॥

श्रोत्रस्य श्रोत्रमित्यादिप्रतिवचनं निर्विशेषस्य निमित्तत्वार्थम् । विक्रियादिविशेषरहितस्यात्मनो मन आदिप्रवृत्तौ निमित्तत्वमित्येतच्छ्रोत्रस्य श्रोत्र

---

ளின் ப்ரவிருத்தியில் நிமித்தமாகமட்டுமாகிறது. प्राण: (ப்ராண:)= என்றதால் ப்ரகரணத்தையொட்டி நாஸிகையிலுண்டாகும் வாயு சொல்லப்படும். ப்ரதமமாகவிருத்தலானது சலனமென்ற க்ரியை ப்ராணனை நிமித்தமாகக் கொண்டிருப்பதுபற்றியாம். தானாகவே விஷயங்களை ப்ரகாசப்படுத்தல் என்பதுமட்டுமே கரணங்களின் ப்ரவிருத்தியாகும். மன ஆதிகளிலுள்ள சலனரூபமான க்ரியையோ ப்ராணனுடையதேயாகும். ஆனதுபற்றி ப்ராணனுக்கு ப்ராதம்யம்=முக்கியமாகவிருத்தலேற்படுகிறது. प्रैति (ப்ரைதி)=என்பதற்குப் போகிறது என்றும், युक्त: (யுக்த:)=என்பதற்கு ஏவப்பட்டதாய் என்றும் பொருளாம். வாக்கினுடைய பேசுதல் என்ற காரியமானது எதை நிமித்தமாகக்கொண்டது? ப்ராணிகளின் சக்ஷுஸ் சுரோத்திரம் இவற்றுக்கு ப்ரேரகனான தேவன் யார்? கரணங்களுக்கு அதிஷ்டாதாவான சேதனையுள்ளவன் எவனோ அவன் எத்தகைய விசேஷணமுள்ளவன் என்பது பொருள். (1) (எ—று)

---

தில் விஷம் முதலியன கலந்திருக்குமாயின் அச்சகோர பக்ஷியின் கண் சிவந்துவிடும். இல்லையேல் விஷமில்லையெனவறிந்து ராஜன் போஜனஞ் செய்வார். ஆகவே சகோரபக்ஷியானது தனது ஸன்னிதிமாத்திரத்தினால் அரசனின் போஜன ப்ரவிருத்திக்குக் காரணமாகவாவதுபோல ஆத்மாவும் தனது ஸன்னிதிமாத்திரத்தினால் மன ஆதிகளின் பிரவிருத்திக்குக் காரணமாகவாகிறது என்பது கருத்து.

मित्यादि प्रतिवचनस्यार्थः। अनुगमात्। तदनुगतानि ह्यत्रास्मिन्नर्थेऽक्षराणि। कथम्? शृणोत्यनेनेति श्रोत्रम्, तस्य शब्दावभासकत्वं श्रोत्रत्वम्। शब्दोपलब्धृरूपतयावभासकत्वम्, न स्वतः। श्रोत्रस्याचिद्रूपत्वात्। आत्मनश्च चिद्रूपत्वात्। यच्छ्रोत्रस्योपलब्धृत्वेनावभासकत्वं तदात्मनिमित्तत्वाच्छ्रोत्रस्य श्रोत्रमित्युच्यते। यथा क्षत्रस्य क्षत्रं यथावोदकस्यौष्ण्यमग्निमित्तमिति दग्धुरप्युदकस्य दग्धाग्निरुच्यते, उदकमपि ह्यग्निसंयोगादग्निरुच्यते। तद्व-

---

பாஷ்யம்.—"ஸ்ரோத்திரத்துக்கு ஸ்ரோத்திரம்" என்றதாதி ப்ரதிவசனமானது நிர்விசேஷம் ப்ரம்ஹம் என்பதற்கு நிமித்தம் சொல்லவேண்டியாம். அதாவது:—விக்ரியை முதலிய விசேஷமற்ற தான ஆத்மாவானது மனஸ் முதலியவற்றின் ப்ரவிருத்தியில் நிமித்த மாகவாகிறது என்ற இது "ஸ்ரோத்ரஸ்ய ஸ்ரோத்ரம்" என்றதாதி ப்ரதிவசனத்தின் பொருள் என்றும். ஸ்ருதிகளிலுள்ள அக்ஷரங்க ளின் ஒற்றுமையும் காணப்படுகிறது. அதாவது:—இப்பொருளில் ஸ்ருதியிலுள்ள அக்ஷரங்கள் பொருத்தமுள்ளனவாகவே இருக்கின் றன. எவ்விதமெனின்? கூறுவாம்—"இதனால் கேட்கிறான்" என்ற வியுத்பத்திகொண்டு ஸ்ரோத்ரமென்ற அதற்கு சப்தத்தை ப்ரகாசப் படுத்துந்தன்மை ஸ்ரோத்ரத்வமென்றேற்பட்டது. ஆகவே சப்தங் களை அறிபவன் ரூபமாக இருத்தல்பற்றி சப்தாவபாஸகத்வம் ஏற் படுமேயொழிய தனியாக ஸ்ரோத்ரேந்திரியத்துக்கு அவபாஸகத் துவமேற்படமாட்டாது. ஸ்ரோத்ரேந்திரியம் அசித்ரூபமாக (ஜட மாக) இருப்பதே அதன் காரணமாகும். ஆத்மாவுக்கோ அவபாஸ கத்துவம்(ப்ரகாசப்படுத்துபவனுகவிருத்தல்)ஸம்பவிக்கலாம். அவன் சித்ரூபனுக இருப்பதுபற்றியே என்க. ஆகவே ஸ்ரோத்ரத்துக்கு உபலப்த்ருத்தன்மையினுல் (ப்ரகாசப்படுத்துகின்ற தன்மையினுல்) அவபாஸகத்வம் என்பது யாதுண்டோ அது ஆத்மநிமித்தமாக ஏற் படுவதால் "श्रोत्रस्य श्रोत्रम्" ("ஶ்ரோத்ரஸ்ய ஶ்ரோத்ரம்") ஸ்ரோ த்ரத்துக்கு ஸ்ரோத்ரம் என்றதால் நிர்விசேஷ சைதன்னியமே உப லக்ஷணமுறையால் சொல்லப்படுகிறது. க்ஷத்ரியஜாதி நியாமகமான கர்மமானது "क्षत्रस्य क्षत्रम्" ("க்ஷத்ரஸ்ய க்ஷத்ரம்") எனச் சொல்லப்படுவது எவ்விதமோ, ஜலத்துக்குச்சூடானது அக்னி நிமித் தமாக ஏற்படுவதுபற்றி சுடுகின்ற ஜலத்துக்கும் அக்னியே சுடுகை

दनित्यं यत्संयोगादुपलब्धृत्वं तत्करणं श्रोत्रादि। उदकस्येव दग्धृत्वम् अनित्यं हि तत्र तत्। यत्र तु नित्यमुपलब्धृत्वमग्नाविवौष्ण्यं, स नित्योपलब्धिस्वरूपत्वाद्दग्धेवोपलब्धोच्यते। श्रोत्रादिषु श्रोतृत्वाद्युपलब्धिरनित्या, नित्याचात्मनि। अत: श्रोत्रस्य श्रोत्रमित्याद्यक्षराणामर्थानुगमादुपपद्यते निर्विशेषस्य उपलब्धिस्वरूपस्यात्मनो मन आदिप्रवृत्तिनिमित्तत्वमिति। मन आदिष्वेवं यथोक्तम्। वाचो ह वाचं, प्राणस्य प्राण इति विभक्तिद्वयं

---

யையுண்டுபண்ணுபவனாகச் சொல்லப்படுவது எவ்விதமோ, ஜலமுங் கூட அக்னியின் சேர்க்கையினால் அக்னியாகச் சொல்லப்படுகிறது எவ்விதமோ, அவ்விதமே உபலப்தாவான எந்த ஆத்மஸம்பந்தத்தினால் ஶ்ரோத்ராதிகளில் உபலப்திருத்வமானது காணப்படுகிறதோ அந்த ஶ்ரோத்ராதி கரணமானது அநித்யமாகவாகிறது. ஜலத்தில் காணப்படும சுடுகின்றதாக இருக்கும் தன்மைபோல அதில் (ஶ்ரோத்ராதிகரணங்களில்) காணப்படும் உபலப்திருத்வமானது அனித்யமாகவே ஆகிவிட்டது. நெருப்பில் சூடானது போல எதனிடத்தில் உபலப்திருத்வமானது நித்யமாகக் கானப்படுகிறதோ அந்த ஆத்மா எப்பொழுதுமே உபலப்திஸ்வரூபனாக (சைதன்யஸ்வரூபனாக) இருப்பதால் அக்னி சுடுகிறான் என்பது போல உபலப்தாவாக (விஷய ப்ரகாசகனாக) ச் சொல்லப்படுகிறான். ஶ்ரோத்ரம் முதலியவற்றில் ஶ்ரோத்ருத்வாதிகளின் தோற்றமானது அநித்மாகவும் ஆத்மாவினிடத்தில் நித்யமாகவும் இருக்கிறது. ஆனதுபற்றி "श्रोत्रस्य श्रोत्रम्" ("ஶ்ரோத்ரஸ்ய ஶ்ரோத்ரம்") ஶ்ரோத்ரத்துக்கு ஶ்ரோத்ரம் என்றதாதி அக்ஷரங்களின் பொருள் ஒத்துவருவதால் நிர்விசேஷனும், உபலப்தி (சைதன்ய) ஸ்வரூபனுமான ஆத்மாவுக்கு மனஸ் முதலியவற்றின் ப்ரவிருத்திக்கு நிமித்தமாகவிருத்தல் பொருந்தக் கூடியதாகவே ஆகிவிடுகிறது. மனஸ் முதலியவற்றிலும் இதுவரை சொல்லப்பட்டபடியே காண்க. மூலத்தில் *"वाचो ह वाचम्" ("வா

---

* அதாவது: "वाचो ह वाक्" ("வாசோ ஹ வாக்") என ப்ரதமாவிபக்தியும், படிக்கப்பட்டபடி "वाचो ह वाचम्" ("வாசோ ஹ வாசம்") எனத்விதீயாவிபக்தியும், "प्राणस्य प्राणः" ("ப்ராணஸ்ய ப்ராண:") என்றவிடத்தில் "प्राणस्य प्राणः" ("ப்ராணஸ்ய ப்ரா

सर्वत्रैव द्रष्टव्यम् । कथम्? पृष्टत्वात्स्वरूपनिर्देशः प्रथमयैव च निर्देश्यः । तस्य च ज्ञेयत्वात्कर्मत्वमिति द्वितीया । अतो वाचोह वाचं, प्राणस्य प्राण इत्यस्मात्सर्वत्रैव विभक्तिद्वयम् । यदेतच्छ्रोत्राद्युपलब्धिनिमित्तं श्रोत्रस्य श्रोत्रमित्यादिलक्षणं नित्योपलब्धिस्वरूपं निर्विशेषमात्मतत्वं तद्बुद्ध्वाति-मुच्य=अनवबोधनिमित्ताध्यारोपिताद्बुद्ध्यादिलक्षणात्संसारान्मोक्षणं कृत्वा, धीराः=धीमन्तः, प्रेत्यास्माल्लोकात्=शरीरात्प्रेत्य=वियुज्य, अन्यस्मिन्नप्रति-

---

சொ ஹ வாசம்”) என்றும், “प्राणस्य प्राणः” (“ப்ராணஸ்ய ப்ராண:”) என்றுமான இவ்விரண்டிடங்களிலும், இரண்டு விபக்திகள் (வேற்றுமைகள்) இருப்பதாகக் காணவேண்டும். எவ்விதமெனில்? கூறுவாம். அதாவது:—(சிஷ்யன் சக்ஷுஸ் ஶ்ரோத்திரங்களை ப்ரேரணை செய்யும் தேவன் எத்தகையவன்?) எனக்கேட்டபடியால் ப்ரதமாவிபக்தியினாலேயே (ஒன்றும் வேற்றுமையினாலேயே) (தேவ) ஸ்வரூபநிர்த்தேசம் செய்யவேண்டுவது அவஶ்யமாகிறது. அவன் க்ஞேயமாகவாவதால் கர்மத்வம் அவனுக்கு ஏற்படுவதுபற்றி த்விதீயாவிபக்தியும் (இரண்டாம் வேற்றுமையும்) வேண்டி வருகிறது. ஆகவே “वाचो ह वाचं प्राणस्य प्राणः” (“வாசொ ஹ வாசம் ப்ராணஸ்ய ப்ராண:”) என்ற இதைக் காட்டிலும் இரண்டிடத்திலும் இரண்டு விபக்தியும் (வேற்றுமையும்) இருப்பதாகக் கண்டு கொள்ளவேண்டும். ஶ்ரோத்ராதிகளின் உபலப்திக்கு (ப்ரகாசத்துக்கு) நிமித்தமானதும், “ஶ்ரோத்ரத்துக்கு ஶ்ரோத்ரம்” என்றதாதியான லக்ஷணம் வாய்ந்ததும், எப்பொழுதுமே சைதன்னிய ஸ்வரூபமாகவுள்ளதும் நிர்விசேஷமுமான யாதொரு இந்த ஆத்மதத்வமுண்டோ அதையறிந்து अतिमुच्य (அதிமுச்ய)=அக்ஞானமாகிற நிமித்தத்தினால் ஆரோபிக்கப்பட்டதும் புத்தியாதிரூபமானதுமான ஸம்ஸாரத்தினின்றும் விடுதலையையடைந்து, धीराः (தீரா:)= புத்திமான்களாகி अस्मात् लोकात् (அஸ்மாத் லோகாத்)=இந்தச் சரீரத்தினின்றும் प्रेत्य (ப்ரேத்ய)=விடுபட்டுப் பிறவொன்றும் தோற்று

---

ண:”) எனப் படிக்கப்பட்டபடி ப்ரதமாவிபக்தியும் “प्राणस्य प्राणम्” (“ப்ராணஸ்ய ப்ராணம்”) என த்விதீயாவிபக்தியும் வைத்துப் பொருள் காணவேண்டும் என்றும்,

सन्धीयमाने निर्निमित्तत्वादमृता भवन्ति । सति ह्यज्ञाने कर्माणि शरीरान्तरं प्रतिसन्दधते । आत्मावबोधे तु सर्वकर्मारंभनिमित्ताज्ञानविपरीतविद्याग्निविप्लुष्टत्वात् कर्मणामित्यनारंभेऽमृता एव भवन्ति । शरीरादिसन्तानाविच्छेदप्रतिसन्धानाद्यपेक्षयाध्यारोपितमृत्युवियोगात्पूर्वमप्यमृताःसन्तो नित्यात्मस्वरूपत्वादमृता भवन्तीत्युपचर्यते ॥ २ ॥

**न तत्र चक्षुः.........यथैतदनुशिष्यात् ॥ ३ ॥**

ந தத்ர சக்ஷு:....யதைதத³நுஶிஷ்யாத் ॥ ௩ ॥

न तत्र चक्षुर्गच्छतीत्युक्तेऽपि पर्यनुयोगे हेतुरप्रतिपत्तेः । श्रोत्रस्य श्रोत्रमित्येवमादिनोक्तेप्यात्मतत्त्वेऽप्रतिपन्नत्वात्सूक्ष्मत्वहेतोः वस्तुनः पुनः पुनः पर्यनुयुयुक्षा कारणमाह—न तत्र चक्षुर्गच्छतीति । तत्र=श्रोत्राद्यात्म-

---

மல் போகவே நிமித்தம் (காரணம்) எதுவுமில்லாமல் போகவே முக்தர்களாகவாகின்றனர். அக்ஞானமிருக்கும்பொழுதன்றோ கர்மங்கள் வேறு சரீரத்தைத்தருகின்றன. ஆத்மக்ஞானமேற்பட்டாலோ எல்லாவிதமான கர்மங்களுடையவும் ஆரம்பத்துக்கு நிமித்தமான அக்ஞானத்துக்கு நேர்விரோதியான வித்யை (ப்ரம்ஹக்ஞான) யாகிற நெருப்பினால் கர்மங்கள் பொசுக்கப்பட்டுவிட்டபடியால் வேறு சரீரத்தின் உத்பத்தியில்லாது போகவே முக்தர்களாகவே ஆகிவிடுகின்றனர். அத்யாஸ மூலமேற்பட்ட ம்ருத்யுவின் வியோகத்துக்கு (நாசத்துக்கு) முன்னரும் கூட நித்யமான ஆத்மஸ்வரூபர்களாக இருப்பதுபற்றி அம்ருதர்களாக (முக்தர்களாக) இருப்பினுங்கூட, சரீராதிகளின் தொடர்ச்சியில் ஏற்படும் இடையறுத ப்ரதி ஸந்தானுதிகளை (த்தோற்றத்தை) அபேக்ஷித்து முக்தர்களாகவாகின்றனர் எனத்திரும்பவு முபசாரமுறையாற் கூறப்படுகிறது. (2) (எ—று)

பாஷ்யம்.—ஆசாரியரால் ஆத்மதத்த்வமானது உபதேசிக்கப்பட்டபோதிலுங்கூட சிஷ்யனுக்கு அதைப்பற்றிய அறிவு ஏற்படாமையே திரும்பவும் கேட்பதில் காரணமாகிறது. அதாவது:— "ஶ்ரோத்ரத்துக்கு ஶ்ரோத்ரம்" என்றதாதியால் ஆத்மதத்த்வமானது சொல்லப்பட்டபோதிலுங்கூட வஸ்துவானது ஸூக்ஷ்மமாக (அறிதற்கரிதாக) இருத்தல் காரணமாக அறியப்படாமைபற்றி அடிக்

भूते चक्षुरादीनि वाक्चक्षुषोः सर्वेन्द्रियोपलक्षणार्थत्वान्न विज्ञानमुत्पादयन्ति । सुखादिवत्तर्हि गृह्येतान्तःकरणेनात आह—नो मनः। न सुखादिवन्मनसो विषयस्तत्। इन्द्रियाविषयत्वात् । न विद्मो न विजानीमोऽन्तःकरणेन यथैतद्ब्रह्म मन आदिकरणजातमनुशिष्यात्=अनुशासनं कुर्यात्प्रवृत्तिनिमित्तं भवेत्तथाऽविषयत्वान्न विद्मो न विजानीमः। अथवा-श्रोत्रादीनां श्रोत्रादिलक्षणं ब्रह्म विशेषेण दर्शयेत्युक्त आचार्य आह—न शक्यते दर्शयितुम् । कस्मात्? न तत्र चक्षुर्गच्छतीत्यादिपूर्ववत्सर्वम् । अत्र तु विशे-

---

கடி கேள்விகேட்பதில் காரணமாகிறது என்பதுபற்றி "அதனிடத்தில் கண் செல்லுவதில்லை" என்று ஆசிரியர் சொல்லுகிறார். तत्र (தத்ர)=ம்ரோத்ராதிகளுக்கு ஆத்மாவாகவான ப்ரம்ஹத்திடத்தில், சக்ஷுராதிகளான இந்திரியங்கள் விக்ஞானத்தையுண்டுபண்ணுவதில்லை. மூலத்தில் சக்ஷுரிந்திரியமும், வாகிந்திரியமும் மட்டுமே சொல்லப்பட்டிருந்தபோதிலும் உபலக்ஷணமுறையால் எல்லா இந்திரியங்களும் எனப் பொருள் கொள்ளவேண்டும். அங்ஙனமாயின் (ப்ரம்ஹமானது) சுகாதிகள்போல அந்தக்கரணத்தினால் கிரஹிக்கப்படட்டும் என்றாலோ, அதற்குவேண்டி "नो मनः" ("நொ மநः") என்று சொல்லுகிறார். அதாவது: சுகாதிகள் போல மனத்திற்கு அது விஷயமாகக்கூடியதுமன்று. ஏன்? இந்திரியங்களுக்கு விஷயமாக (புலனாகக்கூடியதாக) இல்லாதிருப்பதே அதன் காரணமாகும். மேலும் एतत्(ஏதத்)=இந்த ப்ரம்ஹமானது மனம் முதலிய கரணஸமூஹத்தை यथा (யதா)=எவ்விதம் अनुशिष्यात् (அநுமிஷ்யாத்)=அனுசாஸனஞ்செய்யுமோ அதாவது:—மனம் முதலியவற்றின் ப்ரவிருத்திக்கு நிமித்தமாகவாகுமோ அம்முறையை அந்தக்கரணத்தால் न विद्मः न विजानीमः (ந வித்₃ம: ந விஜாநீம:)=பொதுவாகவும் அறிகின்றோமில்லை, தனித்தும் அறிகின்றோமில்லை. அந்தக்கரணத்துக்கு ப்ரம்ஹம் விஷயமாகவாகாதிருப்பதே அதன் காரணமாகும். *அல்லது "ம்ரோத்ராதிகளுக்கு ம்ரோத்ராதிலக்ஷணமான ப்ரம்ஹத்தை தனித்துக்காட்டுவீராக" எனச்சிஷ்யனால் கேட்கப்பட்ட ஆசிரியர்

---

* இது முதலுள்ள பாஷ்யத்தில் न तत्र चक्षुर्गच्छति (ந தத்ர சக்ஷுர்-க₃ச்ச₂தி) என்ற பாகத்துக்கு வேறுபொருள் கூறப்படுகிறது.

षो यथैतदनुशिष्यादिति। यथैतदनुशिष्यात्=प्रतिपादयेत् अन्योऽपि शिष्यानितोऽन्येन विधिनेत्यभिप्राय: ॥ ३ ॥

सर्वथापि ब्रह्म बोधयेत्युक्त आचार्य आह—अन्यदेव तद्विदितादथो अविदितादधीत्यागमम्।

अन्यदेव तद्विदितात्.........व्याचचक्षिरे ॥ ४ ॥

அந்யதேவ தத்விதிதாத்.........வ்யாசசக்ஷிரே ॥ ௪ ॥

विदिताविदिताभ्यामन्यत्वम्। योऽहि ज्ञाता स एव स: सर्वात्मकत्वात्। अतस्सर्वात्मनो ज्ञातुर्ज्ञात्रन्तराभावाद्विदितादन्यत्वम्। "स वेत्ति

---

அதுகாட்டமுடியாது என்கிறார். ஏன்? न तत्र चक्षुर्गच्छति (ந தத்ர சக்ஷுர்கச்சதி) என்றதாதி ஶ்ருதியிருப்பதே அதன் காரணமாகும். இதற்கு முன்போலவேதான் பொருள். ஆனாலோ இங்கு ஒரு விசேஷம் (வேற்றுமை) உண்டு. அதாவது: "यथैतदनुशिष्यात्" ("யதைததநுஶிஷ்யாத்") என்றும். அதாவது:—இந்த ப்ரம்ஹத்தை இவ்விதம் நான் சொன்னதைவிட வேறு எந்த முறையினால் மற்றொருவர் தனது சிடர்களுக்கு உபதேசிக்கக்கூடுமோ அம்முறையொன்றிருப்பதாக நாம் அறிந்தோமில்லை என்பதாம். (3) (எ—று)

அவதாரிகா பாஷ்யம்.—அங்ஙனமாயின் எவ்வழியாகவேனும் ப்ரம்ஹத்தை உபதேசிப்பீராக எனச் சிடனால் சொல்லப்பட்ட ஆசிரியர் "अन्यदेव तद्विदितात् अथो अविदितादधि" ("அந்யதேவ தத்விதிதாத் அதோ அவிதிதாததி") என்றதால் ப்ரம்ஹத்தையறிவிக்கும் சாஸ்திரத்தைச் சொல்லுகிறார்—

பாஷ்யம்.—இதனால் விதிதம் அவிதிதம் இவ்விரண்டைக்காட்டிலும் வேற்றுமையானது சொல்லப்பட்டது. அதாவது:—எவன் வேதிதாவோ=வேதனரூபமான அந்தக்கரணவிருத்திக்கு ப்ரகாசகனோ, அவனேதான் ப்ரம்ஹம். (ஏன்?) ஸர்வத்துக்கும் ஆத்மாவாகவிருப்பதுபற்றியே என்க. ஆகவே ஸர்வாத்மாவான க்ஞாதாவைக் காட்டிலும் வேறு க்ஞாதா இல்லாமையால் விதிதத்தைக்காட்டிலும் அன்யத்வமானது=வேறுபட்டிருத்தலானது ஸித்திக்கிறது. "அவர் வேத்யத்தை=அறியவேண்டியதை, அறிகிறாரேயொழிய அவரையறி

वेद्यं नच तस्यास्ति वेत्ता" इति च मन्त्रवर्णात्। "विज्ञातारमरे केन विजानीयात्" इति च वाजसनेयके। अपि च, व्यक्तमेव विदितं, तस्मादन्यदित्यभिप्रायः। यद्विदितम्=व्यक्तं, तदन्यविषयत्वादल्पं सविरोधं, ततोऽनित्यं, अत एवानेकत्वादशुद्धम्, अत एव तद्विलक्षणं ब्रह्मेति सिद्धम्। अस्तु तर्ह्यविदितम्। न। विज्ञानानपेक्षत्वात्। यद्ध्यविदितं तद्विज्ञानापेक्षम्, अविदितविज्ञानाय हि लोकप्रवृत्तिः। इदं तु विज्ञानानपेक्षम्। कस्मात्? विज्ञानस्वरूपत्वात्। नहि यस्य यत्स्वरूपं तत्तेनान्यतोऽपेक्ष्यते। नच स्वत एवापेक्षा। अनपेक्षमेव सिद्धत्वात्। प्रदीपः स्वरूपाभिव्यक्तौ न प्रका-

---

பவர் ஒருவருமில்லை" என மந்த்ரவர்ணமுமிருக்கிறது. "ஹே மைத்ரேயி! விக்ஞாதாவை எதனுல் அறிந்துகொள்ளமுடியும்" என வாஜஸநேயகத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் வ்யக்தமாக=ஸ்தூலமாக, உள்ளது எதுவோ அதுவே அறியப்பட்டதாகவாகும். இதுவோ அதை (வ்யக்தத்தை) க் காட்டிலும் வேறுபட்டது என்பது கருத்து. ஆகவே எது விதிதமோ=வ்யக்தமோ அது அன்யத்துக்கு=ப்ரம்ஹத்தைக்காட்டிலும் வேருனவற்றுக்கு, விஷயமாகவாவதால் அல்பமாகவும், விரோதமுள்ளதாகவும் ஆகும். ஆகவே அது அநித்யமாகவே ஆகும். ஆனதுபற்றியே அனேகமாகவிருப்பதிலிருந்து அசுத்தமாகவும் (மாயாஸம்பந்தமுள்ளதாகவும்) ஆகும். ஆனதுபற்றியே ப்ரம்ஹம் அதற்கு விலக்ஷணமானது என்பது ஸித்திக்கிறது.

அங்ஙனமாயின் அவிதிதமாக இருக்கட்டும் எனின்? அவ்விதமாகவாகமாட்டாது. ஏன்? விக்ஞானத்தின் அபேக்ஷையற்றிருப்பதே அதன் காரணமாகும். அதாவது:—எது அவிதிதமோ=அறியப்படாததோ, அது விக்ஞானத்தின் அபேக்ஷையுள்ளதாகவே இருக்கிறது. அவிதிதத்தை=அறியப்படாதபொருளை, அறிந்துகொள்ளவேண்டியன்றோ லோகப்ரவிருத்தியேற்படுகிறது. இந்த ப்ரம்ஹமோ வேறு விக்ஞானத்தை யபேக்ஷிக்காதது. ஏன்? விக்ஞான ஸ்வரூபமாக இருப்பதே அதன் காரணமாகும். எது எதனுடைய ஸ்வரூபமோ அது அதனுல் வேருென்றினிடமிருந்து அபேக்ஷிக்கப்படமாட்டாதன்றோ. தன்னைத்தானே அபேக்ஷிப்பதுமில்லை. பிறவற்றின் அபே

शान्तरमन्यतोऽपेक्षते, स्वतो वा। यद्ध्यनपेक्षं तत्स्वत एव सिद्धम्। प्रकाशात्मकत्वात्प्रदीपस्यऽपेक्षितोऽप्यनर्थकस्स्यात्। प्रकाशे विशेषाभावात्। नहि प्रदीपस्य स्वरूपाभिव्यक्तौ प्रदीपप्रकाशोऽर्थवान्। नचैवमात्मनोऽन्यत्र विज्ञानमस्ति येन स्वरूपविज्ञानेप्यपेक्ष्यते।

विरोध इति चेत्। न। अन्यत्वात्। स्वरूपविज्ञाने विज्ञानस्वरूपत्वाद्विज्ञानान्तरं नापेक्षत इत्येतदसत्। दृश्यते हि विपरीतज्ञानमात्मनि सम्यग्ज्ञानं च "न जानाम्यात्मानम्" इति, श्रुतेश्च—"तत्त्वमसि" "आत्मानमेवा-

---

கைஷயில்லாமல் அது ஸித்தமாகவிருப்பதே அதன் காரணமாகும். விளக்கானது தனது ஸ்வரூபாபிவ்யக்தி விஷயத்தில் வேறு ப்ரகாசத்தை வேறென்றினிடமிருந்து அபேக்ஷிப்பதுமில்லை. தன்னைதானபேக்ஷிப்பதுமில்லையன்றோ? ஆகவே எது (பிறவற்றினுடையவோ தன்னுடையவோ) அபேகைஷயற்றதோ அது ஸ்வதஸ்ஸித்தமாகவே தானாகும். ப்ரதீபமானது ப்ரகாசவுருவமாக இருப்பதால் அதனால் அபேக்ஷிக்கப்படும் பொருளும் பயனற்றதாகவேதானாகும். ப்ரகாசத்தில் வேற்றுமையில்லாதிருப்பதே அதன்காரணமாகும். விளக்குக்குத் தனது ஸ்வரூபாபிவ்யக்தி விஷயத்தில் வேறுவிளக்கின் ப்ரகாசமானது பயனுள்ளதாகவாகமாட்டாதன்றோ? மேலும் ஆத்மாவினால் தனது ஸ்வரூப விக்ஞானவிஷயத்தில் அபேக்ஷிக்கப்படக்கூடிய விக்ஞானமானது ஆத்மாவைக்காட்டிலும் வேறிடத்தில் இல்லையன்றோ.

சங்கை—வேறு விக்ஞானாபேகைஷ இல்லையென்றால் லௌகிகமான அனுபவத்துக்கு விரோதமும், சாஸ்திர விரோதமும் வரும் என்றாலோ ?

உத்தரம்—வராதென்கிறோம். ஏன்? அந்த க்ஞானம் வேறாகவிருப்பதே அதன் காரணமாகும். *அதை விளக்குவாம்—

சங்கை—ப்ரம்ஹமானது விக்ஞானஸ்வரூபமாக இருப்பதால் அதன் ஸ்வரூபவிக்ஞானவிஷயத்தில் வேறு விக்ஞானமானது அபேக்ஷிக்கப்படுவதில்லை என்றது அஸாதுவாகும். உலகில் "ஆத்மாவை

---

* இது முதல் சுருக்கமாகச் சொல்லப்பட்ட சங்கையை விரிவுபடுத்தியும் அதன் உத்திரத்தை விரிவுபடுத்தியும் உபதேசிக்கிறார்.

वेद" "एतं वै तमात्मानं विदित्वा" इति च सर्वत्र श्रुतिष्वात्मविज्ञाने विज्ञानान्तरापेक्षत्वं दृश्यते। तस्मात्प्रत्यक्ष श्रुतिविरोध इतिचेन्न। कस्मात्? अन्यो हि स आत्मा, बुद्ध्यादिकार्यकरणसङ्घाताभिमानसन्तानाविच्छेद-लक्षणोऽविवेकात्मकः बुद्ध्यवभासप्रधानचक्षुरादिकरणो नित्यचित्स्वरूपा-त्मान्तस्सारो यत्रानित्यं विज्ञानमवभासते। बौद्धप्रत्ययानामाविर्भावतिरो-

---

யறிந்திலேன்" என ஆத்மவிஷயமான (*)அக்ஞானமும், ஸாக்ஷீ, துக்கீ என்ற விபரீதக்ஞானமும், ஶ்ருதியினால் ஸம்யக்ஞானமும் காணப்படுகின்றதன்றோ. அதாவது:—"அதாக நீ இருக்கிறாய்" என்றும், "தன்னையே தான் அறிந்தது" என்றும், "இதே அந்த ஆத்மாவை அறிந்து" என்றுமான எல்லா ஶ்ருதிகளிலும் ஆத்மவிக்ஞான விஷயத்தில் வேறு விக்ஞானத்தையபேக்ஷிக்குந்தன்மையும் காணவும் படுகிறது. ஆகவே முற்கூறிய ப்ரத்யக்ஷானுபவத்துக்கும், ஶ்ருதிகளுக்கும் விரோதம் வரும் என்கிறோம் எனின் ?

உத்தரம்—அவ்விதம் வராதென்கிறோம். ஏன் ? எவனிடத்தில் அநித்யமான விக்ஞானமானது ப்ரகாசிக்கிறதோ, அவன் புத்தியாதிகளாகிற காரியகரண (தேஹேந்திரியக்) கூட்டத்தில் தொடர்ந்த அபிமானத்தின் நிறைவுள்ளவனும், பகுத்தறிவற்ற மனமுள்ளவனும், புத்தியிலேற்படும் சிதாபாஸத்தை (சைதன்னியத்தோற்றத்தை) ப்ரதானமாகக்கொண்டவனும், சக்ஷுராதிகளைக் காரணமாகக் கொண்டவனும், நித்யனும் சித்ஸ்வரூபனுமான ஆத்மாவை அந்தஸ்ஸாரமாகவுடையவனுமாக ஆவதுபற்றி (ப்ரம்ஹத்தைக்காட்டிலும்) வேறுபட்டவனே யாகிறான். புத்தியிலுண்டாகின்ற விருத்திகள் வெளிவருவதும் மறைவதுமான தர்மமுள்ளனவாக விருப்பனபற்றி அவற்றைவிட வேறுபட்ட லக்ஷணம்வாய்ந்த ப்ரம்ஹமுங்கூட அந்தத் தர்மங்களுடன் கூடினதாகவே தோன்றுகிறது. உள்ளிலிருக்கும் காரணமான மனஸ்ஸுக்கும் அதுமனஸ்ஸாகிறது. "ஸர்வத்

---

(*) दृश्यते हि विपरीतज्ञानमात्मनि (த்ருஶ்யதே ஹி விபரீதஜ்ஞாநமாத்மநி) என்றவிடத்தில் दृश्यते ह्यज्ञानं विपरीतज्ञानं चात्मनि (த்ருஶ்யதே ஹ்யஜ்ஞாநம் விபரீதஜ்ஞாநம் சாத்மநி) என்ற வேறுபாட்டைக் கொண்டு இவ்விதம் உரை எழுதப்பட்டது.

भावधर्मकत्वात्तद्धर्मतयैव विलक्षणमपि चावभासते। अन्तःकरणस्य मनसोऽपि मनः, अन्तर्गतत्वात्सर्वान्तरश्रुतेः। अन्तर्गतेन नित्यविज्ञानस्वरूपेणाकाशवदप्रचलितात्मनान्तर्गर्भभूतेन बाह्यो बुद्ध्यात्मा तद्विलक्षणः अर्चिर्भिरिवाग्निः प्रत्ययैराविर्भावतिरोभावधर्मकैर्विज्ञानाभासरूपैरनित्यैरनित्यविज्ञान आत्मा सुखी दुःखीत्यभ्युपगतो लौकिकैः, अतोऽन्यो नित्यविज्ञानस्वरूपादात्मनः। तत्र हि विज्ञानापेक्षा विपरीतज्ञानत्वं चोपपद्यते, न पुनर्नित्यविज्ञाने। तत्वमसीति बोधोपदेशो नोपपद्यत इति चेत्, "आत्मानमेवावेत्"इत्येवमादीनि च, नित्यबोधात्मकत्वात्, नह्यादित्योऽन्येन प्रकाश्यते,

---

தைக்கும் உள்ளிலுள்ளது" என்ற ஸ்ருதியிருப்பதுபற்றி அதற்கும் உள்ளிலிருப்பதாகவாவதே அதன் காரணமாகும். ஆகவே எல்லாவற்றுக்கும் உள்ளிலிருப்பதும், நித்யமான விக்ஞானத்தை ஸ்வரூபமாகவுடையதும், ஆகாசம்போல அசைவற்ற ஸ்வரூபமுள்ளதும், எல்லாவற்றுக்கும் உள்ளிலுள்ள கர்ப்பத்திலிருப்பதுமான ப்ரம்ஹத்துடன் (தாதாத்ம்யத்தையடைந்தவனும்) அதற்குமாறுபட்ட லக்ஷணம்வாய்ந்தவனும் (அதற்கு) வெளியிலுள்ளவனும் புத்திஸ்வரூபனுமான ஆத்மா (புத்திதாதாத்ம்யாபன்ன ஆத்மா) வானவன் அர்ச்சிஸ்ஸுகளினால்=ஜ்வாலைகளினால் அக்னியானது (அக்ந்யாதாரமான இரும்பு முதலானது) போல உண்டாவதும் அழிவதுமான தர்மங்களுள்ளனவும், விக்ஞாநாபாஸ ஸ்வரூபங்களும், அநித்யங்களுமான புத்திவிருத்திகளினால் அநித்யமான விக்ஞானமுள்ளவனாகவும், சுகியாகவும், துக்கியாகவும், லௌகிகர்களினால் அங்கீகரிக்கப்படுகிறான். ஆனதுபற்றி இவன் நித்யவிக்ஞான ஸ்வரூபனான ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்டவனாகிறான். அவனிடத்தில் விக்ஞானாபேக்ஷையும் விபரீதக்ஞானமும் பொருந்துமே யொழிய நித்யவிக்ஞானாத்மாவினிடத்தில் பொருந்தமாட்டாது.

சங்கை—நித்யவிக்ஞான ஸ்வரூபனாக இருப்பதுபற்றி "தத்த்வமஸி" என்றும், "ஆத்மானமேவ அவேத்' என்ற தாகியுமாக க்ஞானோபதேசஞ் செய்தது பொருந்த மாட்டாது. சூரியன் பிறவற்றினால் பிரகாசப்படுத்தப்பட மாட்டானன்றோ. ஆகவே அதற்கு (அறிவுக்கு) வேண்டி செய்யப்படும் போதவுபதேசமானது பயனற்றதேயாகும் என்கிறோம் எனின்?

अतस्तदर्थबोधोपदेशोऽनर्थक इति चेन्न। लोकाध्यारोपापोहार्थत्वात्। सर्वात्मनि हि नित्यविज्ञाने बुध्याद्यनित्यधर्मा लोकैरध्यारोपिता आत्माविवेकत: तदपोहार्थो बोधोपदेशो बोधात्मन:। तत्र च बोधाबोधौ समञ्जसौ। अन्यनिमित्तत्वादुदक इवौष्ण्यमग्निनिमित्तम्, रात्र्यहनी इवादित्यनिमित्ते लोके नित्यावौष्ण्यप्रकाशावग्न्यादित्ययो: अन्यत्र भावाभावयोर्निमित्तत्वादनित्याविवोपचर्येते—'धक्ष्यत्यग्नि:प्रकाशयिष्यति सवितेति तद्वत्। एवं च सुखदु:खबन्धमोक्षाद्यध्यारोपो लोकस्य। तदपेक्ष्य 'तत्वमसि' 'आत्मानं

---

உத்தரம்—அது பொருந்தாதென்கிறோம். உலகத்தவரால் செய்யப்படும் அத்யாரோப (அத்யாஸ) த்தைப் போக்கவேண்டி அது பயனுள்ளதாக வாகிறது என்கிறோம். நித்யவிக்ஞானனை ஸர்வாத்மாவினிடத்தில் ஆத்மாவைப் பற்றிய பகுத்தறிவின்மை காரணமாக லௌகிகர்களால் புத்தியாதிகளின் அநித்யதர்மங்கள் அத்யாரோபஞ்செய்யப்பட்டிருக்கின்றன. ஆகவே அதைப் போக்கவேண்டி நித்யவிக்ஞான ஸ்வரூபனை ஆத்மாவுக்குப் போதோபதேசமானது வேண்டியே வருகிறது. அன்னிலையில் போதம் அஃதின்மை இரண்டும் ஸமஞ்ஜஸங்களாகவே (பொருந்தக்கூடியவைகளாகவே) யாகின்றன. ஜலத்தில் அக்னிநிமித்தமான சூடுபோலவும், உலகில் ஸூரியனை நிமித்தமாகக்கொண்ட இரவுபகல்கள் போலவும் அவை வேறொன்றை நிமித்தமாகக்கொண்டிருப்பதே அதன் காரணமாகும். நெருப்பு சூரியன் இவ்விரண்டிலும் முறையே சூடும்ப்ரகாசமும் நித்யங்களாகவே இருக்கின்றன. வேறிடத்திலுள்ள * பாவம், அபாவம் இவற்றுக்கு நிமித்தமாக விருப்பதிலிருந்து "அக்னி சுடுகிறது, சூரியன் ப்ரகாசப்படுத்துகிறான்" என்பதாய் அநித்யங்கள் போல உபசார முறையால் கூறப்படுகின்றன என்பது எவ்விதமோ அவ்விதமே தான் லோகத்துக்கு சுகம் துக்கம் பந்தம் மோக்ஷம் முதலியவற்றின் அத்யாஸமேற்படுகிறது. அந்த அத்யாஸத்தை அபேக்ஷித்து "தத்த்வமஸி" "ஆத்மானமேவாவேத்" என்ற சுருதிகள் ஆத்மாவ

---

* வேறுபொருளில் காணப்படும் சூடு, ப்ரகாசம் இவற்றின் பாவத்துக்கும் சூடு ப்ரகாசம் இவற்றின் அபாவத்துக்கும் அக்னியும் சூரியனும் காரணமாக இருப்பதையொட்டி இவ்விதம்கூறப்படுகிறதென்பதுகருத்து.

मेवावेत्' इत्यात्मावबोधोपदेशिन्यः श्रुतयः केवलमध्यारोपापोहार्थाः। यथा सवितासौ प्रकाशयत्यात्मानमिति तद्वद्बोधाबोधकर्तृत्वं च नित्यबोधात्मनि। तस्मादन्यदविदितात्। अधिशब्दश्चान्यार्थे।

यद्वा, यद्धि यस्याधि तत्ततोऽन्यत्सामर्थ्यात्, यथाधि भृत्यादीनां राजा। अव्यक्तमेवाविदितं ततोऽन्यदित्यर्थः। विदितमविदितं च व्यक्ताव्यक्ते कार्यकारणत्वेन विकल्पिते। ताभ्यामन्यद्ब्रह्म विज्ञानस्वरूपं सर्वविशेषप्रत्यस्तमितमित्ययं समुदायार्थः। अत एवात्मत्वान्न हेय उपादेयो वा।

---

போதோபதேசத்திஞல் அத்யாரோபத்தை (அத்யாஸத்தை) நிவிருத்திக்கவேண்டி மட்டும் ஏற்பட்டன. "இந்தச் சூரியன் தன்னை ப்ரகாசப்படுத்துகிறுன்" என்பது எவ்விதமோ அவ்விதமேதானிங்கும் போதம் (க்ஞானம்) அபோதம் (அக்ஞானம்) இவற்றில் கர்த்திருத்வமானது நித்யபோதரூபமான ஆத்மாவினிடத்திலேற்படுகிறது. ஆகவே அவிதிதத்தைக் காட்டிலும் வேறுபட்டதாகவுமாகிறது. மூலத்திலுள்ள अधि (அயி)=என்பது அன்னியம் என்றபொருளில் படிக்கப்படுகிறது.

அல்லது எது எதற்கு अधि (அயி) = மேல்பட்டதோ அது தனது ஸாமர்த்தியத்திஞல் அதற்கு வேறுபட்டதாகவே தாஞகிறது. "भृत्यादीनामधि राजा" ("ப்ருத்யாதீநாமயிராஜா")="வேலைக்காரர் முதலியோர்க்கு அதிகமானவன் ராஜன்" என்றவிடத்தில் அவர்களைக் காட்டிலும் ராஜன் வேறுபட்டவஞகவாவது போலவே இங்குமாகும். அவ்வியக்தமே அவிதிதம் எனப்படும். அதை=அவ்வியக்தத்தைக் காட்டிலும் வேருனது என்பது பொருள். விதிதாவிதிதங்கள் வ்யக்த அவ்யக்தங்களாகும். அவை கார்யம் என்றும், காரணமென்றும் விகல்பிக்கப்படுகின்றன. விக்ஞான ஸ்வரூபமும், எவ்வித விசேஷமுமற்றதுமான ப்ரம்ஹமானது அந்த வ்யக்தாவ்யக்தங்களைக் காட்டிலும் வேறுபட்டது என்பது ஸமுதாயமான (மொத்தமான) மந்திரத்தின் பொருளாக ஏற்படுகிறது. ஆனதுபற்றியே ஆத்மாவாக இருப்பதிலிருந்து விடத்தக்கதாகவோ, எடுக்கத்தக்கதாகவோ ஆவதில்லை. வேருகவுள்ளதன்ருே வேறென்றிஞல் விடத்தக்கதாகவோ எடுக்கத்தக்கதாகவோ ஆகும். தன்ஞலேயே தானே

अन्यद्ध्यन्येन हेयमुपादेयं वा। न तेनैव तद्यस्य कस्यचिद्धेयमुपादेयं वा भवति। आत्मा च ब्रह्म सर्वान्तरात्मत्वात्, अविषयम्। अतोऽन्यस्यापि न हेयमुपादेयं वा। अन्याभावाच्च। 'इति शुश्रुम पूर्वेषाम्' इत्यागमोपदेशः। "व्याचचक्षिरे" इत्यस्वातन्त्र्यं तर्कप्रतिषेधार्थम्। ये नस्तद्ब्रह्मोक्तवन्तः, ते नित्यमेवागमं ब्रह्मप्रतिपादकं व्याख्यातवन्तः न पुनः स्वबुद्धिप्रभवेण तर्केणोक्तवन्त इति आगमपारम्पर्याविच्छेदं दर्शयति विद्यास्तुतये। तर्कस्त्वनवस्थितो भ्रान्तोऽपि भवतीति ॥ ४ ॥

**यद्वाचा......................उपासते ॥ ५ ॥**

யத்வாசா......................உபாஸதே ॥ ௫ ॥

यद्वाचेति मन्त्रानुवादो दृढप्रतीत्यै। "अन्यदेव तद्विदितात्" इति योऽयमागमार्थो ब्राह्मणोक्तोऽस्यैव द्रढिम्ने मन्त्रा यद्वाचेत्यादयः पठ्यन्ते।

---

யாதானுமொன்றுக்கு விடத்தக்கதாகவோ, எடுக்கத்தக்கதாகவோ, ஒருபொழுது மாகமாட்டாதன்றோ? ஸர்வத்துக்கும் ஆந்தரமாக விருப்பதுபற்றி ஆத்மாவே ப்ரம்ஹமாகவாகிறது. அதுமற்றொன்றுக்கு விஷயமாகவாவதுமில்லை. ஆனதுபற்றி பிறவற்றுக்குக்கூட விடத்தக்கதும், எடுக்கத்தக்கதுமன்று. ஆத்மாவைக்காட்டிலும் பிறவொன்று உண்மையில் இல்லாதிருப்பதும் மற்றொருகாரணமாகும். "इति शुश्रुम पूर्वेषाम्" (,,இதி ஶுஶ்ரும பூர்வேஷாம்'')="இவ்விதம் முன்னோர்களிடமிருந்து கேட்டோம்" என்பது சாஸ்திரோபதேசமாகும். மூலத்தில் "व्याचचक्षिरे" (,,வ்யாசசக்ஷிரே'')= "வியாக்கியானஞ்செய்தனர்" என்றது கேவல தர்க்கத்தை மறுக்க வேண்டி இவ்விதமுபதேசிக்க எவனுக்கும் ஸ்வாதந்திரியமில்லை என்பதைக் காட்டுகிறது. அதாவது:—எவர்கள் எங்களுக்கு அந்த ப்ரம்ஹத்தைச் சொல்லினரோ அவர்கள் ப்ரம்ஹத்தைச் சொல்லுகின்ற சாஸ்திரத்தையே எப்பொழுதும் சொல்லினரே அன்றி தனது புத்தியினாலுண்டு பண்ணப்பட்ட தர்க்கத்தினால் சொன்னவர்களன்று என்பதாய் வித்யையைஸ்துதிக்கவேண்டி தொடர்ச்சியாகவே வரும் ஆகமபாரம்பர்யமானது காட்டப்பட்டதாகிறது. தர்க்கமோ நிலைத்து நிற்காததாகவும், ப்ரமத்தினாலேற்பட்டதாகவும் ஆகிறது. (4)

यत्=ब्रह्म, वाचा=शब्देन, अनभ्युदितम्=अनभ्युक्तम्, अप्रकाशितमित्येतत्। येन वागभ्युद्यत इति वाक्प्रकाशहेतुत्वोक्तिः। येन प्रकाश्यत इति वाचः=अभिधानस्याभिधेयप्रकाशकत्वस्य हेतुत्वमुच्यते ब्रह्मणः। उक्तं च "केनेषितां वाचमिमां वदन्ति" "यद्वाचो ह वाचम्" इति। "तदेव ब्रह्म त्वं विद्धि" इत्यविषयत्वेन ब्रह्मण आत्मन्यवस्थापनार्थ आम्नायः। यद्वाचानभ्युदितं वाक्प्रकाशनिमित्तं चेति ब्रह்மணோऽविषयत्वेन वस्त्वन्तरजिघृक्षां निवर्त्य

---

பாஷ்யம்.—"यद्वाचा" ("யத்வாசா") என்ற மந்திரானுவாதமானது திருடமான (உறுதியான) க்ஞானமேற்படவேண்டிச் செய்யப்படுகிறது. "अन्यदेव तद्विदितात्" ("அந்யதேவ தத்விதிதாத்") என்பதாய் யாதொரு ஆகமார்த்தமானது ப்ராம்ஹணத்தினால் சொல்லப்பட்டதோ இதையே உறுதிப்படுத்தவேண்டி "यद्वाचा" ("யத்வாசா") என்றதாதிகளான மந்திரங்கள் படிக்கப்படுகின்றன. எந்த ப்ரம்ஹமானது वाचा (வாசா)=சப்தத்தினால் अनभ्युदितम् (அநப்யுதிதம்)=அநப்யுக்தமோ=அப்ரகாசிதமோ என்பது பொருள். "येन वागभ्युद्यते" ("யேந வாகப்யுத்யதே") என்றதால் வாக்கின் ப்ரகாசத்தில் ப்ரம்ஹத்துக்கு ஹேதுத்வம் சொல்லப்படுகிறது. எத்னால் ப்ரகாசப்படுத்தப்படுகிறதோ என்பதாய் வாக்குக்கு=அபிதானத்துக்கு அபிதேயத்தின்=அர்த்தத்தின், ப்ரகாசகத்தன்மைக்கு ப்ரம்ஹம் ஹேது=காரணம், என்பது சொல்லப்பட்டது. "केनेषितां वाचमिमां वदन्ति" ("கேநேஷிதாம் வாசமிமாம் வதந்தி") என்றும், "यद्वाचो ह वाचम्" ("யத்வாசோ ஹ வாசம்") என்றும் முன்னர் சொல்லப்பட்டது என்றும். "அதையே ப்ரம்ஹமாக நீ அறிந்து கொள்" என்றதால் ப்ரம்ஹம் வாக்குக்கு விஷயமன்று என் ப்ரத்யகாத்மாவில் ஸ்தாபனஞ்செய்யவேண்டி இந்த மந்திரோபதேசமேற்பட்டது. எது வாக்கினால் சொல்லப்படாததோ, என்றும், எது வாக்கின் ப்ரகாசத்துக்கு (வாக்கு தனது அபிதேயத்தை ப்ரகாசப்படுத்துவதற்கு) நிமித்தமாக வாகிறதோ என்றும் சொன்னதிலிருந்து ப்ரம்ஹம் விஷயமன்று என்று கூறி வேறுபொருளைக் கிரஹிக்கும் எண்ணத்தை விலக்கி இந்த மந்திரமானது சொந்த ப்ரத்யகாத்மாவினிடத்திலேயே நிலை நிறுத்தி அதையே நீ ப்ரம்ஹமாக அறிந்துகொள் என்பதாய் முயற்சியுடன் முடித்திருக்கிறது.

स्वात्मन्येवावस्थापयत्याम्नाय स्तदेव ब्रह्म त्वं विद्धीति यत्तत उपरमयति, नेदमित्युपास्यप्रतिषेधाच्च ॥ ५ ॥

**यन्मनसा न मनुते............उपासते ॥ ६ ॥**

யந்மநஸா ந மநுதே..........உபாஸதே ॥ சு ॥

**यच्चक्षुषा....................उपासते ॥ ७ ॥**

யச்சக்ஷுஷா....................உபாஸதே ॥ எ ॥

**यच्छ्रोत्रेण....................उपासते ॥ ८ ॥**

யச்ச்ரோத்ரேண....................உபாஸதே ॥ அ ॥

**यत्प्राणेन....................उपासते ॥ ९ ॥**

யத்ப்ராணேந....................உபாஸதே ॥ கூ ॥

इति प्रथमः खण्डः ॥

यन्मनसेत्यादिसमानम् । मनोमतमिति येन ब्रह्मणा मनोऽपि विषयीकृतं नित्यविज्ञानस्वरूपेणेत्येतत् । सर्वकरणानामविषयं, तानि च सव्यापाराणि सविषयाणि, नित्यविज्ञानस्वरूपावभासतया येनावभास्यन्त इति श्लोकार्थः । "क्षेत्रं क्षेत्री तथाकृत्स्नं प्रकाशयति" इतिस्मृतेः । 'तस्य

---

"नेदं यदिदमुपासते" ("நேதம் யதிதமுபாஸதே") என உபாஸ்யத்தக்கு ப்ரம்ஹத்வநிஷேதம் செய்திருப்பதும் மற்றொருகாரணமாகும்.

பாஷ்யம்:—यन्मनसा (யந்மநஸா) என்றதாதிகளுக்கு முன்போலவே பொருள் கொள்ளவேண்டும். "मनो मतम्" ("மநோமதம்") என்பதற்கு எந்த ப்ரம்ஹத்தினால் நித்யமான விக்ஞானஸ்வரூபத்தினால் மனஸ்ஸும் கூட விஷயீகரிக்கப்பட்டதோ என்பது பொருள். வியாபாரத்துடன் கூடினவைகளும் விஷயங்களுடன் கூடினவைகளுமான அந்த இந்திரியங்கள், நித்யவிக்ஞானஸ்வரூபாவபாஸரூபமாயிருப்பதால் எந்தப்ரம்ஹத்தினால் ப்ரகாசப்படுத்தப்படுகின்றனவோ (அந்த ப்ரம்ஹம்) எல்லாக் கரணங்களுக்கும் விஷயமாகவாகாதது என்பது இந்த மந்திரங்களின் பொருள். "எல்லா க்ஷேத்திரங்களையும் க்ஷேத்ரியான ப்ரம்ஹம் ப்ரகாசப்படுத்துகிறது", என ஸ்மிருதியு மிருக்கிறது. "அதனுடைய ஸ்வரூபத்தை தன்னியத்

भासा' इति चाथर्वणे। येन प्राण इति क्रियाशक्तिरप्यात्मविज्ञाननिमित्ते-त्येतत् ॥ ६-९ ॥

इति श्रीगोविन्दभगवत्पूज्यपादशिष्यस्य परमहंसपरिव्राजकाचार्यस्य श्रीमच्छङ्करभगवतः कृतौ केनोपनिषद्वाक्यभाष्ये प्रथमः खण्डः समाप्तः ॥ १ ॥

## अथ द्वितीयः खण्डः ॥

**यदिमन्यसे सुवेदेति......मन्ये विदितम् ॥ १ ॥**

யதிமந்யஸே ஸுவேதேதி...மந்யே விதிதம் ॥ க ॥

**नाहमन्ये.........................वेद च ॥ २ ॥**

நாஹமந்யே.........................வேத³ ச ॥ உ ॥

यदि मन्यसे सुवेदेति शिष्यबुद्धिविचालना गृहीतस्थिरतायै। विदिताविदिताभ्यां निवर्त्य बुद्धिं शिष்यस्य स्वात्मन्यवस्थाप्य 'तदेव ब्रह्म त्वं

---

தினல் இவையாவும் ப்ரகாசிக்கிறது'' என ஆதர்வண உபநிடதத்தி லும் சொல்லப்படுகிறது. "येन प्राण:" ("யேந ப்ராண:") என்ற தால் க்ரியாசக்தியும் ஆத்மவிக்ஞானத்தை நிமித்தமாகக்கொண்டது எனச் சொல்லப்படுகிறது. (6, 7, 8, 9) (எ—று)

இவ்விதம் ஸ்ரீகோவிந்த பகவத்பூஜ்யபாத சிஷ்யரும் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசாரியருமான ஸ்ரீமத்சங்கரபகவத்பாதர் அவர் களின் கிருதியான கேனோபநிடதத்தின் வாக்யபாஷ் யத்தில் முதலாவது கண்டம் முற்றிற்று.

## இரண்டாவது கண்டம்.

பாஷ்யம். — உபதேசிக்கப்பெற்றதை ஸ்திரப்படுத்தவேண்டி यदिमन्यसे सुवेद (யதிமந்யஸே ஸுவேத) என்றதனல் சிஷ்யனுடைய புத்தியானது பரீக்ஷிக்கப்படுகிறது. சிஷ்யனுடைய புத்தியை விதி தம் அவிதிதம் இவற்றினிடமிருந்து திருப்பி ஸ்வாத்மாவினிடத்தில்

विद्धि' इति स्वाराज्येऽभिषिच्य उपास्यप्रतिषेधेन, अथास्य बुद्धिं विचालयति—यदि मन्यसे सुवेदाहं ब्रह्मेति त्वं ततोऽल्पमेव ब्रह्मणो रूपं वेत्थ त्वमिति नूनम्=निश्चितं मन्यत इत्याचार्यः। सा पुनर्विचालना किमर्थेति? उच्यते। पूर्वगृहीते वस्तुनि बुद्धेः स्थिरतायै। देवेष्वपि सुवेदाहमिति मन्यते यः, सोप्यस्य ब्रह्मणो रूपं दहरमेव वेत्ति नूनम्। कस्मात्? अविषयत्वात्कस्यचिद्ब्रह्मणः। अथवा अल्पमेवास्याध्यात्मिकं मनुष्येषु, देवेषु च आधिदैविकमस्य ब्रह्मणो यद्रूपं तदितिसंबन्धः। अथन्विति हेतुर्मीमांसायाः। यस्माद्दहरमेव सुविदितं ब्रह्मणो रूपं, अन्यदेवतद्विदितादित्युक्तत्वात्सुवेदेति

---

ஸ்தாபித்து "அதையே ப்ரம்ஹமாக நீ அறிந்துகொள்" என்றதனுல் உபாஸ்யத்தைமறுக்கும் வாயிலாக ஸ்வாராஜ்யத்தில் அபிஷேகஞ் செய்து வைத்துப் பிறகு "நன்கு நான் ப்ரம்ஹத்தை யறிவேன்" என நீ எண்ணுவாயேல் அதிலிருந்து 'அற்பமாகவே ப்ரம்ஹத்தின் ரூபத்தை நீ அறிந்தவனுகின்ருய் என்பது நிஶ்சயம் என ஆசிரியர் எண்ணுகிருர்' என்பதாய் அச்சீடனுடைய புத்தியை அசைத்துப் (பரீக்ஷித்துப்) பார்க்கிருர். அவ்விதம் அசைத்துப்பார்ப்பது எதற்கு எனின்? முன்னர் கிரஹிக்கப்பட்டவஸ்துவில் புத்தியை ஸ்திரப்படுத்தவேண்டியே எனச் சொல்லப்படுகிறது. தேவர்களிலுங் கூட எவனெருவன் "நன்கு நானறிவேன்" என வெண்ணுகிருனே அவனுங்கூட இந்த ப்ரம்ஹத்தினுடைய ரூபத்தை அற்பமாகவே தான் அறிந்தவனுகிருன். நிஶ்சயமிது. ஏன்? ப்ரம்ஹம் ஒன்றுக்கும் விஷயமாக வில்லாதிருப்பதே அதன் காரணமாகும். அல்லது மனிதர்களிடத்தில் ஆத்யாத்மிகமான இந்தப்ரம்ஹத்தினுடைய எந்த அற்பமான ரூபமுண்டோ தேவர்களிடத்தில் ஆதிதைவிகமான இந்த ப்ரம்ஹத்தினுடைய எந்த ரூபமுண்டோ அதையே யறிந்தவனுகவாகிருன் என ஸம்பந்தப்படுத்திக் கொள்ளவேண்டும். மூலத்திலுள்ள अथनु(அதனு)என்பது விசாரத்துக்கு ஹேதுவைச்சொல்லுகிறது. "अन्यदेव तद्विदितात्" ("அந்யதேவ தத்விதிதாத்") என்று சொல்லப்பட்டிருப்பதால் அற்பமாகவே அறியப்பட்ட ப்ரம்ஹத்தினுடையரூபத்தை யாதுகாரணத்தால் "நன்கு அறிவேன்" எனவெண்ணுகின்றனேயோ அக்காரணத்தால் அற்பமாகவே ப்ரம்ஹத்தின் ரூபத்

च मन्यसे, अतोऽल्पमेव वेत्थ त्वं ब्रह्मणोरूपं यस्मादथनु, तस्मान्मीमांस्यमेवाद्यापि तेऽतव, ब्रह्म विचार्यमेव यावद्विदिताविदितप्रतिषेधागमार्थानुभव इत्यर्थः। मन्ये विदितमिति शिष्यस्य मीमांसानन्तरोक्तिः प्रत्ययत्रयसङ्गतेः। सम्यग्वस्तुनिश्चयाय विचालितः शिष्य आचार्येण मीमांस्यमेव त इति चोक्तः एकान्ते समाहितो भूत्वा विचार्य यथोक्तं सुपरिनिश्चितस्सन् आह आगमाचार्यात्मानुभवप्रत्ययत्रयस्यैकविषयत्वेन सङ्गत्यर्थम्। एवं हि सुपरिनिष्ठिता विद्या सफला स्यान्नानिश्चितेति न्यायः प्रदर्शितो भवति। मन्ये विदितमिति परिनिष्ठितनिश्चितविज्ञानप्रतिज्ञा, हेतूक्तेः। परिनिष्ठितं सफलं विज्ञानं प्रतिजानीत आचार्यात्मनिश्चययोस्तुल्यतायै, यस्माद्धेतुमाह—नाह मन्ये सुवेदेति।

---

*தை நீ யறிந்தவனாகிறாய். ஆனதுபற்றி இப்பொழுதுங்கூட உனக்கு பரம்ஹமானது விதிதம் அவிதிதம் இவற்றை மறுக்கின்ற சாஸ்திரார்த்தானுபவம் வரும்வரை விசாரிக்கவேண்டியதாகவேதானாகிறது என்பது பொருள்.* **मन्ये विदितम्** *(உறைந்து விதிதம்) என்பது மூன்று விதமான அறிவுகளின் ஒத்துமையைமுன்னிட்டு விசாரித்த பிறகு சொல்லும் சிஷ்யனுடைய வார்த்தையாகும். அதாவது:—நன்கு வஸ்துநிஸ்சயம் ஏற்படவேண்டி ஆசிரியரால் அசைக்க (பரீக்ஷிக்க)ப்பட்டவனும், உனக்கு விசாரிக்கவேண்டுவதாகவேதான் ப்ரம்ஹமிருக்கிறது என்று சொல்லப்பட்டவனுமான சிஷ்யன் ஏகாந்தத்தில் (தனித்தவிடத்தில்) மனதை ஒருமுகப் படுத்திக்கொண்டவனாக இருந்து உபதேசிக்கப்பட்டபடி விசாரித்து நன்கு நிஸ்சயத்தையடைந்தவனாய்க்கொண்டு சாஸ்திரம், ஆசாரியன், அனுபவம் இவை மூலமேற்படும் மூன்றுவிதமான அறிவுக்கும் ஒன்றையே விஷயமாக்கொண்டிருக்கும்படி ஒத்துமையைக் காட்டவேண்டி சொல்லுகிறான். இதிலிருந்து இவ்விதம் பரிநிஷ்டிதமான=பரிபக்குவ நிலைக்குக் கொண்டுவரப்பட்ட, வித்யை ஸபலமாகவாகுமேயொழிய இவ்விதம் நிஸ்சயிக்கப்படாத வித்யை யாகாது என்ற நியாயமானது காட்டப்பட்டதாகவாகிறது.*

**मन्ये विदितम्** *(உறைந்து விதிதம்) என்றதால் பரிநிஷ்டிதமும், நிஸ்சிதமுமான விக்ஞானத்தின் ப்ரதிக்ஞைசெய்யப்படுகிறது. ஏன்?*

अहेत्यवधारणार्थो निपातः, नैवमन्य इत्येतत्। यावदपरिनिष्ठितं विज्ञानं तावत्सुवेद सुष्ठुवेदाहं ब्रह्मेति विपरीतो मम निश्चय आसीत्। सोऽपजगाम भवद्भिर्विचालितस्य यथोक्तार्थमीमांसाफलभूतात्स्वात्मब्रह्मत्व-निश्चयरूपात्सम्यक्प्रत्ययात्। विरुद्धत्वात्। अतो नाहमन्ये सुवेदेति, यस्माच्च तन्नैव नवेदेति, मन्य इत्यनुवर्तते। अविदित ब्रह्मप्रतिषेधात्। कथं तर्हि मन्यस इत्युक्त आह—वेद च। च शब्दाद्वेद च न वेद चेत्यभिप्रायः।

---

பின்னர் காரணம் கூறியிருப்பதாலெனக. அதாவது:—பரிநிஷ்டிதமும் ஸபலமுமான விக்ஞானத்தை, ஆசாரியனுடையவும், தன்னுடையவுமான நிஸ்சயங்களுக்கு ஒத்துப்பார்க்கவேண்டி मन्ये विदितम् (மந்யே விதிதம்) என்றதால் சிஷ்யன் ப்ரதிக்ஞைசெய்கிறான். "नाह मन्ये सुवेद" ("நாஹ மந்யே ஸுவேத") என அதற்கு ஹேதுவைச் சொல்லுவதாலெனக. नाह (நாஹ) என்றவிடத்திலுள்ள अह (அஹ) என்பது அவதாரணத்தை (தேற்றத்தை)ப் பொருளாகக்கொண்ட நிபாதமாகும். ஆகவே नैवमन्ये (நைவமந்யே)=எண்ணவே இல்லை என்ற பொருள் ஸித்திக்கிறது. எதுவரை அபரிநிஷ்டிதமான விக்ஞானமானது இருந்ததோ, அதுவரை सुवेद (ஸுவேத)=நன்கு அறிவேன் ப்ரம்ஹத்தை என்ற மாறான நிஸ்சயமானது எனக்கு இருந்தது. இதுவரை சொல்லப்பட்ட பொருளைப்பற்றிய விசாரத்தின் பலனாகவானதும், சொந்த ப்ரத்யகாத்மாவுக்கு ப்ரம்ஹத்தன்மையை நிஸ்சயஞ்செய்வதுமான உண்மையான க்ஞானத்தினால் உங்களால் அசைக்கப்பட்ட எனக்கு அந்த மாறான நிஸ்சயமானது விலகிவிட்டது. ஏன்? உண்மை க்ஞானத்துக்கு விபரீதக்ஞானமானது விரோதப்படுவதே அதன் காரணமாகும். न वेद (ந வேத) என்றவிடத்தில் मन्ये (மந்யே) என்பதையும் சேர்த்துக்கொள்ளவேண்டும். ஆகவே யாதுகாரணத்தால் ப்ரம்ஹத்தை அறியவில்லை என்றும் எண்ணவேமாட்டேனே அக்காரணத்தால் நன்கு அறிவேன் என்றும் எண்ணவேமாட்டேன். அவிதிதம்=அறியப்படாதது ப்ரம்ஹம் என்பதைச் சாஸ்திரம் மறுத்திருப்பதே அதன் காரணமாகும். அப்படியானால் 'எப்படி எண்ணுகின்றாய்' என ஆசிரியரால் சொல்லப்பட்ட சிஷ்யன் "वेद च" ("வேத ச") என்று சொல்லுகிறான். இங்கு च (ச) என்ற சப்தமிருப்பதால் அறியவும் அறிவேன், அறியவும்

**विदिताविदिताभ्यामन्यत्वाद्ब्रह्मणः। तस्मान्मया विदितं ब्रह्मेति मन्य इति वाक्यार्थः। अथवा—वेदचेति नित्यविज्ञान ब्रह्मस्वरूपतया, नोनवेद वेदैव चाहं, स्वरूपविक्रियाभावात्। विशेषविज्ञानं च पराध्यस्तं न स्वत इति परमार्थतो नच वेदेति। यो नस्तद्वेद तद्वेदेति पक्षान्तरनिरासार्थमाम्नायः, उक्तार्थानुवादात्। यो नोऽस्माकं मध्ये स एव तद्ब्रह्म वेद नान्यः उपास्य ब्रह्मवित्त्वादतोऽन्यस्य, यथा—अहं वेदेति। वेदचेति पक्षान्तरे ब्रह्मवित्त्वं**

---

மாட்டேன் என்பது கருத்து. ப்ரம்ஹமானது **विदितम्** (விதிதம்)= அறியப்பட்டது. **अविदितम्** (அவிதிதம்)=அறியப்படாதது இவற்றைக்காட்டிலும் வேறுகவிருப்பதால் என்க. அக்காரணம்பற்றி என்னுல் ப்ரம்ஹம் அறியப்பட்டிருக்கலாமெனவெண்ணுகிறேன் என வாக்யார்த்தமேற்படுகிறது.

அல்லது **वेद च** (வேத ச) என்றதால் நித்யவிக்ஞான ப்ரம்ஹ ஸ்வரூபமாக என்னை அறிவேன். **नो न वेद** (நோ ந வேத)=அறியவில்லை என்பது இல்லை. ஸ்வரூபத்தில் விக்ரியை எதுவுமில்லாமையால் அறியவே அறிவேன். (அந்தக்கரண பரிணமரூபமான) விசேஷவிக்ஞானமானது ஆத்மாவைக்காட்டிலும் வேறுபட்ட அந்தக்கரணத்தினுல் ஆத்மாவினிடத்தில் ஆரோபிக்கப்பட்டதேயொழிய இயற்கையில் அது உண்மையாக ஆத்மாவினிடத்தில் கிடையாது. ஆகவே நான் **न च वेद** (ந ச வேத)=ஜன்யக்ஞானமுள்ளவனன்று. **यो नस्तद्वेद तद्वेद** (யோ நஸ்தத்வேத தத்வேத) என்றது வேறுபக்ஷத்தை நிராகரணஞ்செய்யவேண்டிய மந்திரமாகும். ஏன்? சொல்லப்பட்ட பொருளையே இந்த வாக்கியம் அனுவாதம் செய்வதா (திருப்பிக் கூறுவதா) லென்க. எங்கள் மத்தியிலுள்ளவன் எவனோ அவன் அந்த ப்ரம்ஹத்தையறிவானேயன்றி மற்றவனறியான். ஏன்? நான் ப்ரம்ஹத்தை உள்ளபடி அறிவேன் என்பதாய் எண்ணும் இவனைக் காட்டிலும் மற்றவன் உபாஸ்யமான (உபாஸனம் என்ற மானஸ க்ரியைக்கு விஷயமான) ப்ரம்ஹத்தை உபாஸிப்பவனுகவிருப்பதாலென்க. **वेद च** (வேத ச) என்ற வேறுபக்ஷத்தில் ப்ரம்ஹ வித்துவமானது எவ்விதம் மறுக்கப்படுகிறதோ அவ்விதமே இங்கும் நானறிவேன் என்பதும் மறுக்கப்பட்டதாகக் காண்க. எதனுல் இந்தப் பொருள் நிஸ்சயிக்கப்படுகிறது எனின்? சொல்லப்படுகிறது—சொல்

निरस्यते। कुतोऽयमर्थोऽवसीयत इति? उच्यते—उक्तानुवादात्। उक्तं ह्यनुवदति—"नो न वेदेति वेद च" इति ॥ १–२ ॥

**यस्यामतं..............अविजानताम् ॥ ३ ॥**

யஸ்யாமதம்..................அவிஜாநதாம் ॥ ௩ ॥

**यस्यामतमिति श्रौतमाख्यायिकार्थोपसंहारार्थम्। शिष्याचार्योक्तिप्रत्युक्तिलक्षणयाऽनुभवयुक्तिप्रधानयाऽऽख्यायिकया योऽर्थस्सिद्धः स श्रौतेन वचनेनागमप्रधानेन निगमनस्थानीयेन संक्षेपत उच्यते। यदुक्तं विदितादन्यद्वागादीनामगोचरत्वात्, मीमांसितं चानुभवोपपत्तिभ्यां ब्रह्म, तत्तथैव ज्ञातव्यम्। कस्मात्? यस्यामतं, यस्य=विविदिषाप्रयुक्तप्रवृत्तस्य साधकस्य, अमतम्=अविज्ञातमविदितं ब्रह्मेत्यात्मत्वनिश्चयफलावसानावबोधतया वि-**

---

லப்பட்டதை அனுவாதஞ்செய்வதே அதன் காரணமாகும். **नो न वेद** (நொ ந வெத)=அறியவில்லை என்பதில்லை என்றும், **वेद च** (வெத ச)=அறியவும் செய்வேன் என்றுமாகச்சொல்லப்பட்ட பொருளையேயன்றோ திரும்பவும் ஶ்ருதி அனுவதிக்கிறது என்றும்.

பாஷ்யம்.—**यस्यामतम्** (யஸ்யாமதம்) என்பது இதுவரை சொன்ன கதையை முடிக்கவேண்டிய ஶ்ருதியின் வசனமாகும். அதாவது:—சிஷ்யனுடைய கேள்வி ஆசாரியனுடைய பதில் இவை ரூபமானதும், அனுபவம், யுக்தி இவற்றை ப்ரதானமாகக் கொண்டதுமான கதையினால் எந்தப் பொருள் நிஶ்சிதமாகக் கிடைத்ததோ அது சாஸ்திரத்தை ப்ரதானமாகக் கொண்டதும், முடிவுகூறும் முறையிலுள்ளதுமான சுருதியிலுள்ள வசனத்தினால் சுருக்கமாகச் சொல்லப்படுகிறது. வாகாதிகளுக்குக் கோசரமாக இல்லாததுபற்றி விதிதத்தைக்காட்டிலும் வேறுபட்டது என்று எது சொல்லப்பட்டதோ, எது அனுபவம், யுக்தி இவைகளினால் விசாரிக்கப்பட்டதோ, அந்த ப்ரம்ஹமானது அப்படியேதான் அறிந்துகொள்ளத்தக்கது என்றும். ஏன்? **यस्यामतम्** (யஸ்யாமதம்)=**यस्य** (யஸ்ய)=வேதனேச்சாப்ரயுக்தமான ப்ரவிருத்தியுள்ள எந்தஸாதகனுக்கு (அதிகாரிக்கு) **अमतम्** (அமதம்)=அவிக்ஞாதம்=அவிதிதம் ப்ரம்ஹம் என்பதாய் ஆத்மத்வநிஶ்சயமாகிற பலத்தை அவஸான (முடிவு) மாயுடைய அவ

**विविदिषा निवृत्तेत्यभिप्राय:। तस्य मतं=ज्ञातं तेन विदितं ब्रह्म येनाविषयत्वेनात्मत्वेन प्रतिबुद्धमित्यर्थ:। स सम्यग्दर्शी यस्य विज्ञानानन्तरमेव ब्रह्मात्मभावस्यावसितत्वात्सर्वत: कार्याभाव:, विपर्ययेण मिथ्याज्ञानो भवति। कथम्? मतं=विदितं ज्ञातं मया ब्रह्मेति यस्य विज्ञानं स मिथ्यादर्शी विपरीतविज्ञान: विदितादन्यत्वाद्ब्रह्मण:, न वेद स:, न विजानाति। ततश्च सिद्धमवैदिकस्य विज्ञानस्य मिथ्यात्वं अब्रह्मविषयतया निन्दितत्वात्। तथा कपिलकणभुगादिसमयस्यापि विदितब्रह्मविषयत्वादनवस्थिततर्कजन्यत्वात् विविदिषाऽनिवृत्तेश्च मिथ्यात्वमिति। स्मृतेश्च—**

---

போதம் (அறிவு) ஏற்பட்டிருப்பதால் விவிதிஷையானது (அறிய வேண்டுமென்ற எண்ணமானது) நிவிருத்தியை யடைந்ததோ என்பது கருத்து. **तस्य** (தஸ்ய)=அவனுக்கு **मतम्** (மதம்)=க்ஞாதமாகிறது. அதாவது:—எவனால் **अविषयत्वेन** (அவிஷயத்வேந)=விஷயமாகவாகாமலும், **आत्मत्वेन च** (ஆத்மத்வேந ச)=ப்ரத்யகாத்மத்தன்மையினாலும் ப்ரம்ஹம் அறியப்பட்டதாகவாகிறதோ அவனால் அது அறியப்பட்டதாக வாகிறது என்பது பொருள். எவனுக்கு விக்ஞானம் வந்த அடுத்தநிமிஷத்திலேயே ப்ரம்ஹாத்மபாவமானது நிலைத்துவிட்டபடியால் எல்லாவழியிலும் கார்யாபாவமேற்படுகிறதோ அவன் ஸம்யக்தர்சனமுள்ளவனாகிறான். இதற்குமாறானவன் மித்யாக்ஞானமுள்ளவனாகிறான். எவ்விதம் எனின்? கூறுவாம்— **मतम्** (மதம்)=**विदितम्** (விதிதம்)=என்றால் ப்ரம்ஹமானது அறியப்பட்டது என எவனுக்கு எண்ணமுண்டாகிறதோ அவன் விபரீதக்ஞானமுள்ள மித்யாதர்சியாவான். ப்ரம்ஹம் அறியப்பட்டதைக் காட்டிலும் அன்னியமாக (வேறாக) இருப்பதே அதன் காரணமாகும். ஆகவே **न वेद** (ந வேத)=அவன் ப்ரம்ஹத்தை யறியமாட்டான். அதனின்றும் அவைதிகமான க்ஞானம் மித்யை என்றேற்படுகிறது. அது ப்ரம்ஹமில்லாததை விஷயமாகக்கொண்டிருப்பதால் நிந்திக்கப்பட்டிருப்பதுபற்றியே என்க. அவ்விதமே கபிலர், கணாதர் முதலியோரின் ஸித்தாந்தமானது விதித(க்ஞானவிஷய)மான ப்ரம்ஹத்தை விஷயமாகக் கொண்டிருப்பதாலும், நிலைபெறாத தர்க்கத்தினின்றுமுண்டாகி யிருப்பதாலும், விவிதிஷா (வேதநேச்சை) நிவிருத்தியை

या वेदबाह्यास्स्मृतयो याश्च काश्च कुदृष्टय:।
सर्वास्ता निष्फला: प्रोक्तास्तमोनिष्ठा हि तास्स्मृता:॥ इति,

(विपरीतमिथ्याज्ञानयोरनष्टत्वादिति) "अविज्ञातं विजानतां विज्ञातमविजानताम्" इति पूर्वहेतूक्ति:, अनुवादस्यानर्थक्यात्। अनुवादमात्रेऽनर्थकं वचनमिति पूर्वोक्तयो: "यस्यामतम्" इत्यादिना ज्ञानाज्ञानयोर्हेत्वर्थत्वेनेदमुच्यते। अविज्ञातमविदितमात्मत्वेनाऽविषयतया ब्रह्म विजानतां यस्मात्तस्मात्तदेव ज्ञानं यत्तेषाम्। विज्ञातं विदितं, व्यक्तमेव बुद्ध्यादिविषयं ब्रह्म विजानतां विदिताविदितव्यावृत्तमात्मभूतं नित्यविज्ञानस्वरूपमात्मस्थ-

---

யடையாததாலும் பொய்யானதென்றே ஏற்படுகிறது. "வேதபாஹ்யங்களான ஸ்மிருதிகள் எவைகளோ, குதிருஷ்டிகள் (விபரீதக்ஞானங்கள்) எவைகளோ, அவையாவும் பயனற்றவைகளெனச் சொல்லப்பட்டன. அவைகள் அக்ஞானத்தில் முடிவுபெறுகின்றனவாகவன்றோ எண்ணப்பட்டன" என ஸ்மிருதியுமிருக்கிறது. (விபரீதக்ஞானம், மித்யாக்ஞானம் இரண்டும் நஷ்டமாக ஆகாததே அதன் காரணமாகும்.) மூலத்தில் अविज्ञातं विजानतां विज्ञातमविजानताम् (அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாதமவிஜாநதாம்) என்பது यस्यामतम्......न वेद स: (யஸ்யாமதம்.........ந வேத ஸ:) என்ற முதல் பாதியால் சொல்லப்பட்டதற்கு காரணம் கூறுகிறது. அனுவாதமாக (முன்சொன்னதையே திருப்பிச்சொல்லுவதாக) ப்பொருள் கொண்டால் அது பயனற்றதாகவாகிவிடும். அதாவது:—அனுவாதமாக (சொன்னதையே திரும்பவும் சொல்லுவதாக) மட்டும் இருக்கும் பக்ஷத்தில் அவ்வித அனுவாதவசனமானது எவ்விதப் பயனுமற்றதாகவாகும் என்பது பற்றி முன்னர் यस्यामतम् (யஸ்யாமதம்) என்றதாதியால் சொல்லப்பட்ட க்ஞானம் அக்ஞானம் இவற்றுக்கு ஹேது (காரணம்) கூறவேண்டி இது [अविज्ञातं विजानताम् (அவிஜ்ஞாதம் விஜாநதாம்) என்றதாதியானது] சொல்லப்படுகிறது. அதாவது:—யாதுகாரணத்தால் ஆத்மாவாகவும், விஷயமாகவாகாததாகவும் ப்ரம்ஹத்தை யறிபவர்களுக்கு அது அவிக்ஞாதமாக=அறியப்படாததாகவாகிறதோ அக்காரணத்தால் அவர்களின் க்ஞானம் ஏதோ அதுவே உண்மையான ப்ரம்ஹக்ஞானமாகும். अविजानताम्

मविक्रियममृतमजरमभयमनन्यत्वादविषयमित्येवमविजानतां बुद्ध्यादिविषयात्मतयैव नित्यं विज्ञातं ब्रह्म। तस्माद्विदिताविदितव्यक्ताव्यक्तधर्माध्यारोपेण कार्यकारणभावेन सविकल्पमयथार्थविषयत्वात् शुक्तिकादौ रजताद्यध्यारोपणज्ञानवन्मिथ्याज्ञानं तेषाम् ॥ ३ ॥

**प्रतिबोधविदितं...........विन्दतेऽमृतम् ॥ ४ ॥**

ப்ரதிபோதவிதிதம்.........விந்ததேऽம்ருதம் ॥ ௪ ॥

प्रतिबोधविदितमिति वीप्सा, प्रत्ययानामात्मावबोधद्वारत्वात्, बोधं प्रति बोधं प्रतीति। वीप्सा सर्वप्रत्ययव्याप्त्यर्था। बौद्धा हि सर्वे प्रत्ययाः

---

(அவிஜாநதாம்)=விதிதம் அவிதிதம் இவற்றைக்காட்டிலும் வேறுபட்டதாகவும், ஆத்மபூதமாகவும் நித்யவிக்ஞானஸ்வரூபமாகவும், தனது ஸ்வரூபத்திலேயே இருப்பதாகவும், அவிக்ரியமாகவும், அம்ருதமாகவும், அஜரமாகவும், அபயமாகவும் அன்யமாக இல்லாதிருப்பதுபற்றி அவிஷயமாகவும் ப்ரம்ஹத்தையறியாதவர்க்கு **विज्ञातम्** (விஜ்ஞாதம்)= விதிதமாக = வ்யக்தமாக = புத்தியாதி விஷயமாகவே ப்ரம்ஹமாகிறது. அதாவது:—புத்தியாதிகளுக்கு விஷயமான ஆத்மரூபமாகவே ப்ரம்ஹம் எப்பொழுது மறியப்பட்டதாக வாகிறது. ஆனதுபற்றி விதிதமென்றும் அவிதிதமென்றும், வ்யக்தமென்றும் அவ்யக்தமென்றுமான தர்மங்களை ஆரோபணஞ்செய்வதனுலும் காரியகாரணபாவத்தினுலும் ஸவிகல்பமாக (கல்பிததர்மமுள்ளதாக) வாகிப் பொய்யானவற்றை விஷயமாகக் கொண்டிருப்பதுபற்றி சுக்தியாதிகளில் ரஜதாத்யாரோபணஞ்செய்யும் க்ஞானமானதுபோல அவர்களுக்கேற்பட்ட க்ஞானமானது மித்யாக்ஞானமாகவே ஆகிறது.

பாஷ்யம்.—ப்ரத்யயங்கள் (புத்திவிருத்திகள்) ஆத்மப்ரகாசத்துக்கு ஹேதுவாகவாவதால் **प्रतिबोधविदितम्** (ப்ரதிபோதவிதிதம்) என்பது **वीप्सा** (வீப்ஸா)=இரண்டுதடவை சொல்லவேண்டியதாக வாகும். அதாவது:—* **बोधं प्रति बोधं प्रति** (போதம் ப்ரதிபோ

---

* प्रति बोधम् (ப்ரதி போதம்) என்றதை बोधं प्रति, बोधं प्रति (போதம் ப்ரதிபோதம் ப்ரதி) என்று இரண்டுதடவைபடிப்பது வீப்ஸை எனப்படும்.

तप्तलोहवन्नित्यविज्ञानस्वरूपात्मव्याप्तत्वाद्विज्ञानस्वरूपावभासाः, तदन्यावभासश्चात्मा तद्विलक्षणोऽग्निवदुपलभ्यत इति तेन ते द्वारीभवन्त्यात्मोपलब्धौ। तस्मात्प्रतिबोधावभासप्रत्यगात्मतया यद्विदितं तद्ब्रह्म। तदेव मतं ज्ञातम्। तदेव सम्यग्ज्ञानवत्प्रत्यगात्मविज्ञानं, न विषयविज्ञानमात्मत्वेन। "प्रत्यगात्मानमैक्षत्" इति च काठके। "अमृतत्वं हि विन्दते" इति हेतुवचनम्, विपर्यये मृत्युप्राप्तेः। विषयात्मविज्ञाने हि मृत्युः प्रारभत इत्यात्मविज्ञानममृतत्वनिमित्तमिति युक्तं हेतुवचनममृतत्वं हि विन्दते इति। आत्मज्ञानेन

---

யம் வ்ருத்தி)=(ஒவ்வொருபுத்திவிருத்திதோறும்) என்றும். இந்த வீப்ஸையானது எல்லாப்ரத்யயங்களிலும்(புத்திவிருத்திகளிலும்)நிறைவு ஏற்படவேண்டி சொல்லப்பட்டது. புத்தியிலுண்டாகின்ற எல்லா விருத்திகளும் பழுக்கக்காய்ச்சப்பட்ட இரும்புபோல நித்யவிக்ஞான ஸ்வரூபனான ஆத்மாவின் நிறைவு பெற்றிருப்பதால் விக்ஞானஸ்வரூபம் போலத் தோற்றத்தை யடைகின்றன. அந்தப்புத்திவிருத்திகளை விடவேறான ப்ரகாசத்தையுடைய ஆத்மா அவற்றுக்கு (காய்ச்சின இரும்புக்கு) விலக்ஷணமான (மாறுபட்டதான) நெருப்புப் போல அறியப்படுகிறது. ஆனதுபற்றி அந்தப் புத்திவிருத்திகள் ஆத்மோபலப்தியில் த்வாரங்களாக (காரணங்களாக) வாகின்றன. ஆகவே ஒவ்வொரு புத்திவிருத்திக்கும் ப்ரகாசத்தைத்தரும் ப்ரத்யகாத்மத்தன்மையினால் எது அறியப்பட்டதோ அது ப்ரம்ஹம். அதுவே मतम् (மதம்)=க்ஞாதமாகும். அதுவே ஸம்யக்க்ஞானமுள்ள ப்ரத்யகாத்மக்ஞானமாகுமேயொழிய ஆத்மத்தன்மையுடனேற்படும் விஷயவிக்ஞானமாகமாட்டாது. "ப்ரத்யகாத்மாவை ஸாக்ஷாத்கரித்தானே" எனக்கடோபநிடதத்திலும் சொல்லப் பட்டிருக்கிறது. "अमृतत्वं हि विन्दते" ("அம்ருதத்வம் ஹி விந்தெ")=அமிருதத்வத்தை அன்றோ யடைகிறான் என்பது ஹேது (காரணம் கூறும்) வசனமாகும். இதற்கு மாறினால் மிருத்யுப்ராப்தி யேற்படுவதாலென்க. அதாவது:— விஷயத்திலுண்டாகும் ஆத்மவிக்ஞானத்தில் மிருத்யுவானது (ஸம்ஸாரமானது) ப்ராப்தமாகவாவதால் ஆத்மவிக்ஞானமானது அமிருதத்துவத்துக்கு நிமித்தமாகவாகிறது என்பதுபற்றி "अमृतत्वं हि विन्दते" ("அம்ருதத்வம் ஹி விந்தெ")="அமிருதத்வத்

**किममृतत्वमुत्पाद्यते?। न। कथं तर्हि? आत्मना विन्दते—स्वेनैव नित्यात्मस्वभावेनामृतत्वं विन्दते नालम्बनपूर्वकम्। विन्दत इत्यात्मविज्ञानापेक्षम्। यदि हि विद्योत्पाद्यममृतत्वं स्यादनित्यं भवेत्कर्मकार्यवत्। अतो न विद्योत्पाद्यम्। यदि चात्मनैवामृतत्वं विन्दते किं पुनर्विद्यया क्रियत इति ?, उच्यते। अनात्मविज्ञानं निवर्तयन्ती सा तन्निवृत्त्या स्वाभाविकस्यामृतत्वस्य निमित्तमिति कल्प्यते। यत आह—वीर्यं विद्यया विन्दते। वीर्यं= सामर्थ्यमनात्माध्यारोपमायास्वान्तध्वान्तानभिभाव्यलक्षणं बलं, विद्यया-**

---

தையன்றோ அடைகிறான்" என்ற ஹேதுவசனமானது பொருத்தமுள்ளதாகவே யாகிறது.

சங்கை—ஆத்மக்ஞானத்தினால் அமிருதத்வமானது உண்டு பண்ணப்படுகின்றதோ எனின் ?

உத்தரம்—அவ்விதமில்லை. அவ்விதமாயின் எவ்விதமெனின்? **आत्मना विन्दते** (ஆத்மநா விந்ததே)=சொந்தமாகவேயுள்ள நித்யாத்ம ஸ்வபாவத்தினால் அமிருதத்வத்தை அடைகிறானே யொழிய ப்ராப்திபூர்வகமன்று. **विन्दते** (விந்ததே) என்றது அப்ராப்தத்வப்ரம நிவிருத்திக்கு வேண்டி சொல்லப்பட்டது. அமிருதத்வமானது வித்தையினாலுண்டுபண்ணப்படுவதாக வாகுமானால் கர்மமூலமேற்படும் பலன் போல அநித்யமாகவாகிவிடும். ஆகவே வித்தையினால் அது உத்பாத்யம் (உண்டுபண்ணப்படுவது) அன்று.

சங்கை—ஆத்மாவினாலேயே அமிருதத்வத்தை யடைவானாயின் வித்தையினாற் செய்யப்படுவது என்னை எனின்?

உத்தரம்—சொல்லப்படுகிறது. அனாத்மவிக்ஞானத்தை நிவிருத்திசெய்கிற அந்த வித்தையானது அந்த நிவிருத்திமூலம் ஸ்வாபாவிகமான அமிருதத்வத்துக்கு நிமித்தமெனக் கல்பிக்கப்படுகிறது. **वीर्यं विद्यया विन्दते** (வீர்யம் வித்யயா விந்ததே)=(வீரியத்தை வித்தையினால் அடைகிறான்) என்றல்லவோ சுருதி சொல்லுகிறது. வீர்யமாவது=அனாத்மாத்யாரோபத்தினாலும்=மனுஷ்யத்வம் முதலிய அபிமானத்தினாலும், மாயையினாலும்=பரமேஶ்வரனிடமுள்ள சக்தியினாலும், ஸ்வாந்தத்வாந்தத்தினாலும்=**स्वान्त** (ஸ்வாந்த)=தனக்கு அந்தத்தை=அவச்சேதத்தைத், தருகின்ற **ध्वान्त** (த்வாந்த)=ஜீவத்வநிமித்த

विन्दते। तच्च किं विशिष्टम्? अमृतम्=अविनाशि। अविद्याजं हि वीर्यं विनाशि। विद्यया अविद्याया बाध्यत्वात्। नतु विद्याया बाधकोऽस्तीति विद्याजममृतं वीर्यम्। अतो विद्या अमृतत्वे निमित्तमात्रं भवति। "नायमात्मा बलहीनेन लभ्यः" इतिचाथर्वणे। लोकेऽपि विद्याजमेव बलमभिभवति न शरीरादिसामर्थ्यम्। यथा हस्त्यादेः। अथ वा प्रतिबोधविदितं मतमिति सकृदेवाशेषविपरीत निरस्त संस्कारेण स्वप्नप्रतिबोधवद्यद्विदितं तदेव मतं ज्ञातं भवतीति। अथवा गुरूपदेशः प्रतिबोधः तेनवा विदितं

---

மான அக்ஞானத்தினுலும் தடைசெய்யமுடியாத பலமாம் (வலுவாம்) அதுவே ஸாமர்த்யமெனப்படும். அந்த ஸாமர்த்தியத்தை, வித்யையினுல் அடைகிறுன். அதுவும் எதுடன் கூடினது எனின்? **अमृतम्** (𑌅𑌮𑍃𑌤𑌮𑍍)=அவினுசியாகவாகும். அவித்யா மூலமுண்டாகும் வீர்யமோ வினுசியாக (அழியக்கூடியதாக) வாகிறது. வித்யையினுல் அவித்தை பாதிக்கப்படுகிறது. வித்யையைப் பாதிக்கக் கூடியதோ ஒன்றுமில்லை. ஆகவே வித்யையினுலுண்டாகும் வீரியம் அமிருதமாக வாகும். ஆனதுபற்றி வித்யையானது அமிருதத்வ விஷயத்தில் நிமித்தமாகமட்டுமே ஆகிறது. "இந்த ஆத்மா பலஹீனனுல் அடைய கூடியதன்று" என அதர்வவேதோபநிடதத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. உலகிலும் வித்யையினுலுண்டாகும் பலம் மற்றபலத்தை ஜயிக்கிறதேயொழிய சாரீராதி ஸாமார்த்தியமில்லை என்பது யானை முதலிய ஜீவர்களிடத்தில் காணவும்படுகிறது. அல்லது **प्रतिबोधविदितं मतम्** (𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑍋𑌧𑌵𑌿𑌦𑌿𑌤𑌂 𑌮𑌤𑌮𑍍) என்றதால் எல்லாவிதமான விபரீதஸம்ஸ்காரத்தையும் போக்கி ஸ்வப்பினத்திலுண்டாகும் அறிவுபோல ஒரேதடவை எது அறியப்படுமோ அதுவே **मतम्** (𑌮𑌤𑌮𑍍)=க்ஞாதமாக ஆகிறது என்றும் பொருள் கொள்ளலாம். அல்லது **प्रतिबोधः** (𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑍋𑌧𑌃) என்பதற்கு குருவினுபதேசமென்பது பொருள். அதனுலறியப்பட்டது **मतम्** (𑌮𑌤𑌮𑍍)=க்ஞாதமாகும் என்ருவது பொருள் கொள்ளலாம். இங்கு இவ்விரண்டு பொருளிலும் **प्रतिबोधम्** (𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑍋𑌧𑌮𑍍) என்ற சப்தத்தின் ப்ரயோகம் காணப்படுகிறது. **सुप्तप्रतिबुद्धः** (𑌸𑍁𑌪𑍍𑌤𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑍁𑌦𑍍𑌧𑌃)=(தூங்கி விழித்தவன்) என்றும் **गुरुणा प्रतिबोधितः** (

मतमिति, उभयत्र प्रतिबोधशब्दप्रयोगोऽस्ति "सुप्तप्रतिबुद्धः" "गुरुणा प्रतिबोधितः" इति । पूर्वं तु यथार्थम् ॥ ४ ॥

इह चेदवेदीत्............अमृता भवन्ति ॥५॥

இஹ செத³வேதீ³த்..............அம்ருதா ப⁴வந்தி ॥௫॥

इहचेदवेदीदित्यवश्यकर्तव्यतोक्तिर्विपर्यये विनाशश्रुतेः। इह=मनुष्यजन्मनि सति, अवश्यमात्मा वेदितव्य इत्येतद्विधीयते । कथम्? इहचेदवेदीत्=विदितवान्, अथ सत्यं परमार्थतत्त्वमस्त्यवाप्तम् । तस्य जन्म सफलमित्यभिप्रायः। नचेदिहावेदीत्=न विदितवान्वृथैव जन्म। अपि च, महती विनष्टिः = महान्विनाशो जन्ममरणप्रबन्धाविच्छेदप्राप्तिलक्षणस्स्याद्यतः, तस्मादवश्यं तद्विच्छेदाय ज्ञेय आत्मा। ज्ञानेन तु किं स्यादिति। उच्यते। भूतेषु भूतेषु चराचरेषु सर्वेष्वित्यर्थः। विचित्य=पृथङ्निष्कृष्यैकमात्मतत्त्वं

---

ருணா ப்ரதிபொ³தி⁴த:)=(குருவினுல் அறிவிக்கப்பட்டவன்) என்றுமான விடங்களில் प्रतिबोध (ப்ரதிபொ³த⁴)=சப்தப் பிரயோகம் காணப்படுகிறது. ஆனுல் முதலாவதாகச் சொன்னபொருளேதான் உண்மையானது. (4) (எ—று)

பாஷ்யம்.—இல்லாவிடில் (ஆத்மாவை அறியாவிடில்) ஶ்ருதி விநசத்தைக் கூறுவதால் इहचेदवेदीत् இஹசெத³வெதீ³த்) என்பது அவஶ்யம் செய்தே தீரவேண்டும் என்பதைச் சொல்லும் வசனமாகும். इह (இஹ)=மனுஷ்ய ஜன்மமிருக்கும்பொழுதே அவஶ்யமாக ஆத்மாவானது அறியத்தக்கது என்ற இது விதிக்கப்படுகிறது. எவ்விதமெனின்? கூறுவாம் इहचेदवेदीत् (இஹசெத³வெதீ³த்)=இப்பிறவியிலேயே அறிவானுயின் अथ (அத²)=அப்பொழுது सत्यम् (ஸத்யம்)=பரமார்த்த தத்துவமானது अस्ति (அஸ்தி)=அடையப்பட்டதாகவாகிறது. அவனது ஜன்மம் ஸபலமாகவாகிறது என்பது கருத்து. नचेदिहावेदीत् (நசெதி³ஹாவெதீ³த்) = இப்பிறவியிலேயே அறியாதிருந்தானுயின் ஜன்மம் வீணேயாகும். மேலும் महती विनष्टिः (மஹதீ விநஷ்டி:)=ஜனனமரண ப்ரவாஹத்தைத் தொடர்ந்து அடைதல் ரூபமான பெரிய நஷ்டமானது யாதுகாரணத்தாலேற்படுகிறதோ அதனுல் அதைவிலக்கவேண்டி ஆத்மாவானது அறியவேண்டுவதாகவே ஆகிறது. க்ஞானத்தினுல் வருவது என்னவெனின்?

संसारधर्मैरस्पृष्टमात्मभावेनोपलभ्येत्यर्थः। अनेकार्थत्वाद्धातूनाम्। न पुनश्चित्वेति संभवति विरोधात्। धीराः=धीमन्तो विवेकिनो विनिवृत्तबाह्यविषयाभिलाषाः, प्रेत्य=मृत्वा, अस्माल्लोकात्=शरीराद्यनात्मलक्षणाद्व्यावृत्तममत्वाहङ्काराः सन्त इत्यर्थः॥ अमृताः=अमरणधर्माणो नित्यविज्ञानामृतत्वस्वभावा एव भवन्ति ॥ ५ ॥

इति श्रीगोविन्दभगवत्पूज्यपादशिष्यस्य परमहंसपरिव्राजकाचार्यस्य श्रीमच्छङ्करभगवतः कृतौ केनोपनिषद्वाक्यभाष्ये द्वितीयः खण्डः समाप्तः ॥ २ ॥



---

சொல்லுகிறோம். भूतेषु भूतेषु (பூதேஷு பூதேஷு)=அசையுமசையாப் பொருள் யாவற்றுள்ளும் என்று பொருள். विचित्य (விசித்ய)=ஆத்மதத்துவத்தை ஒன்றாகவும், ஸம்ஸார தர்மங்களினால் தொடப்படாததாகவும் நிச்சயித்துக்கொண்டு,அதாவது: ப்ரத்யகாத்மாவாகவறிந்து என்பது பொருள். தாதுக்களுக்கு பல பொருளுண்டாகையால் विचित्य (விசித்ய)=என்றவிடத்திலுள்ள चि (சி) என்ற தாதுவுக்கு முற்கூறியபொருள் கொண்டது பொருத்தமானதேயாகும். चि (சி) என்ற தாதுவுக்கு அடுக்கி என்ற பொருள் முறணாகவாவதால் இங்கு ஸம்பவிக்கமாட்டாது. धीराः (தீராஃ)=தீமான்களாகவும், அதாவது: பகுத்தறிவுள்ளவர்களாகவும், வெளியிலுள்ள விஷயங்களில் ஆசையற்றவர்களாகவும் என்பது பொருள். प्रेत्य (ப்ரேத்ய)=மரித்து என்று பொருள். अस्माल्लोकात् (அஸ்மால்லோகாத்)=சரீராதிரூபமான அனாத்மபதார்த்தத்திலிருந்து அதாவது:—அவற்றினின்றும் விலகின மமதாபிமானமுள்ளவர்களாய்க் கொண்டு என்று பொருள். अमृताः (அம்ருதாஃ)=மரணதர்மமற்றவர்களாக நித்யமும் விக்ஞானஸ்வரூபமுமான அமிருதத்துவஸ்வபாவமுள்ளவர்களாக ஆகின்றனர் என்பது கருத்து. (5) (எ—று)

இவ்விதம் ஸ்ரீகோவிந்த பகவத்பூஜ்யபாத சிஷ்யரும், பரமஹம்ஸ பரிவ்ராஜகாசாரியருமான ஸ்ரீமத்சங்கரபகவத்பாதர் அவர்களின் கிருதியான கேனோபநிஷத்தின் வாக்யபாஷ்யத்தில் இரண்டாவது கண்டம் முற்றிற்று.

## अथ तृतीयः खण्डः ॥

**ब्रह्म ह देवेभ्यो..............महिमेति ॥ १ ॥**

ப்ரஹ்ம ஹ தேவேப்யோ.......... மஹிமேதி ॥ க ॥

ब्रह्म ह देवेभ्य इति ब्रह्मणो दुर्विज्ञेयतोक्तिर्यत्नाधिक्यार्था। समाप्ता ब्रह्मविद्या—यदधीनः पुरुषार्थः अत ऊर्ध्वमर्थवादेन ब्रह्मणो दुर्विज्ञेयतोच्यते, तद्विज्ञाने कथं नु नाम यत्नमधिकं कुर्यादिति। शमाद्यर्थोवाम्नायोऽभिमानशातनात्। शमादि वा ब्रह्मविद्यासाधनं विधित्सितं तदर्थोऽयमर्थवादाम्नायः। नहि शमादिसाधनरहितस्याभिमानरागद्वेषादियुक्तस्य ब्रह्मविज्ञाने सामर्थ्यमस्ति। व्यावृत्तबाह्यमिथ्याप्रत्ययग्राह्यत्वाद्ब्रह्मणः। यस्मात्वाग्न्यादीनां जयाभिमानं शातयति, ततश्च ब्रह्मविज्ञानं दर्शयत्यभिमानोप-

---

## மூன்றாவது கண்டம்.

பாஷ்யம்.—ब्रह्म ह देवेभ्यः (ப்ரஹ்ம ஹ தேவேப்ய:) என்றதால் ப்ரம்ஹம் அறிதற்கரிதானது என்று சொல்லப்படுகிறது. (ஏன்) அவ்விஷயத்தில் அதிகம் முயற்சி செய்யவேண்டியாம். புருஷார்த்தமானது எதன் மூலமேற்படுகிறதோ அந்த ப்ரம்ஹ வித்யையானது சொல்லி முடிந்துவிட்டது. இதற்கு மேலுள்ள அர்த்தவாதத்தினுல் ப்ரம்ஹம் அறிதற்கரிதானது என்பது சொல்லப்படுகிறது. அந்த ப்ரம்ஹவிக்ஞான விஷயத்தில் அதிகம் முயற்சியை எவ்விதமேனும் செய்யவேண்டுமென்பது கருத்து. அல்லது மேலுள்ள ஶ்ருதி பாகமானது ஶமாதி குணங்களையுபதேசிக்கிறது எனலாம். ஏன்? அஹங்காரத்தைப் போக்கியிருப்பதாலென்க. ப்ரம்ஹவித்யாஸாதனமாக ஶமாதிகள் விதிக்கவிரும்பப்பட்டன. அதற்குவேண்டியாவது மேலுள்ள அர்த்தவாதஶ்ருதி ப்ரவிருத்திக்கிறது எனலாம். ஶமாதி ஸாதனங்களற்றவனும், அஹங்காரம் ராகம் த்வேஷம் முதலியவற்றுடன் கூடினவனுமானவனுக்கு ப்ரம்ஹவிக்ஞானத்தில் ஸாமார்த்தியம் கிடையாதன்றோ? ப்ரம்ஹமானது பாஹ்யமான மித்யாக்ஞானமற்றவனுல் அறியக்கூடியதாக இருப்பதாலென்க. அக்னி முதலியவர்களின் ஜயாபிமானத்தைப் போக்கி அபிமானங்குறைந்தும் ப்ரம்ஹவிக்ஞானத்தை ஶ்ருதிகாண்பிப்பதே அதன் காரண

शाम्रे, तस्माच्छमादिसाधनविधानार्थोऽयमर्थवाद इत्यवसीयते । सगुणोपासनार्थो वा, अपोदितत्वात् । "नेदं यदिदमुपासते" इत्युपास्यत्वं ब्रह्मणोऽपोदितम् । अपोदितत्वादनुपास्यत्वे प्राप्ते तस्यैव ब्रह्मणः सगुणत्वेनाधिदैवमध्यात्मञ्चोपासनं विधातव्यमित्येवमर्थो वा । "इत्यधिदैवतम्" "तद्वनमित्युपासितव्यम्" इति हि वक्ष्यति । ब्रह्मेति परः लिङ्गात् । न ह्यन्यत्र परादीश्वरान्नित्यसर्वज्ञात्परिभूयाग्न्यादीन्स्तृणं वज्रीकर्तुं सामर्थ्यमस्ति । "तन्न शशाक दग्धुम्" इत्यादिलिङ्गाद्ब्रह्मशब्दवाच्य ईश्वर इत्यवसीयते । न ह्यन्यथाग्निस्तृणं दग्धुं नोत्सहते, वायुर्वाऽऽदातुम् । ईश्वरेच्छया तृणमपि वज्रीभवतीत्युपपद्यते ।

---

மாகும். ஆகவே சமாதிகளான வித்யாஸாதனத்தை விதிக்கவேண்டியே இந்த அர்த்தவாத மேற்பட்டது என நிஶ்சயிக்கப்படுகிறது. அல்லது ஸகுணப்ரம்ஹோபாஸனத்துக்கு வேண்டியாவது மேலுள்ள சுருதிபாகமேற்பட்டது எனலாம். அது முன்னர் மறுக்கப்பட்டிருப்பதாலென்க. அதாவது:—नेदं यदिदमुपासते (நேதம் யதிதமுபாஸதே) என்றதால் ப்ரம்ஹத்துக்கு உபாஸ்யத்துவமானது மறுக்கப்பட்டிருக்கிறது. மறுக்கப் பட்டதிலிருந்து உபாஸ்யத்வமானது ப்ராப்தமாகவாகாமல்போகவே அதேப்ரம்ஹத்துக்கு அதிதைவத்திலும், அத்யாத்மத்திலும் ஸகுணத்தன்மையுடன் உபாஸனம் விதிக்கப்படவேண்டும். இதற்குவேண்டியாவது மேலுள்ள பாகமேற்பட்டது எனலாம் "इत्यधिदैवतम्" ("இத்யதிதைவதம்") என்றும் "तद्वनमित्युपासितव्यम्" ("தத்வநமித்யுபாஸிதவ்யம்") என்றும் சொல்லப்போவதாலென்க. மூலத்திலுள்ள ब्रह्म (ப்ரஹ்ம) என்பது பரம் ப்ரம்ஹமாகும். அதற்குவேண்டிய லிங்கமும் (அறிகுறியும்) இருக்கிறது. நித்தியனும் ஸர்வக்ஞனுமான பரமேஶ்வரனைத் தவிர்த்து வேறிடத்தில் அக்கினியாதிகளை அவமதித்துத் துரும்பை வஜ்ஜிரமாக்கப் போதிய ஸாமர்த்தியம் கிடையாதன்றோ. "तन्न शशाक दग्धुम्" ("தந்ந ஶஶாக தக்தும்") "அதைப் பொசுக்க முடியவில்லை" என்றதாதி லிங்கம் காணப்படுவதாலென்க. ஆகவே ப்ரம்ஹ என்ற சப்தத்தால் சொல்லப்படுபவர் ஈஶ்வரன் என ஊறுதிப்படுகிறது. இல்லாவிடில் அக்கினி துரும்பைப் பொசுக்கமுடி

तत्सिद्धिर्जगतो नियतप्रवृत्तेः। श्रुतिस्मृतिप्रसिद्धिभिर्नित्यसर्वविज्ञान ईश्वरे सर्वात्मनि सर्वशक्तौ सिद्धेऽपि शास्त्रार्थनिश्चयार्थमुच्यते। तस्येश्वरस्य सद्भावसिद्धिः कुतो भवतीत्युच्यते। यदिदं जगद्देवगन्धर्वयक्षरक्षःपितृपिशाचादिलक्षणं, द्युवियत्पृथिव्यादित्यचन्द्रग्रहनक्षत्रविचित्रं विविध प्राण्युपभोगयोग्यस्थानसाधनसंबन्धि तदत्यन्तकुशलशिल्पिभिरपि दुर्निर्माणं देशकालनिमित्तानुरूपनियतप्रवृत्तिनिवृत्तिक्रमं एतद्भोक्तृकर्मविभागज्ञप्रयत्न पूर्वकं भवितुमर्हति। कार्यत्वे सति यथोक्तलक्षणत्वात्। गृहप्रासादरथशयनासनादिवत्, विपक्ष आत्मादिवत्। कर्मण एवेतिचेन्न। परतन्त्रस्य

---

யாதவனாகவும், வாயு துரும்பை எடுக்கமுடியாதவனாகவு மாகமாட்டானன்றோ. ஈப்வரனது இச்சையினால் துரும்பும் வஜ்ஜிரமாக வாகலாம் என்பது பொருத்தமானதேயாகும்.

அந்த ஈப்வரஸித்தியானது ஜகத்தினது நியதமான (ஒரே மாதிரியான) ப்ரவிருத்தியினால் ஏற்படுகிறது. சுருதி, ஸ்மிருதி, உலகப்ரஸித்தி இவற்றால் நித்யமான எல்லாவிக்ஞானமுமுள்ளவரும், ஸர்வாத்மாவும், ஸர்வசக்தனுமான ஈப்வரன் ஸித்தித்த போதிலுங் கூட சாஸ்திரார்த்தநிப்சயத்துக்குவேண்டி (யுக்தியினால் ஈப்வராஸ்தித்வமானது) சொல்லப்படுகிறது. அந்த ஈப்வரனுடைய, ஸத்பாவ ஸித்தியானது எதனால் கிடைக்கிறது? எனின்? சொல்லப்படுகிறது. தேவர், கந்தர்வர், யக்ஷர், ராக்ஷஸர், பிதிரர், பிசாசர் முதலியோரை லக்ஷணமாகவுடையதும், த்யுலோகம், ஆகாசம், பூமி, சூரியன், சந்திரன், நவக்கிரஹங்கள், நக்ஷத்திரங்கள் இவற்றால் விசித்திரமானதும், பற்பலப்ராணிகளின் உபபோகத்துக்கு யோக்கியமான ஸ்தானம் ஸாதனம், இவற்றின் சேர்க்கையை யுடையதுமான யாதொரு இந்த ஜகத்துண்டோ, அது மிக்கமிக்க ஸமர்த்தர்களான சில்பிகளினாலுங்கூட நிர்மணஞ்செய்யவியலாதாகவும், தேசம், காலம், நிமித்தம் இவற்றுக்கொத்தபடி நியதமான ப்ரவிருத்தி நிவிருத்தி இவற்றின் முறையையுடையதாகவும், இருப்பதால் இவற்றை அனுபவிக்கின்ற ஜீவர்களின் கர்மம், அதன் பலன் இவற்றை யறிந்தவரின் ப்ரயத்தினத்தை முன்னிட்டு உண்டாகவேண்டுவது அவப்யமாகிறது. ஏன்? காரியமாகவிருப்பதும், இதுவரை சொல்லப்பட்ட

निमित्तमात्रत्वात्। यदिदमुपभोगवैचित्र्यं प्राणिनां, तत्साधनवैचित्र्यं च, देशकालनिमित्तानुरूपनियतप्रवृत्तिनिवृत्तिक्रमं च तन्न नित्यसर्वज्ञकर्तृकम्। किन्तर्हि? कर्मण एव, तस्याचिन्त्यप्रभावत्वात्सर्वैश्च फलहेतुत्वाभ्युपगमात्। सति कर्मणः फलहेतुत्वे किमीश्वराधिककल्पनयेति न नित्यस्येश्वरस्य नित्यसर्वज्ञशक्तेः फलहेतुत्वं चेति चेत्। न कर्मण एव उपभोगवैचित्र्याद्युपपद्यते। कस्मात्? कर्तृतन्त्रत्वात् कर्मणः। चितिमत्प्रयत्ननिर्वृत्तं हि कर्म

---

லக்ஷணம் வாய்ந்ததாக விருப்பதுமே அதன் காரணமாகும். வீடு, மாடி, தேர், படுக்கை, ஆஸனம் முதலியதுபோலவாம். * ப்ரத்யுதாஹரணத்தில் ஆத்மாதிபோலவுமாம்.

சங்கை — கர்மாவினிடமிருந்தே இந்த பேதம் ஏற்படலாம் எனின்? அதுமுடியாது. ஏன்? பரதந்திரமான கர்மமானது நிமித்தமாகமட்டும் ஆகக்கூடியதாகவிருப்பதே அதன்காரணமாகும். அதாவது:—ப்ராணிகளுடைய சுகதுக்கானுபவ வைசித்ரியமும், அவற்றுக்குரிய ஸாதனவைசித்திரியமும், தேசம் காலம் நிமித்தம் இவற்றுக்கொத்தபடி முறைபிறழாத ப்ரவிருத்திநிவிருத்திக்கிரமமும் யாதுண்டோ அது நித்தியனும் ஸர்வக்ஞனுமான ஈப்ஶ்வரனால் செய்யப்படுவதன்று. பின்னை என்னையோவென்னில்? கர்மத்தினலே செய்யப்படுகிறது என்கிறோம். அக்கர்மம் நினைக்கமுடியாத ப்ரபாவமுள்ளதாக விருப்பதும், (ஈப்ஶ்வரனையொப்புகின்றவர் ஒப்பாதவர்) யாவராலும் அது ஒப்பப்பட்டிருப்பதுமே அதன் காரணமாகும். கர்மாவே பலனுக்குஹேதுவாக(காரணமாக)வாகுங்கால் அதிகமான ஈப்ஶ்வரகல்பனை எதற்கு?. எனவே நித்யனும், நித்யமான ஸர்வ

---

* பாஷ்யத்திலுள்ள विपक्षे आत्मादिवत् (விபக்ஷே ஆத்மாதிவத்) என்றதற்கு வ்யதிரேகதிருஷ்டாந்தத்தில் ஆத்மாதிகள் போல என்று பொருள் கொள்ளவேண்டும். அதாவது:—यत्, विभागज्ञप्रयत्नपूर्वकं न भवति तत् विशिष्टकार्यं न भवति। यथा आत्माकाशादि (யத், விபாகஜ்ஞப்ரயத்னபூர்வகம் ந பவதி தத் விஶிஷ்டகார்யம் ந பவதி। யதா ஆத்மாகாஶாதி) எது விபாகமறிந்தவறின் ப்ரயத்னபூர்வசமாகவுண்டாவதில்லையோ அது காரியவிசேஷமாக வாகமாட்டாது. ஆத்மா ஆகாசம் முதலியதுபோலவாம். என அன்வயவ்யதிரேகப்ரயேக மேற்படுகிறது என்பது பொருள் என்றும்.

**तत्प्रयत्नोपरमादुपरतं सद्देशान्तरे कालान्तरे वा नियतनिमित्तविशेषापेक्षं कर्तुः फलं जनयिष्यतीति न युक्तमनपेक्ष्यान्यदात्मनः प्रयोक्तृ। कर्तैव फलकाले प्रयोक्तेति चेत् मयानिर्वर्तितोऽसि त्वां प्रयोक्ष्ये फलाय यदात्मानुरूपं फलमिति, न। देशकालनिमित्तविशेषानभिज्ञत्वात्। यदि हि कर्ता देशविशेषाभिज्ञः सन् स्वातन्त्र्येण कर्म नियुंज्यात्ततोऽनिष्टफलस्याप्रयोक्ता**

---

ஞானம் சக்தி இவையுமுள்ளவருமான ஈஸ்வரனுக்கு பலன்தருந் தன்மை கிடையாது என்கிறோம் எனின்?

உத்தரம்.—கர்மாவினிடமிருந்தே ஸுகதுக்கானுபவ வைசித்திரியம் முதலியன ஏற்படமாட்டா. ஏன்? கர்மமானது கர்த்தாவை யாஶ்ரயித்து ஸ்வரூபலாபத்தையடையவேண்டுவதாகவாவதாலென்க. சேதனுவானுடைய ப்ரயத்தினத்தினால் செய்து முடிக்கப்படும் (ஸ்வரூப லாபத்தையடையும்) கர்மமானது அவனது ப்ரயத்தினம் ஓயவே தானும் ஓய்ந்ததாக (ஸ்வரூப லாபத்தையடையாததாக) வாகி தன்னை ப்ரயோகிப்பவனை (தனது ஸ்வரூபலாபத்தை யுண்டுபண்ணுபவனை) எதிர்பாராது காலாந்தரத்திலோ, தேசாந்தரத்திலோ கர்த்தாவுக்கு நியதமான நிமித்த விசேஷத்தையபேக்ஷித்து உண்டாகக் கூடியபலனை உண்டாக்கக்கூடும் என்பது பொருந்தாது என்கிறோம்.

சங்கை—கர்த்தாவே பலகாலத்தில் ப்ரயோக்தாவாகவாகிறான். அதாவது:—ஹே கர்மமே! நீ என்னால் உண்டுபண்ணப்பட்டிருக்கிறாய். உனக்குத் தகுந்ததான பலன் எதுவோ அந்தப் பலனுக்கு வேண்டி உன்னை நான் ஏவுகிறேன் என்று கர்த்தாவெண்ணுகிறான் என்கிறோம் எனின்?

உத்தரம்.—அது பொருந்தாது. ஏன்? கர்த்தாவானவன் தேசவிசேஷம், காலவிசேஷம், நிமித்தவிசேஷம் இவற்றையறியாதவனாகவிருப்பதால் என்க. அதாவது:—கர்த்தாவானவன் தேசவிசேஷத்தை யறிந்தவனாயிருந்துகொண்டு ஸ்வதந்திரமாகவே கர்மாவை (பலனுக்குவேண்டி) ஏவுகிறான் என்றால், அப்பொழுது இவனுக்குப் பிடித்தமில்லாத பலன் விஷயத்தில் கர்மாவை ஒருபொழுதும் ஏவவே மாட்டான். நிமித்தமில்லாமலே அந்தக் கர்மமானது கர்த்தாவினுடைய இச்சையில்லாமல் ஆத்மாவில் ஸம்பந்தப்பட்டதாய்க்கொண்டு

स्यात्। नच निर्निमित्तं, तदनिच्छयात्मसमवेतं तद्धर्मवद्विक्रियाति कर्म। नचात्मकृतमकर्तृसमवेतमयस्कान्तमणिवदाकृष्ट भवति, प्रधानकर्तृसमवेतत्वात्कर्मणः। भूताश्रयमितिचेत्, न, साधनत्वात्। कर्तृक्रियायाः साधनभूतानि भूतानि क्रियाकालेऽनुभूतव्यापाराणि समाप्तौ च हलादिवत्कर्त्रा परित्यक्तानि न फलं कालान्तरे कर्तुमुत्सहन्ते। नहि हलं क्षेत्रात् व्रीहीन् गृहं प्रवेशयति। भूतकर्मणोश्चाचेतनत्वात्स्वतः प्रवृत्त्यनुपपत्तिः। वायुव-

---

அவனது தோலானதுபோல விகாரத்தையடையவும் மாட்டாது. மேலும் தன்னால் செய்யப்பட்ட கர்மமானது கர்த்தாவினிடத்தில் ஸம்பந்தத்தையடையாததாய்க்கொண்டு அயஸ்காந்த மணியானது போலப் பலனை இழுத்துத் தரக்கூடியதாகவுமாகாது. கர்மமானது ப்ரதான கர்த்தாவினிடத்தில் ஸம்பந்தமுள்ளதாகவிருப்பதே அதன் காரணம்.

சங்கை—கர்மங்கள் ஆகாசாதி பூதங்களை யாச்ரயித்திருக்கிறது என்கிறோம் எனின்?

உத்தரம்—அது பொருந்தாது. பூதங்கள் ஸாதனங்களாகமட்டுமிருப்பதே அதன் காரணமாகும். அதாவது:—கர்த்தாவினால் செய்யப்படும் கர்மங்களுக்கு ஸாதனங்களாகவான ஆகாசாதி பூதங்கள் கர்மஞ்செய்யுங்காலத்தில் அனுபவிக்கப்பட்டத் தமது வேலையையுடையனவாகவாகி கர்மங்களின் முடிவில் கலப்பை முதலியன போன்று கர்த்தாவினால் விடப்பட்டனவாய் வேறு காலத்தில் பலனைத்தரத் திறனுள்ளனவாகவாகமாட்டா. உலகில் கலப்பையானது வயலிலிருந்து நெல்லை வீட்டுக்குக் கொண்டுவந்து சேர்ப்பதில்லையன்றோ?. மேலும் ஆகாசாதி பூதங்களும், கர்மமும், இயற்கையில் அசேதனங்களானதுபற்றி அவற்றுக்கு ஸ்வயமே ப்ரவிருத்தியானது ஏற்படவும் மாட்டாது.

சங்கை—பூத வகுப்பிற்சேர்ந்த வாயுவுக்குப்போல ப்ரவிருத்தி ஏற்படலாமென்கிறோம் எனின்?

உத்தரம்—அவ்விதமில்லை. சேதனனின்றி அது ஸித்திக்காது என்கிறோம். அதாவது:—சைதன்னிய ஸம்பந்தமற்ற வாயுவுக்கு

दिति चेत्, न, असिद्धत्वात्। नहि वायोरचितिमतः स्वतः प्रवृत्तिस्सिद्धा। रथादिष्वदर्शनात्।

शास्त्रात्कर्मण एवेति चेत्, शास्त्रं हि क्रियातः फलसिद्धिमाह नेश्वरादेः "स्वर्गकामो यजेत" इत्यादि। नच प्रमाणाधिगतत्वादानर्थक्यं युक्तम्। नचेश्वरास्तित्वे प्रमाणान्तरमस्तीति चेत्। न। दृष्टन्यायहानानुपपत्तेः। क्रिया हि द्विविधा–दृष्टफला, अदृष्टफला च। दृष्टफलापि द्विविधा–अनन्तरफला, आगामिफला च। अनन्तरफला गतिभुजिलक्षणा। काला-

---

இயற்கையாகவே ப்ரவிருத்தியானது ஸித்திக்கமாட்டாதன்றோ' தேர் முதலியவற்றில் அவ்விதம் காணப்படாதிருப்பதாலென்க.

சங்கை—சாஸ்திரம் சொல்லியிருப்பதைக்கொண்டு அசேதனமாயினும் கர்மத்துக்கே ஸ்வத:ப்ரவிருத்தி யேற்படலாமென்கிறோம்' அதாவது:—स्वर्गकामो यजेत (ஸ்வ_ம-ககாமொ யஜெத) ஸ்வர்க்கத்தில் ஆசையுள்ளவன் யாகத்தைச்செய்யவேண்டும் என்பதாய் சாஸ்திரம் கர்மத்திலிருந்து பலஸித்தியைச் சொல்லுகிறதே யொழிய ஈச்வரனிடமிருந்துண்டாவதாகச் சொல்லவில்லை. முக்கியப்ரமாணமான சாஸ்திரத்தாலறியப்பட்டபடியால் அதைப்பயனற்றதாகச் சொல்லுவதுபொருந்தவும் மாட்டாது. ஈச்வரன் இருக்கும் விஷயத்தில் வேறுப்ரமாணமும் கிடையாது என்கிறோம் எனின்?

உத்தரம்—இதுபொருந்தாது. ஏன்? அனுபவத்தில் காணப்படும் நியாயத்தை (யுக்தியை) விட்டுவிடுவது பொருந்தாததே அதன் காரணமாகும். பொதுவாய்க் கர்மமானது திருஷ்டமான பலனுள்ளதென்றும், அதிருஷ்டமான பலனுள்ளதென்றும் இரண்டுவகைப்படும். அவற்றுள் திருஷ்டபலனுள்ள கர்மமோ—அடுத்துவரும் பலனுள்ளதென்றும், பின்னர் வெகுகாலஞ்சென்றுவரும் பலனுள்ளதென்றும் இரண்டுவகைப்படும். அடுத்துவரும் பலனுள்ள கர்மமாவது—நடை, ஆஹாரம் முதலியனவாம். வெகுகாலஞ் சென்றுவரும் பலனுள்ளகர்மமாவது—கிருஷி (பயிரிடுதல்) ப்ரபுவைச் சேவித்தல் முதலியனவாம். அவற்றுள் அடுத்து வரும்பலனுள்ள கர்மமானது தனது பலனுண்டானதுமே அழிந்துவிடக்கூடியதாக

न्तरफला च कृषिसेवादिलक्षणा। तत्रानन्तरफला फलापवर्गिण्येव। कालान्तरफलातूत्पन्नप्रध्वंसिनी। 'आत्मसेव्याद्यधीनं हि कृषिसेवादेः फलं यतः, नचोभयन्यायव्यतिरेकेण स्वतन्त्रं कर्म ततो वा फलं दृष्टम्। तथा च कर्मफलप्राप्तौ न दृष्टन्यायहानमुपपद्यते। तस्माच्छान्ते यागादिकर्मणि नित्यः कर्तृकर्मफलविभागज्ञ ईश्वरः सेव्यादिवद्यागाद्यनुरूपफलदातोपपद्यते। सचात्मभूतः सर्वस्य सर्वक्रियाफलप्रत्ययसाक्षी नित्यविज्ञानस्वभावः संसारधर्मैरसंस्पृष्टः। श्रुतेश्च। "न लिप्यते लोकदुःखेन बाह्यः" "जरां मृत्युमत्येति" "विजरो विमृत्युः" "सत्यकामस्सत्यसङ्कल्पः" "एष सर्वे-

---

விருக்கிறது. வெகுகாலஞ்சென்றுவரும் பலனுள்ள கர்மமோ தானுண்டானதும் அழியக்கூடியதாக விருக்கிறது. கிருஷி, ஸேவை இவற்றின் மூலம் வரும் பலனோ தன்னால் ஸேவிக்கப்படுபவரை யாஸ்ரயித்து உண்டாகவேண்டியதாக விருக்கிறது. ஆகவே இது வரை சொல்லிய இரண்டுவித நியாயத்தைவிட வேறாக ஸ்வதந்திரமான கர்மமோ, அதன்மூலம் வரும் பலனோ காணப்பட்டதில்லை. ஆகவே கர்மத்தின் பலப்ராப்திவிஷயத்தில் திருஷ்டமான (அனுபவத்தில் காணப்பட்ட) யுக்தியை விட்டுவிடுவது பொருந்தாது. ஆனதுபற்றி, யாகம் முதலியகர்மமானது செய்துமுடிந்ததும் நித்யனும், கர்த்தா, கர்மம், பலன், இவற்றின் விபாகத்தை யறிந்தவனுமான ஈஸ்வரன், ப்ரபுமுதலியவர் போல யாகாதிகளுக்குத் தகுந்தபலனைத் தருகிறார் என்பதுதான் பொருந்துகிறது. அந்த ஈஸ்வரனும் ஸர்வத்துக்கும் ஆத்மபூதராகவும், ஸர்வகர்மங்கள், அதன் பலன், அவற்றைப் பற்றியஞானம் இவற்றுக்கு ஸாக்ஷியாகவும், நித்யமான விக்ஞானஸ்வபாவராகவும் ஸம்ஸாரதர்மங்களினால் தொடப்படாதவராகவும் இருக்கிறார். "லோகத்துக்கு வெளிப்பட்டவர், ஆனதுபற்றி லோக துக்கத்துடன் ஸம்பந்தப்படாதவர்" என்றும், "ஜரையையும் (மூப்பையும்) மரணத்தையும் கடந்தவர்" என்றும், "ஜரையில்லாதவர் மரணமில்லாதவர்" என்றும், "ஸத்தியமான காமமுள்ளவர், ஸத்தியமான ஸங்கல்பமுள்ளவர்" என்றும், "இந்த ஸர்வேஸ்வரன் புண்ணியகர்மத்தைச் செய்யச் செய்கிறார்" என்றும், மற்றவன் (ஈஸ்வரன்) கர்மபலானுபவமின்றி ஸாக்ஷியாக

श्वरः पुण्यं कर्म कारयति" "अनश्नन्योऽभिचाकशीति" "एतस्य वाक्षरस्य प्रशासने" इत्याद्या असंसारिण एकस्यात्मनो नित्यमुक्तस्य सिद्धौ श्रुतयः॥ स्मृतयश्च सहस्रशो विद्यन्ते। नचार्थवादाश्शक्यन्ते कल्पयितुम्। अनन्ययोगित्वे सति विज्ञानोत्पादकत्वात्। नचोत्पन्नं विज्ञानं बाध्यते। अप्रतिषेधाच्च। नचेश्वरो नास्तीति निषेधोऽस्ति। प्राप्त्यभावादितिचेन्नो-क्तत्वात्। न हिंस्यादितिवत्प्राप्त्यभावात्प्रतिषेधो नारभ्यत इतिचेत्, न। ईश्वरसद्भावे न्यायस्योक्तत्वात्॥

अथवा—अप्रतिषेधादिति—कर्मणः फलदाने ईश्वरकालादीनां न प्रतिषेधोऽस्ति। नच निमित्तान्तरनिरपेक्षं केवलेन कर्त्रैव प्रयुक्तं फलदं

---

விருக்கிறான்" என்றும், "இந்த அக்ஷரத்தினுடைய (பரமாத்மாவினுடைய) ப்ரஶாஸன நிமித்தமாகவே" என்றுமாதிய ஶ்ருதிகள் அஸம்ஸாரியும், ஏகனும், நித்யமுக்தனுமான ஆத்மாவினுடைய ஸித்தியில் ப்ரமாணங்களாகின்றன. ஆயிரக்கணக்கான ஸ்ம்ருதிகளுமிருக்கின்றன. இவற்றை அர்த்தவாதங்களாகக் கல்பிக்கவும் முடியாது. ஏன்? வேறு ஒன்றுடனும் சேராதிருப்பதுடன் தனித்த க்ஞானத்தையுண்டுபண்ணுகின்றனவாக விருப்பதாலென்க. இந்த வாக்கியத்தினாலுண்டான க்ஞானம் பாதிக்கப்படுவதுமில்லை. अप्रति-षेधाच्च (அப்ரதிஷேதாச்ச)=மறுப்பும் காணவில்லை. அதாவது:—ஈஶ்வரனில்லையென்று ஓரிடத்திலும் சாஸ்திரத்தில் மறுக்கப்படவுமில்லை என்றும்.

சங்கை—ப்ராப்தியில்லாததால் தான் ப்ரதிஷேதம் (மறுப்பு) சொல்லப்படவில்லை என்கிறோம் எனின்? न हिंस्यात् सर्वा भूतानि(ந ஹிம்ஸ்யாத் ஸர்வா பூதாநி)=எல்லாப்ராணிகளையும் ஹிம்ஸிக்கலாகாது என்பதுபோல ப்ராப்தியில்லாததால் தான் மறுக்கப்படவில்லை என்கிறோம் எனின்?

உத்தரம்.—ஈஶ்வரனிருப்பதாக யுக்திசொல்லப்பட்டுமிருக்கிறது. அல்லது—अप्रतिषेधाच्च (அப்ரதிஷேதாச்ச) என்றதற்கு வேறுவிதமாகப் பொருள்சொல்லுகிறோம். அதாவது:—கர்மத்துக்குப் பலந்தரும் விஷயத்தில் ஈஶ்வரன் காலம் முதலியவற்றுக்குப்

दृष्टम् । न च विनष्टोऽपि यागः कालान्तरे फलदो भवति । सेव्यबुद्धिवत्से वकेन सर्वज्ञेश्वरबुद्धौ तु संस्कृतायां यागादिकर्मणा विनष्टेऽपि कर्मणि सेव्यादिवेश्वरात्फलं कर्तुर्भवतीति युक्तम् । न तु पुनः पदार्था वाक्यशते-नापि देशान्तरे कालान्तरे वा स्वंस्वं स्वभावं जहति । नहि देशकालान्त-रेषु चाग्निरनुष्णो भवति । एवं कर्मणोऽपि कालान्तरे फलं द्विप्रकारमेवो-पलभ्यते । बीजक्षेत्रसंस्कारपरिरक्षाविज्ञानवत्कर्त्रपेक्षफलं कृष्यादि, विज्ञान-वत्सेव्यबुद्धिसंस्कारापेक्षफलं च सेवादि । यागादेः कर्मणस्तथाऽविज्ञानव-त्कर्त्रपेक्षफलत्वानुपपत्तौ कालान्तरफलत्वात्कर्मदेशकालनिमित्तविपाकवि-

---

ரதிஷேதம் கிடையாது என்கிறோம். வேறுநிமித்தத்தை எதிர் பாராமல் கேவல்கர்த்தாவினால் மட்டும் செய்யப்பட்ட கர்மமானது பலன்தருவதாக நம்மால் காணப்படவுமில்லை. நாசத்தையடைந்த யாகமும் காலாந்தரத்தில் பலன்தருவதாகவு மாகாது. ஸேவகனால் (வேலைக்காரனால்) ஸேவ்யனுடைய (ப்ரபுவினுடைய) புத்தியானது போல், யாகாதிகளினால் ஸர்வக்ஞனான ஈச்வரனுடைய புத்தியா னது ஸம்ஸ்கரிக்க (திருப்திசெய்விக்க) ப்பட்டதும் யாகாதிகர்ம மானது நஷ்டமாயினுங்கூட, ப்ரபுவினிடமிருந்துபோல ஈச்வரனிட மிருந்து கர்த்தாவுக்கு (கர்மஞ்செய்பவர்க்கு) பலன் வருகிறது என் பது பொருந்துகிறது. பதார்த்தங்கள்=பொருள்கள், நூற்றுக்கணக் கான வாக்கியமிருந்தபோதிலுங்கூட வேறுதேசத்திலோ வேறுகாலத் திலோ தத்தமது ஸ்வபாவத்தை விட்டுவிடாவன்றோ. தேசாந்தரத்தி லோ காலாந்தரத்திலோ நெருப்பு சூடில்லாததாக வாகாதன்றோ? இவ்விதம் பார்க்கும்பொழுது கர்மத்துக்கும் காலாந்தரத்தில் வரும் பலன் இரண்டுவிதமுள்ளதாகவே காணப்படுகிறது. க்ருஷிமுதலிய கர்மமானது விதை, க்ஷேத்திரம் (வயல்) இவற்றை ஸம்ஸ்கரித்தல் (பக்குவப்படுத்தல்) பரிரக்ஷித்தல் (காப்பாற்றல்) இவற்றைப்பற்றிய க்ஞானமுள்ளவனான கர்த்தாவை யபேக்ஷித்துண்டாகும் பலனுள்ள தாகவும், ஸேவாதிரூபகர்மமானது அதைப்பற்றிய அறிவுள்ளவ னான ஸேவ்ய (ப்ரபுவு) னுடைய புத்தியிலுண்டாகும் ஸம்ஸ்காரத் தை யபேக்ஷித்துண்டாகின்ற பலனுள்ளதாகவும் காணப்படுகிறது. யாகாதியான கர்மத்துக்கோ அத்தகைய க்ஞானமற்றகர்த்தாவை

भागज्ञबुद्धिसंस्कारापेक्षं फलं भवितुमर्हति, सेवादिकर्मानुरूपफलज्ञसेव्यबुद्धिसंस्कारापेक्षफलस्येव। तस्मात्सिद्धः सर्वज्ञ ईश्वरः सर्वजन्तुबुद्धिकर्मफलविभागसाक्षी सर्वभूतान्तरात्मा। "यत्साक्षादपरोक्षात्" "य आत्मा सर्वान्तरः" इति श्रुतेः। स एवाचात्मा जन्तूनाम्—"नान्योऽतोऽस्ति द्रष्टा श्रोता मन्ता विज्ञाता" "नान्यदतोस्ति विज्ञातृ" इत्याद्यात्मान्तरप्रतिषेधश्रुतेः, "तत्वमसि" इति चात्मत्वोपदेशात्। नहि मृत्पिण्डः काञ्चनात्मत्वेनोपदिश्यते॥

---

யபேக்ஷித்துண்டாகும் பலனுள்ளதன்மை பொருந்தாது, காலாந்தர பலனுள்ளதாகவிருத்தல் சொல்லவேண்டிவருவதால் கர்மம், தேசம், அதன்காலம், அதன் நிமித்தம் அதன்பலன் இவற்றின் பிரிவை யறிந்தவனுடைய புத்தியிலுண்டாகும் ஸம்ஸ்காரத்தை யபேக்ஷித்துப் பலனுண்டாவதுதான் பொருந்தக்கூடியதாக வாகிறது. ஸேவைமுதலிய கர்மத்துக்குத் தகுந்த பலனை யறிந்தப்ரபுவினுடைய புத்தியிலுண்டான ஸம்ஸ்காரத்தை யபேக்ஷித்துண்டாகும் பலனுக்குப் போலவாம். ஆகவே எல்லாப்ராணிகளுடையவும் க்ஞானம், கர்மம் அதற்குரிய பலன் இவற்றின் பிரிவுக்கு ஸாக்ஷியும், ஸர்வபூதங்களுக்கும் அந்தராத்மாவும், ஸர்வக்ஞனுமான ஈஸ்வரன் இருப்பதாக ஸித்திக்கிறது. "எது (ப்ரம்ஹம்) ஸாக்ஷாத்தாயும்=கௌணமில்லாததாயும், அபரோக்ஷமாயும்=அவ்யவஹிதமாயும், உள்ளதோ, யாதொரு ஆத்மாஸர்வாந்தரனோ" என்று சுருதியு மிருக்கிறது. அவரேதான் இங்கு ஸர்வஜந்துக்களுக்கும் ஆத்மா=(ப்ரத்யகாத்மா) வாகிறார். "த்ரஷ்டாவும், ஸ்ரோதாவும், மந்தாவும், விக்ஞாதாவும் எவனோ, அவன் இவரை (பரமாத்மாவை) க்காட்டிலும் வேறன்று" என்றும், "விக்ஞானத்துக்கு ஸாக்ஷியான ஸ்வரூபம் இதை (ப்ரம்ஹத்தை) காட்டிலும் வேறன்று" என்றுமாக வேறு ஆத்மாவை மறுக்கும் சுருதியிருப்பதும், "அதாக நீ இருக்கிறாய்" என ஆத்மத்வோபதேசஞ் செய்திருப்பதுமே அதன் காரணமாகும். மண்ணுருண்டையானது பொன்னுருவமுள்ளதென வுபதேசிக்கப் படுவதல்லவன்றோ?

சங்கை—க்ஞானம், சக்தி, கர்மம், உபாஸ்யத்வம், உபாஸகத்துவம், சுத்தத்வம், அசுத்தத்வம், முக்தத்வம், அமுக்தத்துவம் முத

ज्ञानशक्तिकर्मोपास्योपासकशुद्धाशुद्धमुक्तामुक्तभेदादात्मभेद एवेति चेन्न । भेददृष्ट्यपवादात् । यदुक्तं संसारिण ईश्वरादनन्या इति, तन्न । किन्तर्हि? भेद एव संसार्यात्मनाम् । कस्मात्? लक्षणभेदादश्वमहिषवत् । कथं लक्षणभेद इति । उच्यते । ईश्वरस्य तावन्नित्यं सर्वविषयं ज्ञानम् सवितृप्रकाशवत्, तद्विपरीतं संसारिणां खद्योतस्येव । तथैव शक्तिभेदोऽपि नित्या सर्वविषया चेश्वरशक्तिः, विपरीतेतरस्य । कर्म च चित्स्वरूपात्मसत्तामात्रनिमित्तमीश्वरस्य औष्ण्यस्वरूपद्रव्यसत्तामात्रनिमित्तदहनकर्मवत्, राजायस्कान्तप्रकाशकर्मवच्च स्वात्माविक्रियारूपम् । विपरीतमितरस्य । उपासीतेति

---

ஷயபேதம் (ஜீவேஸ்வரர்களுக்குக்) காணப்படுவதால் ஆத்மபேதம் (ஜீவாத்ம பரமாத்மபேதம்) சொல்லத்தான் வேண்டும் என்கிறோம் என்னின்? அவ்விதம் சொல்லமுடியாதென்கிறோம். ஏன்? பேதக் ஞானத்தை மறுத்திருப்பதாலென்றும். அதாவது:— *ஈஸ்வரனைக் காட்டிலும் ஸம்ஸாரிகள் வேறுபட்டவர்களன்று என யாதொன்று சொல்லப்பட்டதோ, அது பொருந்தாது. பின்னையோவெனில் ஸம்ஸாரி ஆத்மாக்களுக்கும் ஈஸ்வரனுக்கும் பேதமேதான் சொல்ல வேண்டும். ஏன்? குதிரைக்கும் எருமைக்கும் போல லக்ஷண பேதம் காணப் படுவதாலென்க. எவ்விதலக்ஷணபேதமெனின்? சொல்லுகிறோம். ஈஸ்வரனுக்கோ வெனில் ஸூரியனுடைய ப்ரகாசப்போல எல்லாவிஷயங்களையும் பற்றிய ச்ஞானமானது நித்யமாக விருக்கிறது. ஸம்ஸாரிகளுக்கோ மின்னுமின்னுப் பூச்சிக்குப் போல அதற்குநேர்மாறாக விருக்கிறது. அவ்விதமே சக்திபேதமும் இருக் கிறது. ஈஸ்வரனுடைய சக்தியோ எல்லாவிஷயங்களையும் பற்றியதாகவும் நித்தியமாகவு மிருக்கிறது. ஜீவனுக்கோ இதற்குமாறாக விருக்கிறது. ஈஸ்வரனுடையகர்மாவோ ஔஷ்ண்யஸ்வரூபமான த்ரவ்யத்தின் ஸத்தைக்கு(ஸ்வரூபலாபத்துக்கு)மட்டும் நிமித்தமான தஹநரூபமான கர்மம் போல, சித்ஸ்வரூபமான தனதுஸத்தைக்கு (ஸ்வரூபலாபத்துக்கு) மட்டும் நிமித்தமாகவும், அரசன் அயஸ்காந்தம் இவற்றின் ப்ரகாசரூபமான கர்மம்போல, சொந்தஸ்வரூபத்தில் எவ்விதவிகாரமுமற்றதாகவும் இருக்கிறது. ஜீவனுடைய கர்மமோ

---

*இதுமுதலுள்ள பாஷ்யத்தில் சங்காபாகம் விரித்துக்கூறப்படுகிறது.

